# சீவக சிந்தாமணி

— வரலாற்றுச் சுருக்கம் —

ஆசிரியர்
வ. வேணுகோபாலன்



உரிமை பதிவு] கலைமகள் காரியாலயம் [விலை ரூ. 3/-
மயிலாப்பூர் : : சென்னை-4

# முன்னுரை

தமிழ் மொழிக்கு - அதன் வளர்ச்சிக்குப் பெரும் பணி புரிந்தவர்கள் ஜைன மதத்தினர்; அவ்வகையான பெரும் பணிக்கு எடுத்துக் காட்டாக என்றும் மறையாத பெருமையுடன் விளங்குவது சீவக சிந்தாமணி! தமிழிலக்கியங்களில் குன்றின் மேல் இட்ட விளக்காக ஒளிவிடுகின்ற அரிய காவியம் இது.

இந்தக் காவியம், இரண்டாயிரத்து எழுநூறு செய்யுட்களைக் கொண்டது.* இதன் ஆசிரியர் தோலா நாவின் மேலோராகிய கவிஞர் பெருமான் திருத்தக்க தேவரவர்கள். கவித் திறமையிலே இளங்கோவுக்கு ஈடானவர்.

வடமொழியில் இலக்கியக் கடலின் கரைகண்ட, வான்மீக முனிவரைப்போல், தமிழில் தன்னிகர் இல்லாத கவிஞர்பெருமான் திருத்தக்கதேவர் என்று கூறுவர் அறிஞர்; அதுவே முடிந்த முடிபு.

தமிழிலே 'காவிய மரபு'க்கு ஓர் ஒளி விளக்காக (கலங்கரை விளக்கம்) ஒரு நூல் உண்டென்றால், அது சீவக சிந்தாமணியே. மகா கவியான கம்பரும் இவர் வழி வந்த கவிஞர் எனலாம். இத்தகைய சிறந்ததொரு 'தமிழ்க் காவியத்தை' இயற்றிய திருத்தக்க தேவரைத் தமிழ்த்தாய்க்கு அணிசெய்த கவிஞர்களில், தலையாயவர் என்பது, மறுக்க முடியாதது.

மொழி வளர்ச்சிக்கும் அதன் பெருமைக்கும் உரியதான இலக்கியத்தை உருவாக்கியவர் எந்தச் சமயத்தவரானால் என்ன? இலக்கியத்துக்கு முன் - கவியழகுக்கு முன் சமயம் குறுக்கிட முடியாதன்றோ? சமயம் கடந்த தனிப் பெருமை கொண்டது தமிழ் இலக்கியம் என்பதற்குச் சீவக சிந்தாமணியே ஓர் எடுத்துக்காட்டு; ஜைன மதத்தின் அடிப்படைக் கொள்கைகளிலே வீறுடன் எழுந்த காவியமான இது, தமிழ் மக்களின் உள்ளங்

* மற்றச் செய்யுட்கள் கந்தியார் என்ற புலவர் ஒருவரால் பாடிச் சேர்க்கப்பட்டனவாகக் கருத இடமுண்டு என்று குறிப்பிட்டுள்ளார்கள் டாக்டர் உயர்திரு ஐயரவர்கள்.

கலைக் கொள்ளை கொண்டது. தமிழ்க் கவிஞர்களையும் கவர்ந்த தனிப்பெருமை யுடையது.

தமிழ் இலக்கியத்தில் பெருங்காப்பியங்கள் என்று கூறப் பெறுவன ஐந்து. அவை சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி என்பன. இவற்றில் முதலாவதாக வைத்து எண்ணப்படும் பெருங்காப்பியம் சீவக சிந்தாமணி.

இந்தக் காவியத்தில் ஒரு சிறந்த காவிய நாயகன் சீவகன். காவிய நாயகனைப்பற்றியும் காவியச் சிறப்புக்களைப் பற்றியும் சீர்தூக்கி நோக்குங்கால் கவிஞர் பெருமான் திருத்தக்க தேவருக்கு நிகராக வேறு எந்தக் கவிஞரும் அழகு செய்ய முடியாது என்பதே உண்மையாகும்.

ஜைனமத சம்பந்தமான விஷயங்கள் இந்தக் காவியத்தில் எங்கும் நிறைந்திருந்தாலும், 'தமிழிலக்கியம்' என்ற பெரு நோக்குடன் பார்க்கும்போது, மகத்தான நீதிகளைக் கூறும் வரலாறுடைய காவியம் இது; 'இதற்கு நிகர் இதுவே' என்பது தான் உண்மை. தமிழிலக்கியப் பண்பை எடுத்துக்காட்டும் உயர்ந்த காவியப் பெருமையைக்கொண்டது இது. சிலப்பதிகாரத் திற்கும், மணிமேகலைக்கும் உள்ள பெருமை இதற்கும் உண்டு என்பதில் ஐயமில்லை. ஒரு வேறுபாடு என்னவென்றால், அவை, தமிழ் நாட்டு வரலாறுகளை அடிப்படையாகக் கொண்டவை. இதுவோ, இராமாயணத்தைப்போல் ஜைனர்களால் போற்றப் படும் புனித காவியம். ஆகவே இம் மூன்றும் சமயம் கடந்த பெருமைகொண்டவை என்பதில் ஒரே தகுதியுடையன. குண்டலகேசியும், வளையாபதியையும் போல் அழிவுறாமல் இன்றும் தமிழ் மொழிக்கு அணி செய்து 'சிந்தாமணி' யென்று புகழுடன் விளங்குவதே இதற்குரிய தனிப் பெருமையாகும்.

இத்தகைய மகத்தான பெருங் காவியத்திற்கு, முத்தமிழ் முற்றக்கற்ற செந்நாப் புலவராகிய நச்சினார்க்கினியர் உரை செய்துள்ளார்கள் எனின், இதன் சிறப்புக்கு வேறு என்ன உரைகள் வேண்டும்? அவர்கள் செய்த உரைவிளக்கம் இல்லை யென்றால் இந்நூலின் முழுப் பெருமையை உணர்வது மிகவும் அரிது. அன்னார் பெருமை, சரித்திரம் அறிந்ததே.

நச்சினார்க்கினியரைப்போல் முத்தமிழ்த்துறை முற்றத் தேர்ந்த தமிழ் முனிவரும், ஆசிரியர் பெருந்தகையுமாகிய, மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களே இந் நூலை முதலில் வெளியிட்ட பெருமையுடையோராவர். உயர் திரு ஐயரவர்கள் இந்தக் காவியத்தை நான்காம் பதிப்பாக வெளியிடும் போது உடனிருந்து பதிப்பு வேலைகளைக் கவனிக்கும் பேறு எனக்குக் கிட்டியது. உயர்திரு ஐயரவர்களின் ஆசியும் அன்புமே, என்னை இம் முயற்சியில் ஈடுபடச் செய்தன. அன்று என் உள்ளத்தில் பதிந்த சீவக சிந்தாமணியே இத்தகைய கதை வடிவத்திலே வெளி வரலாயிற்று.

மூல காவியத்தைப் பின்பற்றி அதன் கருத்துக்களைத் தழுவி எழுதிய கதைச் சுருக்கமே இது; என்றாலும் வரலாறு சம்பந்த மான நிகழ்ச்சிகள் யாவும் இதில் அடங்கியுள்ளன. காவியத்தில் கண்ட ஜைன மதத்தைப் பற்றிய இன்றியமையாத கருத்துக் களும் இதில் இடம் பெற்றுள்ளன. எனினும் இதில் குறைகள் பல உண்டு. குணமே கொள்வது தமிழ் அறிஞர் பண்பாகும்.

முதன் முறையாக இந்தக் கதைச் சுருக்கம் 'சுதேச மித்திரன்' வாரப் பதிப்பில் வெளியாயிற்று. இன்று, அதுவே புத்தக வடிவில் 'கலைமகள்' வெளியீடாக வந்துள்ளது. கலைமகளுக்கு என் மனமார்ந்த நன்றி.

திருவிடைமருதூர்
7—2—56

இங்ஙனம்,
வை. வேணுகோபாலன்.

# பொருளடக்கம்

பக்கம்

# சீவக சிந்தாமணி

## 1

## மூன்று கனவுகள்

ஏமாங்கத நாட்டின் தலைநகராகிய இராசமா புரத்தில், சச்சந்த ராஜன் தனக்குரிய சிங்காசனத்தில் வெற்றிப் புகழோடு வீற்றிருந்தான். மங்கையர் இரு புறமும் கவரி வீச, மாகதர் துதிபாட எத்தாளிகள் புகழ்ந்த பெருமிதத்தோடு அமர்ந்திருந்த அரசன் முகத்தை ஆவலுடன் நோக்கியிருந்தனர் சபையோர். கட்டியங்காரன், நிமித்திகன், உருத்திரதத்தன் தரும தத்தன் முதலிய மந்திரியரும் அசதன் முதலிய சேனா பதியரும் சச்சந்தன் பார்வைக்கு இலக்காக வீரம் ததும்பும் நோக்கோடு அமர்ந்திருந்தனர். புலவரும் பல சிற்றரசரும் ஒருபுறம் அமர்ந்திருந்தனர்.

அளவற்ற அதிகாரிகள் நிறைந்த ராஜ சபை அலையடங்கிய கடல்போல் ஒலியவிந்திருந்தது. தனது உள்ளத்தே பெருங்காரியம் ஒன்றைப்பற்றி ஆலோசித்திருந்தான் சச்சந்தன். அவன் முகம் கவலையால் வேறு பாட்டுடன் காணப்பட்டது. அரசனுடைய மனக் கவலையை மாற்றுவதற்கு, அவன் உள்ளக் குறிப்பை யறிந்து, மந்திரியரெல்லாரும் எழுந்து நின்றனர். அம் மந்திரியரில் கட்டியங்காரன் என்பவனைத் தனியே அழைத்தான் அரசன். அரசனிடத்து நெருங்கிப் பழகுபவனும், மந்திரியர் குழுவில் அனுபவம் மிக்கவனும் முதன்

மந்திரியுமான கட்டியங்காரன் அரசனுடன் சென்றான். ராஜசபைக்கு அப்பாலுள்ள மண்டபத்தில் இருவரும் மறைந்திருந்து பேசலாயினர்.

"நேற்றிரவு நான் முடிவு செய்த ஒரு விஷயத்தை உன்னிடம் கூற விரும்புகிறேன்; அது விஷயத்தில் நீ என் கட்டளையை ஏற்று அதன்படி நடக்க வேண்டும்" என்றான் சச்சந்தன்.

"அரசே, தங்கள் கட்டளை எத்தகையதாயினும் அதன்படி நடக்கச் சிறிதும் தடையில்லை" என்றான் கட்டியங்காரன்.

"நேற்று நான் அந்தப்புரம் சென்றபோது, என்றும் இல்லாத புதிய மாறுதலை யடைந்தது என் மனம்; அதற்குக் காரணங்கள், என் மனைவியின் பேரழகும், அவள் கூறிய காதல் மொழியுமேயாகும். தக்க பருவத்தையுடைய அவள் மேனியழகிலே என் மனம் நிலைத்து விட்டது. அவளுடைய விழி வலையிலே மயங்கி விட்டேன்; இனி அவளுடன் சிறிது காலம் அந்தப்புரத்திலேயே மகிழ்ந்திருக்க முடிவு செய்துவிட்டேன்; நான் மீண்டும் ஏற்றுக்கொள்ளும் வரையில் என் அரசாட்சியை உன்னிடம் ஒப்படைக்கிறேன்; ஏற்றுக் கொள். முடியும், குடையுமன்றி மற்ற உரிமையாவும் தந்தேன்" என்றான் சச்சந்தன்.

அதைக் கேட்ட கட்டியங்காரன் தன் மனத்தெழுந்த அடங்கா மகிழ்ச்சியை ஆற்றலால் அடக்கி, "ராஜாதிராஜ! என்ன காரியம் செய்யத் துணிந்தீர்கள். இப்பாரத்தை என்மேல் சுமத்தல், யானையின்மேல் இட்ட தவிசை நாயின்மேல் இடுவதைப் போன்றது; ஆதலால் இது தகாது; கட்டளை மறுத்துப் பேசியதற்கு மன்னிக்க வேண்டும்" என்றான். சிறிது கோபத்தோடு, "கட்டியங்

கார! மறுத்துக் கூறுதல் தகுதியன்று; என் ஆணை; ஏற்றுக்கொள்'' என்று கூறினான் சச்சந்தன்.

"அரசே! தமது ஆணைக்கு அஞ்சிக் காவலைக் கைக் கொண்டேன். தாம் தேவியிடத்து இன்பம் நுகர்ந்து நீடூழி வாழ்க. யான் நீதி வழுவாது காவல் செய்து வருவேன்; ஆணை'' என்று கூறிக் காவலைக் கைக்கொள்ளு தற்கு வெளியேறினான் கட்டியங்காரன்.

தான் செய்த முடிவை, ராஜசபையில் அரசன் மொழிந்தான். இடி விழுந்த நாகம்போல் யாவரும் மனம் கலங்கினர்.

"அரசே! இது என்ன நீதி? அரசாட்சிக்குத் தகுதி யில்லாதவனும், அபாயத்திற்கு இடமானவனும் ஆகிய கட்டியங்காரனிடம் ராஜ்யத்தை ஒப்புவிப்பது தகுதி யல்ல; இதனால் பல தீங்குகள் விளையும்; பூமியும் செல்வமும் தம்மைவிட்டு நீங்கும்; தீர ஆராய்ந்து முடிவு செய்யவேண்டிய காரியம் இது'' என்றான் நிமித்திகன் என்ற மந்திரி.

"நிமித்திகா! அவசரப்பட்டுப் பேசாதே! எனக்கு உயிர் போன்ற நண்பன் கட்டியங்காரனே. பல போர் களில் பெரிய வெற்றிகளை எனக்குக் கொடுத்துள்ளான். அவனுக்கு இது தகுதியென்றே நான் செய்தேன்; அவன் எனக்குத் தீங்கு செய்யான்'' என்றான் சச்சந்தன்.

"அரசே! நான் உண்மையைக் கூறினேன். அமைச்சர் சொல் வழி நடந்தால் நன்மையே யன்றி தீங்கு விளையாது; மங்கையரிடத்துக் கொண்ட காதலால் தீமையடைந்தோர் பலர். உலகம் பழிக்கும் பிரமன் திலோத்தமையை விரும்பி, தன் நிலைகெட்டுப் பழிப்பிற்கு இடமானான்; உமையொருபங்கன் தன் பாகத்தே பார்வதியைப் பெற்று பழிப்பிற்கிடமானான்.

கண்ணன் கோபியரால் பழிப்பிற்கு இடமானன். புத்தன் ஆண் கழுதையின் காமத்தைத் தணிக்கப் பெண் கழுதையாய்ச் சென்று பழிக்கப்பட்டான். பாண்டவரைவரும் ஒருத்தியை மணந்து பழிக்கப்பட்டனர். ஆதலால் மங்கையர் மோகத்தால் மதியை இழக்கலாகாது" என்று நிமித்திகன் இடித்துக் கூறினன்.

அதற்கு மனம் சிறிதும் இணங்காத மன்னனை, உருத்திரதத்தன் என்ற மந்திரி நோக்கி, "மன்னவா! யான் ஒன்றும் சொல்லேன்; அறிவுமிக்க நிமித்திகன் மொழியை நீ கேளாமையால், நிலமும் செல்வமும் உன்னை விட்டு அகலும்; உன் மனைவிக்குத் தீங்கு செய்தவனும் ஆவாய்" என்று கூறினன்.

வேந்தன் இரண்டு மந்திரிகளுடைய மொழியையும் ஆராய்ந்தான். விசயையின் அழகிலே மனத்தைப் பறிகொடுத்த அரசனுக்கு நன்மை புலப்படவில்லை.

"மந்திரிகளே, செல்வமும், இன்பமும், வாழ்நாளும் நான் பிறந்தபோதே விதிக்கப்பட்டுள்ளன; நீங்கள் சொல்லவேண்டாம்" என்றான் சச்சந்தன்.

"அரசே, இடித்துக் கூறுதல் அமைச்சர்க்குரியதாகலின் கூறினேன்; பிழை பொறுக்க. நீ நீண்ட நாள் மனைவியின் இன்பத்தைப் பெறுக. யான் நின் தவறு காணமல் துறவு பூண்டு வெளிச் செல்கிறேன்" என்று கூறி, நிமித்திகன் உருத்திரதத்தனுடன் வெளியில் சென்றான். அரசன் சபையைக் கலைத்து, அந்தப்புரம் சென்றான். சபையோர் மனக் கலக்கத்துடன் வெளிச் சென்றனர்.

* * *

இயற்கை யழகாலும், அலங்கார சோலையாலும் இணையில்லாது விளங்கிய விசயையோடு காதல்

இன்பத்தே மூழ்கியிருந்தான் சச்சந்தன். பகலென்றும் இரவென்றும் நினைவின்றி அந்தப் புரத்தே அகமகிழ்வோடு வாழ்ந்தான். பல நாட்களாயின, பல மாதங்களாயின; வருஷங்களுமாயின; ஆயினும் சச்சந்தனும் விசயையும் பிரிந்தாரில்லை. காம மென்னும் காலத்தீ அவர்களது அறிவை அழித்து விட்டது.

ஒரு நாள் இரவின் பிற்பகல்; பொழுது விடியுந் தருணம். மன்னனின் மாபெரும் தேவியான விசயை மயங்கி உறங்கும்போது மூன்று கனவுகள் கண்டாள். அறிவு மயங்கியிருந்த அம்மங்கை, கனவுகளைக் கண்டதும் உள்ளம் பதறி எழுந்தாள். அரசனை எழுப்பாமல் தனியே எழுந்து நடந்தாள். இருளிலே, சிலம்பும், மேகலையும் சப்திக்க, உடல் நடுங்க ஓடி, கண் கழுவி, மலர் கொண்டு அருக தேவனை வணங்கி, கனவு தீங்கு தாராதிருக்குமாறு வேண்டினாள். பிற்பகலில் கண்ட கனவாதலின் விசயையின் மனத்தில் கவலை சூடிகொண்டது.

அருகனை வணங்கிய பின்பும் விசயையின் மனம் தெளியவில்லை. 'மூன்று கனவுகளின் பயன் என்ன? அதனால் விளைவது நன்மையோ, தீமையோ? அரசனுக்கு அறிவிப்பதா? கொடிய கனவாயிருக்குமானால் முன்னமே தெரிந்து கொள்வதுதான் நன்மையாகும்' என்று எண்ணமிட்டாள். கனவின் பயனறிவதில் ஆவல் ஒருபுறம்; அச்சம் ஒருபுறம். இவ்வித மனக் கலக்கத்தோடு அரசன் துயில் நீங்கி எழும் தருணம், அவனருகில் சென்று அமர்ந்தாள்.

அரசன், விசயையின் முகத்தைப் பார்த்ததும், ஏதோ அவள் கவலைப்படுவதாக அறிந்தான்.

"என் அன்பே! ஏன் மனக் கலக்கம்? உள்ளத்திலிருப் பதை வெளிப்படையாய்க் கூறிவிடு; உன் மனம் கவலைப் படுவது எனக்கு வருத்தத்தைக் கொடுக்கிறது" என்றான்.

"ஆர்ய குலோத்தம! ஓர் அசோகமரம், தன் பூங் கொத்துக்கள் தளிரோடு கருகி விழ, தானும் முறிந்து கீழே சாய்ந்தது; அதனடியில் ஒரு முளை தோன்றியது. அம்முளை எட்டுப் பூமாலைகளையுடைய ஒரு முடிக்கு ஆதாரமாய் நட்டுவைத்தாற்போல, விரைவில் வளர்ந் தோங்கியது; இவை யான் கண்ட மூன்று கனவுகள்" என்று நாத் தழு தழுக்கக் கூறினாள்.

பல்கலையும் வல்ல சச்சந்தன் கனவின் பயனை அறிந் தான்; உடனே புன்முறுவலோடு, கிரீடம் தாங்கிய தன் தலையை இருமுறை அசைத்து,

"கண்ணே! கனவின் பயன் நன்மையேதான்; கேள்; முடி, நின் மகன்: எட்டுப் பூமாலைகள் உன் மகனின் மனைவியர் எண்மர்; முளை, உன் மகனுடைய ஆக்கம்; கவலைப்படாதே" என்றான்.

"குருகுலாதிப! அசோகு முறிந்ததன் பயன் என்ன?" என்றாள் விசயை.

"எனக்கு ஒரு துன்பம் வந்தது: அதுவும் சிறிதே; கவலை கொள்ளாதே" என்றான் சச்சந்தன்.

துன்பம் என்ற சொல்லைக் கேட்டதும் விசயை மூர்ச் சித்துக் கீழே வீழ்ந்தாள்; அரசன், அருகனை வணங்கி, விசயையை எடுத்தணைத்து, "பெண்ணே, கனவு உண்மைப் பயன் தராது; பெண்புத்திதான் என்னே! வருந்தாதே; நீ வருந்துவது எனக்குத் துன்பத்தைத் தரும்" என்று கூறித் தேற்றினான்.

அரசன் தன் காதல் மொழியாலும், வேறு பேச்சுக் களாலும், விசயையின் மனத்தில் கனவின் நினைவே இல்லாதவாறு சில நாட்களில் செய்து விட்டான்.

விசயையும் கனவு மறந்து அரசனோடு இன்பத்தே மதி மயங்கியிருந்தாள்.

அரசன் தன் மனத்தில் ஒன்றைச் சிந்தித்து, ஒரு நாள் தன் நண்பனை தச்சனைக்கொண்டு ஆகாயத்தில் பறக்கும் மயிற்பொறி ஒன்றைச் செய்வித்தான். அதில், பொழுது போக்காக விசயையை ஏற்றி அம்மயிற் பொறியைச் செலுத்தும் விதத்தைக் கற்பித்து வந்தான். விசயையும் மயிற்பொறியை ஊர்ந்து செலுத்துவதையே பொழுது போக்காகக் கொண்டாள்.

## 2

# மன்னவன் பகையான தெய்வம்

கட்டியங்காரன் அரசாட்சியைப் பெற்ற அன்றே தனது அதிகாரம் முழுவதையும் செலுத்தலானான். நிமித்திகன் ஒழிந்த மற்றைய மந்திரிகளைத் தன் கீழ் ஏவல் செய்யுமாறு செய்வித்தான். சேனாதிபதியான அசலனைத் தன் கீழ்ப்படியும்படிச் செய்தான். சேனையின் தலைமைப் பதவியைத் தானே ஏற்றுத் தன் கட்டளைப்படி, படைகளைப் பலவாறு திருத்தியமைத் தான். அதிகார வன்மை பெற்ற கட்டியங்காரனை மீற எவரும் துணிந்திலர்.

ஒரு நாள் காலையில் கட்டியங்காரன் சபை கூட்டினான். மந்திரியர், சேனாதிபதிகள், மற்றைய பிரதானிகள்

சிற்றரசர் முதலியோர் சபையில் வந்தமர்ந்தனர். கட்டியங்காரனுக்கு அருகில் அவன் மைத்துனனான மதனன் என்னும் மகாவீரன் வந்தமர்ந்தான்.

"சபையோர்களே! நான் என்ன சொல்வேன்; அதை நினைக்கவும் சொல்லவும் என் மனம் நடுங்குகிறது. நேற்றிரவு நான் தனித்து உறங்குகையில், என்னை ஒரு பூதம் தட்டி எழுப்பியது; நான் திடுக்கிட்டெழுந்து யாரென்று பார்த்துப் பயந்தேன். 'நீ யார்? எங்கு வந்தாய்?' என்று கேட்டேன். அப்பூதம் சற்றும் அஞ்சாமல் என்னைப் பயமுறுத்தி, 'யான் மன்னவன் பகையானதொரு மாதெய்வம்! நீ அவனை நாளைக்குள் கொன்றிட வேண்டும்; இன்றேல் உன் உயிரை யான் உண்டிடுவேன்' என்று கூறி மறைந்தது; ஆனால் இப்பொழுதும் அப்பூதத்தின் உருவம் என் கண்முன் நின்று பயமுறுத்துகின்றது. யான் என்ன செய்வதென்பதற்கு நீங்களே ஒரு வழி கூறவேண்டும்" என்று இடிபோல் கர்ச்சித்துக் கூறினான் கட்டியங்காரன். அவன் குரலிலே பயங்கரமும், கொலைத் தன்மையும் கூத்தாடின.

இடிவிழுந்தாற் போன்ற அச்சொற்களைக் கேட்ட சபையோர் மனம் மருண்டு மறுமொழி ஒன்றும் கூறுதற்கு இயலாதவராய்த் தலை குனிந்திருந்தனர்.

அக்கொடுஞ் சொற்களைக் கேட்டு மனம் பொறுக்காத தருமதத்தன் என்னும் இளைய மந்திரி, மிக்க கோபாவேசமுடையவனாய்க் கட்டியங்காரன் முன்பு போய் நின்றான்.

"கட்டியங்கார! யான் கூறுவதைக் கேள்; அரசன் விசயையிடத்துள்ள காதலால் அந்தப்புரமே கதியாக வாழ்கின்றான். அறிவில் மிக்க நிமித்திகன் மந்திரிப் பதவியை நீத்துத் துறவு பூண்டு வாழ்கிறான். ஆதலால்

உனக்குப் புத்தி கூறுபவர் இங்கு எவரும் இல்லை. தன்னையாக்கிய தரணி மன்னனைக் கொலை சூழ்தல் தருமமன்று. அவ்விதம் செய்தால் உன் குலமும் செல்வமும் உன்னோடு அழிவைப் பெறும்; அரசன் என்னும் தெய்வம் கோபமுறின் உன்னை அழித்துவிடும். உனக்குப் புத்தி கூறிய தெய்வத்தைக் காட்டிலும் என் அரசனாகிய தெய்வம் பெரிதும் வல்லமையுடையது. உன் தெய்வம் சிறப்புடையதல்ல'' என்று கூறினான் தருமதத்தன்.

கட்டியங்காரனின் மைத்துனனான மதனன், அச் சொற்களைக் கேட்டு மனம் பொறுதவனாய்க் கண்களில் தீப் பொறி பறக்கக் கோபம் கொண்டு, மார்பு முன்னிட எழுந்து நின்று பற்களை நெறு நெறெனக் கடித்தான்.

"அடா! தருமதத்தா, யார் முன்பு இவ்விதம் துணிந்து பேசினாய்? போதும்; உன் புத்திமதியை நிறுத்து. பகைவர் தலையை வாளினால் சிதற அடித்து வஞ்சினம் முடிப்பேனேயன்றி இப்பொழுது ஒன்றும் வாயினாற் பேசேன்; உன் போன்றவர் வாயாற் பேசி யுத்தமென்றால் வாளெடுக்கக் கைகூசுவர்'' என்று மதனன் முழங்கினான்.

இதுகாறும் பேசாதிருந்த கட்டியங்காரன் மேனியில் முத்துப் போலும் வியர்வை துளித்தன. அவனுடைய இரு புருவங்கள் நேரே வளைந்து நின்றன. தனது இரண்டு கைகளையும் கடகம் உடைந்து சிந்தும்படி ஒன்றோடொன்று தட்டிச் சிங்கம் போன்று கர்ச்சித்தான்.

"தருமதத்தா! நீ கூறிய கொடுஞ் சொற்களைப் பொறுப்பவர் என்னையொழிய வேறு யார் உள்ளனர்? ஆயினும் யான் முடிவாகக் கூறுவதைக் கேள்; மன்னவர் மன்னவனான சச்சந்தனைச் சுற்றத்தோடு, விண்ணுலகிற்கு இறைவனாக்கி, இம்மண்ணுலகைப் பொன் விளையும்படி

யான் ஆட்சி செய்வேன்” என்று கூறியவாறு கட்டியங் காரன் கல கலவென்று சிரிக்கலானான்.

“கட்டியங்கார! நீ கூறிய விதமே பூமியெல்லாம் பொன் விளையக் காவல் செய்; அரசனுக்கும் கொலை அமைவதாக! கொற்றவனைக் கொல்லும் கூற்றம் நிலமடந்தையாய்க் கொல்லும்! நிதியாய்க் கொல்லும்! தான் செய்த பிழைப்பாய்க் கொல்லும்! யான் செல்வேன்; நீ கோபம் கொள்ளவேண்டாம்” என்று கூறி, தருமதத்தன் வெளியே சென்றான்.

சபையிலுள்ள யாவரும் கட்டியங்காரனுடைய ஆணைக்கு அஞ்சிப் பேசாமல் சபையை விட்டு வருத்தத் துடன் அகன்றனர். கட்டியங்காரனும் மதனனும் உவகையோடு தனியிடம் சென்றனர். நகர மாந்தர்க்குக் கட்டியங்காரனுடைய வஞ்சனைச் செய்கை தெரியலா யிற்று; ஆயினும் கட்டியங்காரனுடைய கொடுமைக்கு அடங்கியிருந்தனர்.

மறுதினமே, கட்டியங்காரனும் மதனனுமாக ஆலோ சித்து, சச்சந்தனை அவன் சுற்றத்தோடும் கொன்று விடுவதென்றே முடிவு செய்தனர். உடனே, சச்சந்த னுடைய காமக் கிழத்தியரான பல மனைவியரையும் உற வினரையும் மதனன் சிறை செய்வித்தான். சச்சந்த னுடைய நண்பர்கள் பலரைக் காவலில் வைத்தான். சச்சந்தனைக் கொல்வதற்குச் சம்மதித்த பலருக்கும் பல உயர்ந்த பதவிகளைக் கட்டியங்காரன் அளித்துச் சிறப்புச் செய்தான். சச்சந்தன் தப்பிப் போகாவண்ணம், பெருஞ்சேனையைத் திரட்டி அணிவகுத்து நகரைச் சுற்றிலும் வளைத்துக் கொள்ளச் செய்தான்.

கட்டியங்காரன் இவ்வாறு அரசனைக் கொல்வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்வதை, சச்சந்தனிடம்

அன்புள்ள ஒற்றுளான ஒருவன், அவனுக்கு அறிவிக்க எண்ணி, அந்தப்புரத்திற்கு, மறைவான வழியே ஓடோடியும் வந்தான். அவன் உடல் நடுங்கியது; கால்கள் பூமியில் பதியாமல் பதறினான்; அரசனைக் கண்டதும் சொல்ல நாவெழவில்லை; அவன் இரு கண்களிலும் நீர் ததும்பியது.

"அரசே, பாவியான கட்டியங்காரன், தங்களைக் கொல்ல வருகிறான்; ஓடித் தப்புங்கள்; ஓடித் தப்புங்கள்" என்று கூறித் திரும்பிப் பாராமல் ஓடி மறைந்தான்.

அச்சொற்களைக் கேட்ட மன்னவன் காமத்தால் மதி மயங்கி, தன் நிலைமையை அறியாதவனாய், "மந்திரி, நிமித்திகா! எங்கே என் யானை? எங்கே என் குதிரை? வாள் எங்கே? சேனாபதி, சேனையைத் திரட்டு! காவலாளிகளே கதவடையுங்கள்!" என்று பிதற்றிய விதம் ஓடலானான். அதைக்கண்ட விசயை அலறிக் கொண்டே ஓடி அரசனை வழி மறித்து நிறுத்தினாள். அப்பொழுது தான் சச்சந்தன் தான், ஆதரவற்ற நிலையிலுள்ளதை உணர்ந்தான். அவன் மனம் அளவுகடந்து சுழன்றது. அவன் மனத்தில் தோன்றிய ஏக்கம், கோபமாக மாறியது. சுவர் செவிடுபடும்படியாக உரக்கச் சிரித்துத் தன் உடைவாளை உறையினின்றும் எடுத்து உயரத் தூக்கினான். கருப்பம் கொண்ட தன் மனைவி அலறுவதைக் கண்ணால் கண்டு அவன் மனம் மீண்டும் சோகத்தில் ஆழ்ந்தது.

"விசயை, நீ அன்று கண்ட மூன்று கனவுகளில் முதற்கனவின் பயன் இதுதான்; ஆனால் கவலைப் படாதே; நீ கருப்ப முற்றிருக்கிறாய்; தாமதம் செய்யாதே: இதோ இந்த மயிற் பொறியில் ஏறி ஆகாய மார்க்கமாக வேறு ஊரில் போய்த் தங்கிவிடு; நம் புத்திரன்

பொருட்டாகவே நீ உயிர் வாழவேண்டும்'' என்று கண்ணீர் விட்டான்.

அதைக் கேட்ட விசயை மன்னவன் பாதத்தில் வீழ்ந்து புரண்டாள். "ஐயோ! முதற் கனவின் பயனிதுவோ! விதியே! தெய்வமே! உனக்குக் கண்ணில்லையா? மன்னவனைப் பறிகொடுக்கப் பாவியேனை ஏன் படைத்தாய்? எங்ஙனம் பிரிந்து செல்வேன்'' என்று புலம்பினாள்.

"விசயை! இனியும் தாமதம் தகாது; ஆபத்து நெருங்கி விட்டது; புத்திரனைக் காப்பாற்று; யாருக்கு யார் துணை?'' என்று கூறி விசயையைத் தூக்கி மயிற் பொறியில் வைத்து இயக்கி மேலே எழுப்பிவிட்டான். இருதலைக் கொள்ளியிடத்து எறும்பு போல விசயை மயிற் பொறியில் துடித்து மயங்கிக் கிடந்தாள்.

மயிற் பொறி மறையும் வரையில் சச்சந்தன் வானை நோக்கியிருந்தான்; அப்பொழுதே திடீரென யுத்த பேரிகை முழங்கியது. அந்தப்புர வாயில்கள் உடைக்கப் பட்டு சேனைகள் சச்சந்தனை நெருங்கின. சேனையின் ஆரவாரம் சச்சந்தனைப் பிரமிக்கச் செய்தது. சச்சந்தன் உருவிய வாளுடன், பிரளயகால ருத்திரன் போல் தனியே நின்று போர் செய்தான். கடல் தனக்குக் காவலான கரையை உடைப்பதுபோல், சேனையும் தனக் கரசனான சச்சந்தனைத் தாக்கியது. இருளில் மின் தோன்றியது; கட்டியங்காரன் யானை மீது வெளிப்பட் டான். சச்சந்தன் தன் வாளாயுதத்தை வீசி அவன் யானையின் துதிக்கையை வெட்டி யெறிந்தான். கட்டியங் காரன் தன் கையிலிருந்த வேலை சச்சந்தன் மார்பிற் பதிய எறிந்தான். வேந்தன் மார்பு பிளந்து, குருதி சோர வீர சுவர்க்கமடைந்தான். உடனே சய பேரிகை

முழங்கியது. கட்டியங்காரன் ஏமாங்கத நாட்டிற்குத் தனி இறைவனானான். சச்சந்தன் பிரிவால் நகர மாந்தர் துக்கக் கடலில் மூழ்கினர். நாடு ஒளியிழந்தது. கட்டியங்காரன் முடி சூடிய மன்னவனானான்.

# மயானத்தில் பிறந்த குழந்தை

வானத்தே மயிற் பொறி சுழன்று கொண்டிருந்தது. பொறியினுள்ளே இருந்த விசயை புலம்பிக் கொண்டிருந்தாள். கீழே வெற்றிமுரசின் முழக்கத்தை அவள் செவியாற் கேட்டதும், மன்னவன் இறந்தானென்று மூர்ச்சையானாள். மயிற் பொறி நீண்டநேரம் வானத்தே சுழன்றமையால் திரிகை ஓய்ந்து இயக்குவாரின்றி கீழே மெல்ல இறங்கலாயிற்று. இராசமாபுரத்தின் எல்லைப் புறத்தில், பிணங்கள் குவிந்து கழுகுகள் உறங்கும் நிலையுடைய சுடுகாட்டில் நடுநிசிப் பொழுதில் மயிற் பொறி இறங்கியது.

மூர்ச்சையடைந்திருந்த விசயை மயிற்பொறி கீழே இறங்கியதை உணர்ந்து விழித்துக்கொண்டாள். நள்ளிரவாதலின் தான் இறங்கியுள்ள இடம் இன்னதென்றறிந்து கொள்ளவில்லை. பிணப்புகையின் நாற்றத்தையும் பிணங்கள் முட்டு முட்டாக எரிவதையும் கண்டு மயானம் என்றறிந்தாள்.

“என் செய்வேன் தெய்வமே! மன்னவனைப் பறி கொடுத்து மயானத்தே வீழ்ந்தேனே!” என்றாற்றிப் புலம்பினாள். பிணங்களையும், எலும்புக் குவியல்களையும்

கணாற காண மனம் நடுங்கினள். பூரண கருப்பமுடைய விசயை, மயிற் பொறியில், அழுதவண்ணம் பாலசூரியன் போலும் ஒரு புத்திரனைப் பெற்றாள். புதல்வனைக் கண்ணாற் கண்டதும் விசயையின் துக்கம் மறைந்தது; சச்சந்தனையே பெற்றெடுத்தாற் போன்ற பெருமகிழ்ச்சி கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள். இரண்டாம் கனவு பலித்ததை எண்ணி மகிழ்ந்தாள். அடுத்த கணத்திலே அவ்வுவகை மாறி விசயையின் மனத்தே அடக்கமுடியாத துக்கம் தோன்றியது.

“ஆ, மகனே, நகர் முழுவதும் வாத்தியம் முழங்கித் திருவிழாக் கொண்டாடிப் பொன் மழை சொரியப் பிறத்தற்குரிய நீ, நரியும் பேயும் நடமாட, கோட்டான் குழறிப்பாட, பிணங்களெரியும் சுடுகாட்டிலோ பிறக்கத் தவம் செய்தாய்? தீவினையேன் காணவோ இங்குப் பிறந்தாய்; ஐயோ, இவ்விடமும் பகைவனுடைய தாயிற்றே! உன்னை எங்கே கொண்டு இவ்விருளில் செல்வேன்! என் வருத்தம் நீங்கப் பிறந்த சிந்தாமணியே! பேசாது கிடக்கின்றாய் நீ! மன்னவன் மொழியை எவ் விதம் நிறைவேற்றுவேன் தெய்வமே!” என்று ஆற்றி மனம் வருந்தியிருந்தாள் விசயை.

இவ்வாறு ஆற்றும் விசயைக்கு மனமிரங்கிய மயானத்துறையும் தெய்வம், விசயையின் தோழியான சண்பகமாலை யென்னும் கூனியின் உருவம் கொண்டு அவள்முன் வந்து வணங்கி நின்றது. தோழியைக் கண்ட விசயை அளவிலா உவகை கொண்டாள். ‘தன் நிலைமை இவ்வாறாயிற்றே’ என்று கூறி அவளிடம் ஆற்றினாள். தோழியுருவம் கொண்டு வந்த தெய்வம் விசயைக்கு ஆறுதல் கூறிக் குழந்தையைக் கையி லெடுத்து அணைத்து மகிழ்ந்தது.

"தோழி! பகைவன் அறிவானாயின் எனக்கும் குழந்தைக்கும் ஆபத்து உண்டாகுமே! எங்கே போவேன்? நீதான் வழி சொல்ல வேண்டும்" என்று கூறினாள் விசயை. சண்பகமாலையாகிய தெய்வம், விசயையிடம் குழந்தையைக் கொடுத்துவிட்டு, மயிற்பொறியை அங்கிருந்த குழியில் வைத்து மூடிவிட்டு விசயைக்கு ஆறுதல் கூறியது.

"தேவி! நான் ஒரு மொழி கூறுவேன்; அதை நம்புங்கள்; நடந்ததை எண்ணி வருந்தாதீர்; இப்புதல்வன் உலகத்தையே ஆளப் போகிறான்; பகைவனைப் பழிக்குப் பழி வாங்குவான்; இப்புதல்வனை இப்பொழுதே எடுத்துச் செல்வதற்குத் தனவந்தனான வணிகன் ஒருவன் இங்கு வரப்போகிறான். அது எனக்கு மட்டும் தெரியும்; விவரம் கேட்காதீர்; அது காறும் யாம் மறைந்திருப்போம்; வாருங்கள்" என்று சண்பகமாலை கூறினாள்.

அதைக் கேட்ட விசயை சற்று வியப்பும் உவகையும் உற்றாள்; ஆயினும், புதல்வனைப் பிரிய மனம் வருந்தினாள். மகனை எடுத்து இறுகப் புல்லி அணைத்துக்கொண்டு சச்சந்தன் பெயர் பொறித்த மோதிரத்தை மகன் விரலில் அணிவித்துக் கண்ணீர் விட்டு அழுதாள். பிறகு மகனைக் கீழே கிடத்தி, சண்பகமாலையோடு பக்கத்தில் உள்ள ஒரு மரப் பொதும்பரில் மறைந்து பார்த்திருந்தாள்.

* * * *

இராசமாபுரத்து வணிகன் கந்துக்கடனுக்கும், அவன் மனைவி சுநந்தைக்கும் பல பிள்ளைகள் பிறந்து இறந்தன; அப்படியே அன்று பிறந்த பிள்ளையும் இறந்து போயிற்று; அதைக் கண்ட கந்துக்கடன் மனவருத்தத்

தோடு இறந்த பிள்ளையை எடுத்துக்கொண்டு மயானத்திற்குப் புறப்பட்டான். அப்பொழுது அவன் வீட்டில் உணவருந்திச் செல்லும் ஒரு முனிவன் "உலகாளும் மகனை மயானத்தே பெறுவாய்" என்று பல உண்மைகளைக் கூறிச்சென்றான். அம்மொழியைக் கேட்ட கந்துக்கடன் அதிசயமும் உவகையும் கொண்டு, மயானத்திற்குச் சென்று இறந்த பிள்ளையை ஓரிடத்திற் புதைத்தான். புதைத்தபின் முனிவன் மொழியை நம்பி, அங்குச் சுற்றிலும் சிறிது உலாவினான். இருள் மூடிய மயானத்தே, கருப்புடை தரித்து, கையில் வாளை ஏந்தி உலாவும் கந்துக்கடன், ஒளி வீசும் மணிமோதிரத்தை யுடைய குழந்தையை, பிணத்தின் நெருப்புதவியால் கண்டான். ஆர்வமுடன் குழந்தையை வாரி எடுத்து சச்சந்தன் பெயர் பொறித்த மோதிரத்தைப் பார்த்து மனம் நடுங்கி அதைக் கையால் மறைத்துச் சுற்றுமுற்றும் பார்த்தான். விசயையின் இறைவன் அப்பொழுது சிறிது தும்மலே, சண்பகமாலை உருவம் கொண்ட தெய்வம், தன் மனத்தே, "சீவ" என்று கூறி வாழ்த்தினாள். விசயை அறிவு மயங்கி ஒன்றும் தோன்றாமல் நின்றாள்.

கந்துக்கடன், விசயையின் மகனைக் கையால் மறைத்தெடுத்துச் சென்று தன் மனைவி சுநந்தையிடம் அளித்து, "உன் மகன் பிழைத்தான்" என்று கூறிப் பின் உண்மையைக் கூறினான். குழந்தையின் உருவத்தைக் கண்டு, சுநந்தையும், கந்துக்கடனும் உவகைக் கடலில் மூழ்கினர். சுநந்தை மகனைப் பெற்றெடுத்தாற்போல் மகிழ்ந்து பாலூட்டி எடுத்தணைத்துக் கொஞ்சினாள்.

உலகாளும் மகனைப்பெற்ற மகிழ்ச்சியால், 'மகனுக்குப் பிறந்தநாட் கொண்டாட்ட விழாவை' அப்பொழுதே விடிவதற்குமுன் மிகச்சிறப்புடன் நடத்தினான்,

கந்துக்கடன். வாத்தியங்கள் முழங்கின. நகர மாந்தர், கந்துக்கடன் மனைக்கு வந்து, விசயையின் மகனை, கந்துக்கடனின் பிள்ளையாகவே எண்ணி, மகிழ்ந்து சென்றனர். 'தன்னுடைய அரசாட்சிக்கு மகிழ்ந்து கந்துக்கடன் விழா கொண்டாடுகிறான்' என்று எண்ணிய கட்டியங்காரன், கந்துக்கடனுக்கு அளவில்லாத நிதிக் குவியல்களைப் பரிசாக அனுப்பிவைத்தான். கந்துக்கடன் அதைப்பெற்று மகிழ்ச்சியுடன், "அரசன் அழிந்த நகரிலே, அவன் மகன் பகையை வென்று வெற்றிபெற வேண்டும்" என்று வாழ்த்தி இரவலர்க்கு நிதி வழங்கிப் புகழ் கொண்டான்.

கந்துக்கடன் மகனை எடுத்துச் சென்றதும் கன்றைப் பிரிந்த பசுவைப் போல் மனம் கலங்கிய விசயை, சண்பக மாலையோடு புலம்பிய வண்ணம் அன்றிரவை மயானத்திலேயே கழித்தாள்.

பொழுது புலர்ந்ததும், மயானத் தெய்வமாகிய சண்பகமாலை விசயையைத் தேற்றி, மகன் வளர்ந்து பகையை வெல்வானென்றும், முடிவில் விசயையை அடைவானென்றும் கூறி மகிழ்வித்தாள். விசயை, சண்பகமாலையின் மொழியைக் கேட்டு, முன்பு, தான் கண்ட மூன்று கனவுகளையும், அரசன் அதற்குக் கூறிய பயனையும் எண்ணிச் சிறிது ஆறுதலுற்றாள்.

"சண்பகமாலை! உன்னைப்போல் உற்ற துணையாவார் இனி, எனக்கு வேறு யாருளர்? நீ முக்காலமும் உணரும் வன்மையுடையாய் என்று முன்பு யான் அறியேன். இனி யான் செய்யும் காரியத்தையும் நீயே கூறவேண்டும்" என்று விசயை கூறினாள்.

"தேவி! யான் இருக்கும் வரையில் தங்களுக்கு ஏதும் குறை வாராமற் பாதுகாப்பேன்; இதுவோ

பகைவன் நிலம்; தாங்களோ கணவனை இழந்தவரா யுள்ளீர்! உறவினரிடம் போதல் தகுதியன்று. இந் நகரைத் தாண்டிச் சிறிது தூரம் சென்று ஆற்றைக் கடந்தால், தண்டகாரணியம் உள்ளது. அங்கே தாபதப் பள்ளி உள்ளது; பல தவ மகளிர் உள்ளனர்; அதுவே தங்கட்கு தக்க இடம்" என்று கூறினள் சண்பகமாலை. விசயையும் அதற்கு மனம் மகிழ்ந்து ஒப்புக்கொண்டாள்.

அவ்விதமே இருவரும் தாபதப் பள்ளியை நோக்கி நடக்கலாயினர். பல ஊர்களையும் சிறிய ஆறுகளையும் கடந்தனர். முடிவில் தண்டகாரணியத்துள்ள தாபதப் பள்ளியில் புகுந்தனர். இருவரையும் பார்த்த தவ மகளிர் வரவேற்று உபசரித்தனர். கணவன் இறந்த தற்கும் மகன் வாழ்வதற்கும் தக்கதான ஒரு கோன்மையைக் கைக்கொண்டாள் விசயை. தவமகளிர் விருப்பப்படி, தனது அணிகலன்களைக் கழற்றி எறிந்தாள். பட்டா டையை நீக்கிக் காவியாடையை அணிந்தாள் விசயை; தவ மகளிரோடு இரண்டு தினங்கள் பொழுது போக்கியபின் தன் மகன் நினைவு மனத்தை வருத்தவே சண்பகமாலையை நோக்கி, "தோழி, நீ சென்று மகன் செய்தியை அறிந்து வா" என்று கூறினள். தன் இருப்பிடம் அடையத் தருணம் பார்த்திருந்த தெய்வம் அவ்விதமே சம்மதித்து விசயையை, மாதவ மகளிரிடம் அடைக்கலமாக ஒப்பித்து விட்டுப் பிரியா விடை பெற்று இராசமாபுரத்து மயானத்தே சென்று தங்கியது. மகனிடத்துள்ள ஆசையால் விசயை தோழி இன்று வருவாள், நாளை வருவாள் என்று எண்ணித் தெய்வத்தின் வரவை எதிர் பார்த்துக் காலம் போக்கினாள்.

# ஆசிரியன் கூறிய கதை

இராசமாபுரத்தே கந்துக்கடன் இல்லத்தில் விசயையின் மகன் வளர்பிறை போல் வளர்ந்து வந்தான். அப்போது சுநந்தைக்கும் ஒரு மகன் பிறந்து அவனுடன் வளர்ந்து வந்தான். அவனுக்கு நந்தட்டன் என்று பெயரிட்டனர். தனக்கு மகன் பிறந்து உயிரோடிருந்தும், சுநந்தைக்கு விசயையின் மகனிடத்தே சிறிதும் அன்பு குறையவில்லை. விசயையின் சிறுவன் கந்துக் கடன் இல்லத்தில் வளர்வதை உவகையுடன் அறிந்த சச்சந்தனுடைய காமக்கிழத்தியர் கட்டியங்காரனுடைய கொடுமைக்குப் பயந்து தம் பிள்ளைகளையும் வளர்க்கும்படி, கந்துக்கடனிடம் வேண்டிக்கொண்டு ஒருவரும் அறியாத வண்ணம், கந்துக்கடனிடம் பிள்ளைகளை ஒப்புவித்தனர். அப்பிள்ளைகளில் நபுலன் விபுலன் என்பவர்கள் விசயையின் மகனுக்கு உற்ற நண்பர்களாயிருந்து வளர்ந்து வந்தனர்.

கந்துக்கடன் விசயையின் சிறுவனுக்குப் பெயரிட எண்ணி ஒரு நல்ல நாளில் சான்றோர் பலரையும் உறவினரையும் வருவித்தான். எல்லோரும் சேர்ந்து சிறுவனைச் "சீவ, சீவ, சீவ" என்று வாழ்த்திச் சீவகன் என்று பெயரிட்டார்கள். திருமால் நந்தகோபன் மனையில் மறைய வளர்ந்தாற்போல சீவகன் கந்துக்கடன் மனையில் மறைய வளர்ந்து வந்தான். நந்தட்டன் முதலான எல்லாச் சிறுவரும் சீவகனைத் தம் தமையனாக எண்ணி ஒழுகி வந்தனர்.

சீவகன், அரச குலத்திற் பிறந்தமைக்கு ஏற்ப அறிவும், பொலிவும் பெற்று கல்வி பயிலும் பருவத்தைப் பெற்றான். அதை அறிந்த கந்துக்கடனும் சுநந்தையும், சீவகனையும், நந்தட்டன் முதலியவர்களையும், தமக்குப் பழக்கமுள்ள குருவான அச்சணந்தியாசிரியர் என்பவரிடம் கல்வி கற்க அனுப்பி வைத்தனர்.

சீவகனைச் சிறு வயதிலேயே அச்சணந்தியாசிரியர் பார்த்துப் பழகியுள்ளாராதலின் அவன் தம்மிடம் கல்வி பயில வந்தது பற்றி மிக்க உவகைகொண்டார். சீவகன் முதலிய எல்லோரும் ஆசிரியரிடம் கற்க வேண்டிய நூல்களைத் திருத்தமுறக் கற்றனர். அப்போது அச்சணந்தியாசிரியரிடம் கல்விபயின்றவர்களான, பதுமுகன், புத்திசேனன், தேவதத்தன், ஸ்ரீதத்தன் என்ற சிறுவர்கள் சீவகனுடைய உயிர்த் தோழர்களாய் உடனிருந்து வந்தனர். ஆசிரியர் இசைக்கலை, சோதிடக்கலை முதலியவற்றையும் கற்பித்தார். சீவகன், இசைக்கலையில் மிக்க தேர்ச்சி பெற்று, வீணை வாசித்தலிலும் வல்லவனானான். பின்பு, தனுர் வேதத்தை எல்லோருக்கும் திறம்படக் கற்பித்தார் ஆசிரியர். அதன்பின் அரசன் அறியாவண்ணம், தனியிடம் அழைத்துச் சென்று சீவகன் முதலிய எல்லோருக்கும், யானை யேற்றம், குதிரை யேற்றம் முதலியவற்றையும் பயில்வித்தார். எல்லாம் கற்பித்த பின்பு, ஞான நூலையும் கற்பித்து, மாணவர்களை அமைதியுடன் இருக்கச் செய்தார். ஆசிரியரின் திறமையைக் கண்ட கந்துக்கடன், அதிசயமும், உவகையும் கொண்டு அவரைப் பாராட்டினான். சீவகனுடைய தேகவன்மையையும், கலைத் தேர்ச்சியாலுண்டான முகத்தோற்றத்தையும் கண்டு யாவரும் அதிசயித்தனர்.

ஒரு நாள் ஆசிரியர் சீவகனைத் தனியே அழைத்துச் சென்று, ஓர் அசோக மரத்தடியில் அமர்ந்து, சீவகனை அருகே அமர்த்தி, அரசனுடைய ஒற்றர்களும், மனித பாஷையைப் பழகும், கிளி, பூவை முதலியனவும் இல்லாத சமயத்தில் சீவகனை நோக்கிக் கூறலானார்:

"சீவக! நான் கூறும் ஒரு கதையைக் கேள்!" என்றார்.

"ஆசார்ய! அவ்விதமே ஆவலுடன் கேட்கிறேன்" என்று சீவகன் விடையளித்தான்.

"சீவக! இவ்வுலகத்துக்கு மன்னன், சச்சந்தனென்பவன்; அவனுக்கு மனைவி, விசயை என்பவள். அரசனை மந்திரி கொல்ல முயற்சித்தான்; அரசன் மனைவியை வெளியிற் போக்கித் தான் மந்திரியோடு போர்செய்து மாண்டான். அவன் மனைவி வருந்தி, சுடுகாட்டிலே ஒரு புதல்வனைப் பெற்றாள்; அப்புதல்வனிடமிருந்து அவளை, ஒரு தெய்வம் வேறாகப் பிரித்து வைத்தது. அப்போது ஒரு வணிகன், தனக்கு ஒரு முனிவன் கூறிய மொழியை நம்பி, சுடுகாடு வந்து, அப்புதல்வனை எடுத்துச் சென்றான். அவ்வணிகனும் அவன் மனைவியும் அப்புதல்வனைப் பல புதல்வரோடு வளர்த்தனர்; பின்பு அப்புதல்வனை என்னிடம் கல்வி பயில அனுப்பினர். அவன் எல்லாக் கலைகளையும் கற்று மேம்பட்டு விளங்குகிறான்" என்று கூறி ஒரு கதை போலக் கண்ணன் கர்ணனுக்குப் பிறப்புணர்த்தியது போலச் சொல்லி வந்தார். சீவகன் குறுக்கிட்டு,

"ஆசார்ய! அத்தகைய கலை வல்லோன் யார்?" என்று ஆவலுடன் கேட்டான் சீவகன்.

"சீவக! நீ தான் அவன்" என்று புன்முறுவலுடன் ஆசிரியர் கூறினார்.

அதைக் கேட்டதும் "ஆ" என்று கூறிய வண்ணம், சீவகன் பூமியில் விழுந்து மூர்ச்சையடைந்தான்.

உடனே ஆசிரியன் சீவகனை அன்போடு எடுத்துத் தழுவி மூர்ச்சை தெளிவித்து, "ஐய! நீ இவ்விதமானது எம் போல்வார் செய்த பாவத்தால்தான். உன் பகைவன் உயிரோடு நிலைபெற்றுள்ளான். ஆதலால் மடந்தையரைப் போல் மனம் கலங்காதே" என்று ஆறுதல் கூறினார்.

மனம் தெளிந்த சீவகன், கண் சிவந்து, எழுந்து நின்று வில்லைக் கையிலேந்தி, "எந்தையைக் கொன்ற பாதகனை யான் கொன்று வருகிறேன்" என்று புறப்பட்டான்.

உடனே ஆசிரியன் விரைய ஓடி அவனைத் தடுத்து, "ராஜகுமார! யான் ஒன்று வேண்டுவேன்; அதை மறுக்காமல் தரவேண்டும்" என்றார்.

"ஆசார்ய! வேண்டுவதை மறுப்பவன் யானோ!" என்று சீவகன் கூறினன்.

"யான் வேண்டுவது, கட்டியங்காரனை இன்னும் ஒரு வருஷம் முடியும் வரையில் கொல்ல வேண்டாம் என்பதே" என்றார் ஆசிரியர்.

"அங்ஙனமே செய்வேன்" என்று கூறிக் கட்டியங்காரன்மீது கொண்ட சீற்றத்தைச் சீவகன் அடக்கினன்.

ஆசிரியர் மீண்டும் சீவகனைப் பார்த்து, "குமர! இக் கதையையும் கேள்" என்றார்.

"ஆசார்ய! தாங்கள் கூறும் அமுதன்ன மொழியைப் பருகுகிறேன்" என்று சீவகன் விடை தந்தான்.

"சீவக! வெள்ளிமலையிலுள்ள வாரணவாசி என்னும் நகருக்கு உலோகபாலன் என்பான் மன்னன். அவன் தன்

புரிகையில் அவனை, யானைத்தீ யென்னும் பசிநோய் பற்றிக்கொண்டது. அதனால் அவன், இந்நாட்டிற்கு வந்து சேர்ந்தான்" என்று கூறியதும், "ஆசார்ய! அப் பெரியோன் யார்?" என்று ஆவலோடு கேட்டான் கதை முடிவதன்முன் சீவகன். அவன் கேட்டமைக்கு மன மகிழ்ந்த ஆசிரியர், "ராஜகுமர! உன் குருவாகிய நான் தான்" என்றார் ஆசிரியர்.

"ஆசார்ய! கதையை மேலும் கூறவேண்டும்" என்று சீவகன் உவகையோடு கேட்டான்.

"குமர! இதைக் கேள்; பின்பு கந்துக்கடனுடைய வீட்டிலே சென்று விருந்து உண்டேன். சுநந்தை என் வயிறு வெடிக்க நெய் கலந்த அன்னத்தைப் போட்டாள். அதனால் மன மகிழ்ந்த யான், உண்ட பின்பு, மனையினுள்ளே செல்கையில் பல மகளிர் சூழ, நீ வீற்றிருக்கக் கண்டேன். உடனே என்னைப் பற்றியிருந்த யானைத் தீ என்னும் பசி நோய் அகன்றது. யான் அச்சரியமுற்று உன்னைத் தெய்வமோ என்று ஐயங்கொண்டு, ஞானத்தால் ஆராய்ந்தேன். அவ்வாராய்ச்சியின் பயனாலும், உன் தோற்றத்தாலும் பிறப்பை அறிந்தேன்; உடனே, கந்துக்கடனும் மொழிந்தான்: அதை உனக்கு உணர்த்தினேன்" என்று ஆசிரியர் கூறினார்.

அதைக்கேட்ட சீவகன் வியப்பும் மகிழ்வும் கொண்டு, "ஆசார்ய! முயற்சியாலுண்டாகிய தவமே தாயாக, நீ தந்தையாகி என்னைப் படைத்தாய்" என்று பாதங்களை வணங்கி நின்றான்.

"ராஜகுமர! யான் துறத்தற்குச் செல்கிறேன்; உன் காரியம் நிறைவேறும்; என்னைத் தடுக்காதே" என்று கூறி ஆசிரியர் எழுந்தார். "ஆசார்ய, நும் பிரிவு என்னைப் பெரிதும் வருத்துமாயினும், துறவுக்குச்

செல்வதைத் தடை செய்யேன்" என்று கூறிக் கண்ணீர் விட்டான் சீவகன்.

ஆசிரியர் சீவகனை அணைத்துத் தேற்றிப் பகையை வெல்லும் உபாயத்தைக் கூறி இல்லத்திற்குச் சென்று கந்துக்கடனிடமும், சுநந்தையிடமும், மற்றச் சிறுவர் களிடமும் தாம் துறவு பூண்டு தவம் செய்யச் செல் வதைக் கூறினார். கந்துக்கடன் மனம் வருந்தி மறுமொழி கூற அஞ்சியிருந்தான்.

சுநந்தை ஆசிரியன் பிரிவுக்கு மனம் பொறாது, "மாதவத்தோய்; நீயும் சீவகனைப் பிரிய மனம் கொண் டனையோ? இது தகாது; நும் பிரிவு எம்மைப் பெரிதும் துன்பப்படுத்தும்" என்று கூறிக் கண்ணீர் விட்டனள்.

ஆசிரியர், சுநந்தைக்கு ஆறுதல் கூறி எல்லோருக்கும் ஆசி கூறித் துறவு பூண்டுத் தவம் செய்தற்குக் காட்டை நோக்கிச் சென்றார்.

## 5

# சீவகன் செய்த கன்னிப்போர்

கட்டியங்காரன் இராசமாபுரத்தில் கொடுங்கோ லாட்சி செய்துவந்தான். அந்நாளில் ஒரு நாள் அரண் மனையைச் சேர்ந்த பசுக்களும் எருதுகளும் அந்நகரின் பக்கத்து மலையில் வழக்கம்போல் மேய்ந்துகொண் டிருந்தன. அம்மலையில் வேடர்கள் வாழ்ந்து வந்தனர். மன்னவனுடைய பசுக்கள், மலையில் மேய்வதைக் கண்டனர் அவ்வேடர்கள். அந்தப் பசுக் கூட்டத்தைக் கவர்ந்து கொள்வதற்கு அங்கிருந்த வேடரெல்லாரும்

ஒன்று கூடிப் பேசினர். அப்பொழுது நிமித்தம் கூறுபவனாகிய வேடனொருவன் பசுக்களைக் கவர்வதற்கு நிமித்தம் பார்த்தான். பார்த்தபின் வேடரெல்லோரையும் நோக்கிக் கூறினான்.

"நண்பர்களே! நாம் எண்ணியபடி பசுக்கூட்டத்தைக் கவர்ந்து விடுவோம்; அப்பொழுதே அரசன் படை நம்மைப் பின்தொடர்ந்து போர் செய்யும்; நாம் அரசன் படையைத் தோற்கடிப்போம். ஆனால் அதற்குப் பின் தேரில் ஒருவன் வருவான். அவனால் நாம் துரத்தப் பட்டு பசுக் கூட்டத்தை விட்டு ஓடிப் போவோம்" என்று கூறினான்.

"அறிவில்லாத நிமித்திகனே! உன் நிமித்தம் தப்பி விடும்; அரசன் படை தோற்றுப்போன பின் ஒருவன் வந்து நம்மை என்ன செய்வான்? யமனேயிருந்தாலும் ஒருவனாய் வந்தால் என்ன செய்யமுடியும்? ஆதலால் இப்பொழுதே பசுக் கூட்டத்தைக் கவர்வோம்! வாருங்கள்" என்று கூறி வேடரெல்லாரும் வில்லைக் கையில்கொண்டு புறப்பட்டனர். பசுக்கூட்டங்களிருக்கு மிடம் சென்றதும் அவற்றைச் சுற்றிவளைக்க எண்ணினர். அங்கே காவல் செய்யும் இடையர்களைக் கண்டதும் அவர்கள்மீது அம்பாலெய்து ஓடச் செய்தனர். இடையர்கள் வேடர்களுக்குப் பயந்து மத்தாற் கடையப் பட்ட தயிரைப்போல் சிதறி ஓடிவிட்டனர். பின்பு வேடர், பசுக்கூட்டங்களை வளைத்துத் தம்மிடத்திற்கு ஓட்டலாயினர்.

இடையர் மனம் வருந்தி, இடைச்சேரிக்குள் புகுந்து தம் மனைவியரிடம் நிகழ்ந்ததைக் கூறினர். இடைச்சியர் பசுக்களைப் பிரிந்து வருந்தியிருக்கும் கன்றுகளைத் தழுவிக் கொண்டு வருந்தினர்.

இடையர்கள் எல்லாரும் ஒன்றாகூடி ஆலோசனை செய்து நடந்ததை அரசனிடம் தெரிவிப்பதென்று முடிவு செய்தனர். ஆரவாரத்துடன் இடையரெல்லாரும் கூட்டமாகக் கிளம்பி கட்டியங்காரனுடைய அரண்மனைக்குச் சென்றனர். அங்கே காவல் புரியும் வாயிற் காவலனிடம் தம் வரவைக் கூறி நிகழ்ந்ததை அரசனிடம் தெரிவிக்குமாறு முறையிட்டனர். வாயிற்காவலன் கட்டியங்காரனிடம் சென்று,

"அரசே, நம் அரண்மனைப் பசுக்கூட்டங்களை வேடர் கவர்ந்து கொண்டனராம். இடையர்களை அடித்துத் துரத்திவிட்டனராம். அவர்கள் இச்செய்தியைச் சமூகத்திற்கு அறிவிக்கும்படி முறையிட்டு வெளியே நின்றனர்ளார்கள்" என்றான்.

அம்மொழியைக் கேட்ட கட்டியங்காரன் அவமானத்தால் வாயிற்காவலன் மீது கோபங்கொண்டு பின்பு தணிந்தான். உடனே இடையர்களை அழைத்து நிகழ்ந்ததை முறையே கேட்டான். அவர்களுடன், தனது பெருஞ் சேனையொன்றை யனுப்பி வேடரைக் கொன்று,' பசுக்களை மீட்டுவரும்படி கட்டளையிட்டான்.

அரசன் படைகள் பேராரவாரத்துடன் நகரத்தை விட்டுப் புறப்பட்டு மலைமீது எறிச்சென்றன. மிக்கவேகத்துடன் வேடர் பசுக் கூட்டங்களை ஓட்டிச் செல்வதைக் கண்டனர். அரசன் படையினர் உடனே வேடரைப் பின் தொடர்ந்து தாக்கினர். வேடர் மீளாக் கோபங்கொண்டு அம்புகளைப் பொழிந்து போர் செய்தனர். சிறிது நேரம் அரசன் படையும் வேடர் படையும் சண்டை செய்தன.

கடைசியாக வேடர்கள் அரசன் படையைப் போராற்றலுடன் தாக்கித் துரத்திவிட்டனர். ஆயுதங்களை அவ்வவ்விடங்களிலேயே சிந்திவிட்டு நகருக்குள் ஓடிவிட்டனர்

அரசன் படையினர். அதைக் கண்ட இடையர் மேலும் மிகப் பயந்து, ஓடி, கட்டியங்காரனிடம் நிகழ்ந்ததைக் கூறினர்.

இடையர்கள் கூறியதைக் கேட்ட கட்டியங்காரன் வேடருடன் மீண்டும் போர் செய்தற்குப் பயந்து பேசாமல் இருந்துவிட்டான்.

'அரசன், வேடருக்குப் பயந்து தம் விஷயத்தில் கவலை எடுத்துக் கொள்ளவில்லை. பசுக்களை மீட்டுக் காப்பது நம் கடமை' என்று உறுதி செய்துகொண்டனர் இடையர். இடையர் தலைவனான கோவிந்தன் என்பவன் பதிதாக ஒரு முடிவு செய்தான்.

"பசுக் கூட்டத்தை எந்த ஆண்மகன் மீட்டுத் தருகிறானோ அவனுக்கு என் மகள் கோவிந்தையை மணம் புரிவிப்பேன்" என்று கூறி, அச்செய்தியை நகர் முழுவதும் முரசறைவித்துத் தெரியச் செய்தான்.

கோவிந்தன் மகள் கோவிந்தை அழகு மிக்க மங்கைப் பருவத்தினள் என்பதை நன்றாக அறிந்திருந்த பலரும், இந்தக் காரியத்திற்கு ஆயத்தமாயினர். ஆனால் வேடரிடம் போர் செய்தற்குப் பயந்தவராய்ப் பேசாமல் இருந்திருந்துவிட்டனர். வேடரை வெற்றிகொண்டு கோவிந்தையை மணப்பது எந்த ஆண் மகனாலும் முடியாதென்று பலரும் வீரம் பேசினர். "வேடரோடு போர் செய்து பசுக் கூட்டத்தை மீளச் செய்யும் வன்மையையுடையவன் ஒருவன்கூட இந்த நகரில் இல்லையே!" என்று ஏங்கியிருந்தான் கோவிந்தன்.

சீவகனுடைய தோள் வலியை அறிந்த ஒருவன், இச்செய்தியை அவனுக்கு அறிவித்தான். அதைக் கேட்ட சீவகன், வேடர்மீது பெருங் கோபம்கொண்டான்.

பசுக்களைத் தன்புறத்தும் வேடரை அடக்காத அரசன் மீதும் அடங்காத கோபம் கொண்டான்.

“பசு, பெண்டிர், பாலர், பார்ப்பார் என்றின்னவர்களைக் காப்பது என் கடமை. ஆதலால் யானே வேடரிடமிருந்து பசுக்களை மீட்டு வருவேன்; மீட்டு வாராது போனால், வேடரிடத்து ஆண்மையையும், பசுவையும் பறிகொடுத்துப் பாற் சோறு விழுங்கி அரசு கட்டிலில் நாய் போலிருக்கும் கட்டியங்காரனுவேன்” என்று சபதம் கூறிச் சில வீரர்களையும் அழைத்துக்கொண்டு தான் தேரில் ஏறி வேடரிருக்கும் இடம் சென்றான் சீவகன்.

முன்பு நிமித்தம் கூறிய வேடன், சீவகனின் தேர் வருவதைக் கண்டதும் அஞ்சி, வேடரை நோக்கி, “இனி நாம் இத்தேரில் வருபவனோடு போர் செய்ய முடியாது” என்று கூறினான். அதைக் கேளாத வேடர்கள், சீவகனை எதிர்த்து நின்று போர் செய்தனர். சீவகன் தன் தேரைக் காற்றைப்போல விரைவாக ஓட்டி நாலாபக்கமும் அம்பு மழையைப் பொழிந்தான். வேடர்கள், சீவகனுடன் எதிர்த்து நிற்கமுடியாதவராய்ப் பயந்து ஓடலாயினர். சீவகன், நீண்ட தூரம் அவர்களைத் துரத்திவிட்டு அங்கு வளைக்கப்பட்டிருந்த பசுக் கூட்டங்களை மீட்டு இடையர் வசம் ஒப்புவித்தான்.

இடையர்கள் சீவகன் செய்த கன்னிப்போரைக் கண்டு ஆச்சரியமும் மகிழ்வும் கொண்டு அவனை வாழ்த்தி நகரில் அழைத்துச் சென்றனர். கந்துக்கடனும் சுநந்தையும் சீவகனுக்குத் திருஷ்டி கழித்து மகிழ்ந்தனர். இச் செய்தியைக்கேட்ட கட்டியங்காரன், தன்னலாகாத காரியத்தைச் சீவகன் செய்தானென்று மனம் புழுங்கினான்.

இடையர் தலைவனான கோவிந்தன் தான் மொழிந்தபடி, கோவிந்தையைச் சீவகனுக்கு மணம் செய்விக்க ஆயத்தம் செய்தான். சீவகன் தான் அரசகுலமாதலின், இடையர் குலத்தவளான கோவிந்தையை வணிகர் குலத்துப் பதுமுகனென்னும் தன் தோழனுக்கு மணம் செய்விப்பதாகத் தன் மனத்தே நிச்சயித்தான்.

திருமண நாளன்று, மணப்பந்தரில், கோவிந்தன் கோவிந்தையைக் கன்னிகாதானம் செய்ய எண்ணிச் சீவகனுக்குத் தன் குலப்பெருமையைக் கூறி அவன் கையில் நீரை வார்த்தான். சீவகன் புன்முறுவலுடன், 'பதுமுகனுக்காக ஏற்றேன்' என்று கூறி நீரையேற்றான். பின்னர் சீவகன் விருப்பப்படி அவன் தோழனை பதுமுகனுக்கும் கோவிந்தைக்கும் மணம் நிகழ்ந்தது.

6

# கப்பல் கவிழ்ந்தது

இராசமாபுரத்து வணிகன் சீதத்தன் என்பவன் கடல் கடந்து சென்று, பொருள் சேமிக்க எண்ணினான். அவனுக்குப் பல கப்பல்கள் இருந்தன. ஒரு நாள் தன் கப்பலொன்றில் விலைக்குரிய பண்டங்களை ஏற்றிக் கொண்டு, நண்பர் பலருடன் கடல் வழியே பிரயாணம் செய்தான். கடலில் பல நாட்கள் பிரயாணம் செய்து, ஒரு தீவை அடைந்தான். அந்தத் தீவிலுள்ள அரசனைச் சென்று கண்டு, அநுமதி பெற்றுத் தான் கொணர்ந்த பண்டங்களை விற்றுப் பொருளைக் கைக்கொண்டு, சில நாட்கள் அங்கே மகிழ்வுடன் தங்கியிருந்தான். பின்னர் அத்தீவுக்குத் தலைவனான அரசனிடம்

விடை பெற்றுக் கப்பலேறி இராசமாபுரத்தை நோக்கிப் பிரயாணம் செய்தான்.

நடுக் கடலில் செல்லும் கப்பலில் தன் நண்பர்களுடன் உல்லாஸமாகப் பேசிக் கொண்டு உவகையால் மனமயங்கி இருந்தான் சீதத்தன். அந்தச் சமயத்தில் திடீரென்று பெருங்காற்று வீசியது; உடனே மிகக் கடுமையாகப் பேரிடியுடனும் மின்னலுடனும் மழை பெய்தது. எங்கே பார்த்தாலும் கொந்தளிப்பு. கடலின் அலைகள் மலைகளைப் போல் தோன்றி, ஒன்றோடொன்று மோதிக் கொண்டன; அதனால் கப்பல் நிலை தடுமாறித் தத்தளித்தது. கப்பலிலிருப்பவர்கள் இதைக் கண்டு மனங்கலங்கி உடல் நடுங்க அங்குமிங்கும் ஓடினர். உவகையோடு பேசிக்கொண்டிருந்த சீதத்தன் மனங் கலங்கி அசைவற்று நின்றான். பின்னர் தன்னைத்தானே தேற்றிக் கொண்டு, "நண்பர்களே! பயம் வேண்டாம். இடுக்கண் வந்தபோது நடுக்கமின்றி அதைத் தாங்க. அவ்விதமின்றி அழுது பிழைத்தவர் எவருமிலர். வாழ்நாள் நமக்கு இருக்குமானால் நடுக்கடலில் கப்பலமுழ்ந்தாலும் பிழைத்து விடுவோம். வாழ்நாளின்றேல் நாம் உண்ணும் நீரே நம்மைக் கொன்று விடும். ஆதலால் மனம் கலங்காது அருகனை வணங்கி இருங்கள்" என்று நண்பர்களைத்

இவ்வாறு கூறிய சீதத்தன் சிறிது மயக்கமுடன் தனியே போய்த் தலையைத் தொங்கவிட்டு ஓரிடத்தில் உட்கார்ந்தான். அவன் கண்கள் சுழன்றன. அப்பொழுது கப்பலின் பாய்மரம் முறிந்து வீழ்ந்தது. உடனே கப்பல் கடலுள் கவிழ்ந்து மூழ்கியது. சீதத்தனுடன் வந்த தோழரும், அவன் தேடிய பொருளும் கப்பலோடு கடலில் மூழ்கவே, சீதத்தன் ஓர் ஒடிந்த

பாய் மரத்துண்டைப் பிடித்துத் தெப்பமாகக் கொண்டு நீந்தினான். புயற்காற்றின் உதவியால், சீதத்தன் நீந்திப் பக்கத்துத் தீவின் கரையை அடைந்தான். கரையேறிய சீதத்தன் சிறிது ஆறுதலுற்றவனாய் நடந்து சென்று அங்குள்ள ஓர் சோலையில் புகுந்து, தன் தோழரை நினைத்துப் புலம்பிக்கொண்டே உலாவினான்.

அவ்வழியே அப்போது வழிப் போககன் போல வந்த தரன் என்னும் வித்தியாதரனைக் கண்டதும் சீதத்தன் தனக்கு நிகழ்ந்த துன்பத்தை அவனிடம் கூறிப் புலம்பினான். தரன், சீதத்தன் சொல்லுவதைக் கேட்டுத் தனக்குள் மனமகிழ்ந்து, அவனைத் தேற்றி, "அன்பா! வருந்தாதே! யான் விஞ்சை வல்லவன். ஆதலால் நீ இழந்த பொருளையும் தோழரையும் கப்பலுடன் மீட்டுத் தருகிறேன். இனி யான் சொல்வதைக்கேள். இதோ இருக்கும் மலையின் பெயர் வேதண்டகிரி யென்பர். இம்மலையில் ஏறிப் போக வேண்டும். இதோ இருக்கும் மேழகப்பொறியில் ஏறிக்கொள்" என்று கூறினான்.

சீதத்தன் மனமகிழ்ந்து தரன் கூறியபடி மேழகப் பொறியில் ஏறி உட்கார்ந்தான். தரன் பொறியை இயக்கி மலையினுச்சியை அடைந்தான். உடனே இருவரும் பொறியை விட்டு இறங்கிச் சற்று இளைப்பாறினர். அவ்விடத்தே மரத்தில் தணிந்து தொங்குகின்ற பழங்களைப் பறித்து உண்டனர்.

"அன்பா! நாம் இந்தத் திசை நோக்கி ஒரு காவதம் சென்றால் வித்தியாதர நகரம் உள்ளது. அங்கே போய் வருவோம்" என்று தரன் கூறினான். சீதத்தன் தரனுடைய மொழிப்படியே சம்மதித்தான். 5வரும் வித்தியாதர நகரத்தை நோக்கிச் சென்றனர்.

செல்லும்போது அங்கங்கே தோன்றும் மலைக் காட்சிகளைக்கண்டு களித்தான் சீதத்தன். மலைகளையே மதிலாகக் கொண்டு விளங்கிய வித்தியாதர நகரத்திற்குள் இருவரும் புகுந்தனர். அங்குள்ள மகளிர் அழகையும், ஆடவர் அழகையும் அவர்களது பொழுதுபோக்கையும் கண்டு சீதத்தன் அதிசயித்தான். தரன் சீதத்தனைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று உணவளித்து உபசரித்தான். இருவரும் சிறிது பேசிக்கொண்டிருந்தனர்.

"அன்ப! இந் நகரத்திற்கு அரசன் கலுழவேகன் என்பவன். அவன் மனைவி தாரணி என்பவள். அவர்களுக்குக் காந்தருவதத்தை என்ற குமாரி ஒருத்தி இருக்கிறாள். அவள் மணம் செய்வதற்குரிய பருவத்தினளாயிருக்கின்றாள். அவள் ஜாதகத்தைப் பார்த்த ஜோதிட னொருவன், 'இராசமாபுரத்தேதான் அவளுக்கு மணம் நிகழும்' என்று சொன்னான். ஆனால் பல அரசர்கள் அவளழகில் ஈடுபட்டு மணம் செய்து கொள்வதற்கு இங்கே வந்து காத்திருக்கின்றனர். அரசன் எண்ணம் யாதென்றும் தெரியவில்லை. இச்சமயம் நீ வந்தபடியால் அரசன் கருத்தியதை யறியலாம். ஆதலால் நாம் அரசனைக் கண்டு வருவோம்" என்று சீதத்தனிடம் தரன் கூறினான். சீதத்தன் மறுமொழி கூறாமல் அதற்கு உடன்பட்டான். தரன் சீதத்தனைக் கலுழவேகனிடம் அழைத்துச் சென்றான்.

கலுழ்வேகன் தரனுடைய வரவை ஆவலோடு எதிர் பார்த்திருந்தான். அச்சமயம் சீதத்தனுடன் தரன் அவன்முன் தோன்றினான். கலுழவேகன் அவ்விருவரையும் வரவேற்று உபசரித்தான். சீதத்தன், தன் வரலாற்றைத் தரன் முகமாக கலுழவேகனுக்கு உணர்த்தினான். கலுழவேகன் உவகையோடு சீதத்தனைத்

தனியே அழைத்துச் சென்று, அந்தப்புரத்தே உள்ள தன் மனைவி தாரணியைக் காட்டி அறிமுகம் செய்வித்தான். தாரணியும் ஆவலுடன் சீதத்தனுக்கு முறைப்படி விருந்து செய்து உபசரித்தாள். அப்பொழுது தாரணியின் அருகில் பூங்கொடியைப்போல் சாய்ந்து நின்ற நங்கையைக் கண்டு சீதத்தன் அதிசயமுற்று நின்றான். அருகிலிருந்த கலுழவேகன், சீதத்தன் குறிப்பை யறிந்து, "அன்பா! அந் நங்கை எனது மகள்; காந்தருவதத்தை என்று பெயர். உனக்கும் மகளாகும் முறையுடையவள். இசையில் வல்லவள். இவளை இராசமாபுரம் அழைத்துச்சென்று, அந்தணர், அரசர், வணிகர் என்ற முக்குலங்களொன்றில் உதித்த எந்த ஆண் மகன், இவளை இசையில் வென்றாலும் அவனுக்கு மணம் செய்து கொடுத்து விடு; இது உன் கடமை. உன்னை இங்கு அழைத்த காரியமும் இதுவே" என்றான். அவன் மொழியைக்கேட்ட சீதத்தன் மனமகிழ்ந்து, "அரசே! அடிமைப் பணி செய்வேன்" என்று மறுமொழி கூறி அதற்கு உடம்பட்டான்.

அருகிலிருந்த அரசன் மனைவி தாரணி, அம்மொழியைக் கேட்டு மனம் வருந்தி நின்றாள். இவ்வித்தியாதர நகரத்தே ஒருவராயினும் இவளை இசையில் வென்று மணக்க இயலவில்லையே என்று ஏங்கி, "இந்த இழிவு இவளுக்குத் தக்கதே" என்று வெறுத்துக் கூறினாள். அதைக்கேட்ட கலுழவேகன் தாரணிக்கு ஆறுதல் கூறினான்.

"இதுகாறும், காந்தருவதத்தையை இசையில் வென்று மணப்பவர் ஒருவருமில்லை. இவளுக்கோ மணப்பருவம் வந்துவிட்டது: ஆதலால் இராசமாபுரத்தே

தான் இவள் கணவனை அடைவாள்; மகளிர்க்குக் கணவனோடு இருந்து வாழ்தலே இன்பம்; வருந்தாதே" என்று தாரணியைத் தேற்றினான். தாரணி மனந்தேறி மகிழ்ந்து, தன் மகளுக்குக் கொடுக்கவேண்டிய ஆடையாபரணங்களைக் கொடுத்துத் தன்னைப் பிரிவதற்கு மனம் வருந்தும் காந்தருவதத்தைக்கு ஆறுதல் கூறினாள். கலுழ வேகன் பொன்னும் மணியும் நிறைந்த பல பெட்டிகளையும், வாள், வேல் முதலிய ஆயுதங்களையும், வீணை முதலிய வாத்தியங்களையும் அளித்துத் துணையாக நூற்றுக் கணக்கான மகளிரையும் அனுப்பினான். பின்னர் காந்தருவதத்தையின் உயிர்த் தோழியும், இசையில் வல்லவளுமான வீணாபதியென்னும் பேடியையும் உடனனுப்பினான். காந்தருவதத்தை தன் பரிவாரங்களுடன், தாய் தந்தையரை வணங்கி விடைபெற்று, சீதத்தனுடன் புறப்பட்டாள். கலுழவேகன் சீதத்தனையும் வீணாபதியையும் நோக்கி, "நீங்கள், காந்தருவதத்தைக்குத் தந்தையும் தாயும் போன்று இருந்து காப்பாற்ற வேண்டும்" என்று மொழிந்து அனுப்பினான். யானை, குதிரை முதலியவற்றுடன் வீரர்கள் சூழ, சீதத்தன் காந்தருவதத்தையுடன் கடற்கரையை அடைந்தான். அப்போது உடன் வந்த தரன், சீதத்தனை நோக்கிப் புன்முறுவல் செய்து, "அன்ப! முன்பு ஜோதிடன் கலுழவேகனை நோக்கி, 'நின்மகளை இராசமாபுரம் கொண்டு போதற்குரியவன் கடலிடத்துள்ளான், அவனை அழைப்பி" என்றான்.' அரசன் என்னை அது செய்வதற்கு அனுப்பினான். யான் உன்னைக் கப்பலில், என் விஞ்சையால் மயக்கிக் கொணர்ந்து கடற்கரையில் உலாவச் செய்தேன். பின் அரசனிடம் அழைத்துச் சென்றேன்;

உண்மையில் உன் தோழரும் பொருளும் கப்பலுடன் கடலில் கவிழவில்லை. இதோ உன் தோழர் பொருளுடன் கப்பலில் உள்ளனர் பார்!" என்று கூறி மறைந்தான்.

சீதத்தன் கப்பலில் உள்ள தன் தோழர்களைக் கண்டு ஆச்சரியமடைந்து நிகழ்ந்ததை அவர்களிடம் கூறினான்.

"நண்பா! நாங்கள் ஒன்றும் அறியோம், நீ கண்டதெல்லாம் எமக்கு நாடகம் போன்றுள்ளது" என்று கூறிக் கைகொட்டிச் சிரித்தனர் தோழர்கள். சீதத்தன், காந்தருவதத்தை முதலியவர்களுடன் கப்பலில் பிரயாணம் செய்து, இராசமாபுர நகரைச் சேர்ந்தான். நகரை அடைந்ததும் காந்தருவதத்தையையும் மற்றவர்களையும் அழைத்துக்கொண்டு தன் இல்லத்தை அடைந்தான்.

## இசைப் போர்

சீதத்தன் இராசமாபுரத்தே உள்ள தன் இல்லத்தில் ஒரு பகுதியை அலங்கரித்துப் புதுமை செய்து அதில் காந்தருவதத்தையையும் அவளைச் சேர்ந்தவர்களையும் இருக்கச் செய்தான். தன் மனைவியாகிய பதுமைக்குக் காந்தருவதத்தையைப் பற்றிக் கூறி, அவளுக்கு அறிமுகம் செய்வித்தான். பார்ப்பவரைக் கவர்ச்சிகொள்ளும் தோற்றத்தையும், பருவத்திற்கேற்ற அழகையும் உடைய காந்தருவதத்தையைக் கண்டு பதுமை முதலிய மகளிர் வியப்புற்றிருந்தனர். சீதத்தனால் செய்விக்கப்பெற்ற கன்னிமாடத்தே காந்தருவதத்தையும் வீணைபதியும் வீணை வாசித்தலையும், பாட்டுப் பாடுதலையும் பொழுது போக்காகக் கொண்டு மகிழ்ந்திருந்தனர்.

கலுழவேகன் இட்ட கட்டளையை நிறைவேற்ற எண்ணிய சீதத்தன், தன் மனைவிக்கு அச்செய்தியை முதலில் உணர்த்தினான். பின்னர் அவ்விதம் செய்வதற்கும், இசைப் போர் செய்வதற்குத் தக்க மண்டபத்தை அமைத்தற்கும் அரசன் அநுமதியைப் பெற எண்ணினான். உடனே கட்டியங்காரனிடம் சென்று, அவனுக்குப் பொன்னையும் மணிகளையும் காணிக்கையாக அளித்துத் தன் எண்ணத்தை அறிவித்தான். கட்டியங்காரன் மனமகிழ்ந்து அதற்கு அநுமதி தந்தான். சீதத்தன் மகிழ்வுற்று விரைவில் ஓர் பெரிய மண்டபத்தைக் கட்டுவித்தான். மண்டபத்தைப் பலவகையாலும் அலங்கரித்து அழகு செய்வித்தான். இசைப்போர் நடப்பதை நகரத்தினர்க்குத் தெரிவிக்க எண்ணி முரசறைவோனை அழைத்து, "'அரசர், அந்தணர், வணிகர் என்ற முக்குலங்களொன்றில் உதித்த ஒருவன் காந்தருவதத்தையோடு யாழ் வாசித்து இசையில் வென்றால், அவனுக்கு அவளை மணம் செய்து கொடுக்கப்படும். இது சீதத்தன் வார்த்தை' எனக்கூறி நகரில் முரசறைவாயாக!" என்று கட்டளையிட்டான். முரசறைபவனும் அவ்விதமே நகரத்தார்க்கு முரசறைந்து தெரியப்படுத்தினான். இராசமாபுரத்தருகிலுள்ள பல நாடுகளுக்கும் சீதத்தன் ஓலை

காந்தருவதத்தை இசைக் கலையில் வல்லவள் என்பதையும் அழகுமிக்க வித்தியாதர குலத்து மங்கையென்பதையும் அறிந்த யாவரும் இராசமாபுரத்தே வந்துசேர்ந்தனர். இசையில் வல்ல அரசர், அந்தணர், வணிகர் என்ற முக்குலத்தினரும் வந்து கூடினர். தேனை விரும்பி வந்த தேனீக்களைப்போல எல்லோரும் நகரத்தே

வந்து தங்கி இசைப்போர் நடக்கப்போவதை எதிர்பார்த்தனர்.

சீதத்தன், சோதிடன் சொன்ன நல்ல நாளொன்றில் இசைப்போர் நடத்த ஏற்பாடு செய்து காந்தருவதத்தைக்கு அதைத் தெரிவித்தான். யாசகர் பலர்க்கும் வேண்டிய பொருளைக் கொடுத்து அருகக்கடவுளுக்குப் பூசை செய்வித்தான் சீதத்தன். மகளிர் பலர் மணியைக் கழுவுவது போல் காந்தருவதத்தையை, வாசனை நீரில் நீராட்டி, ஆடையாபரணங்களால் அலங்காரம் செய்தார்கள். அழகுக்கு அழகு செய்தாற் போல, கலுழவேகனும் அவன் மனைவியும் அளித்த அணிகலன்களால் அலங்கரித்தனர். காந்தருவதத்தை வீணாபதியுடனும் வேறு பல மகளிருடனும் இசைப்போர் செய்தற்குரிய மண்டபத்திற்குப் புறப்பட்டாள். அவளைச் சூழ்ந்து காவலாக ஆணுடைதரித்த மகளிர் நூற்றுவர் வில், வாள் முதலியன ஏந்தி வஞ்சினம் கூறிச் சென்றனர். மற்றொரு பக்கத்தே, மகளிர் பலவேறு வீணைகளையும், இசைக் கருவிகளையும் எடுத்து வந்தனர். பொன்னரி மாலையும், மேகலையும் அசைய, சிலம்பும், கிண் கிணியும் ஒலிக்க, 'அன்ன நடை இதுவோ?' என்று கூறும்படி அசைந்து நடந்து வந்தாள் காந்தருவதத்தை. அவள் அழகையும் நடையையும் கண்டு மதிமயங்கினர் மண்டபத்திருந்தவர்கள். "இவள் திருமகளோ! அன்றி வித்யாதர மகள்தானோ!" என்று கூறினர் பலர். "இவளை யாழால் வென்று மணப்பதல்லது வலிதிற்கொண்டால் போர் செய்வோம்" என்று பலர் கூறினர். "யாழில் எல்லோரையும் இவள் வென்றுவிட்டால் இவளைப் பெறு

மாறு தவம் செய்வோம்'' என்றனர் பலர். இவ்வாறு பலரும் பலவாறு சொல்லிக்கொண் டிருந்தனர்.

காந்தருவதத்தை மண்டபத்தில் நுழைந்து உட்புறத்தே திரைக்குப் பின்பு போய் அமர்ந்தாள். உடன் வீணாபதி கொடுத்த வீணையைக் கையில் வாங்கி நரம்பைத் தெறித்தாள். காந்தருவதத்தையின் அழகிலே மயங்கிப் பேசிக்கொண் டிருந்த எல்லோரும் நரம்பி னொலியைக் கேட்டதும் மெய்ம்மயிர் சிலிர்த்துக் கண்ணீர் வீழ்த்திப் பேச்சவிந்து திரையை நோக்கினர். வீணை வாசிப்பதற்குக் காந்தருவதத்தை ஆயத்தமாயிருப்பதை எல்லோருக்கும் உணர்த்த எண்ணிய வீணாபதி, திரையி னின்றும் வெளிவந்து சபையை நோக்கிச் சொல்ல லானாள்:

"இசையில் வல்லவர்களே! எமது காந்தருவதத்தை வீணை வாசிப்பாள். அதற் கேற்பக் கண்டப்பாடல் பாடுபவர் வருக; அன்றேல், இவள் கண்டத்தாலே பாடுவதற்கேற்ப வீணை வாசிப்பவர் வருக'' என்று கூறி புன்முறுவல் செய்து நின்றாள்.

அம்மொழியைக் கேட்ட யாவரும் வீணாபதியின் உருவத்தைக் கண்டு அதிசயமுற்று அவளையே நோக்கினர்.

"அங்க அமைப்பிற்கேற்ற அழகும், குழலின் இனிமையுப் போன்ற மொழியும் கொண்ட இவளுக்கு மார்பில் தனமில்லாதது என்ன அதிசயம்! நாம் உயிருடன் இருக்கவேண்டியே பிரமன் இவளுக்குத் தனத்தைப் படைக்கவில்லை போலும்! காந்தருவதத்தை யுடன் வந்திருக்கும் வீணாபதி என்னும் பேடியே இவள்!'' என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டனர்.

அவர்கள் பேசிக்கொள்வதைக் கேட்டு வீணைபதி நகைத்தாள்; "ஆடவர்களே! உங்கள் ஐயத்தை யான் போக்குகிறேன். பிரமனார் என்னைப் படைத்தபொழுது காலபாசம் போன்று என் கண்களை பார்த்தவருயிரைப் பறித்தலால் இவள் ஆடவர்க்குக் கூற்றமேதான் என்று எண்ணித் தனத்தைப் படைக்காமல் விட்டார்" என்று கூறிச் சிரித்துத் திரைக்குள் மறைந்தாள். சபையி லுள்ளவர் அதைக்கேட்டு வெட்கி வாய்பேசாதிருந்தனர். வீணைபதியின் வேடிக்கையைக் கண்ட காந்தருவதத்தை அவளைப் பரிகசித்து நகை செய்தாள்.

மகளிர் காந்தருவதத்தைக்கு முன் போடப்பட் டிருந்த 'உருவு' திரையை அகற்றினர். காந்தருவதத்தை எழுந்து சபையை வணங்கி, தனக்கென அமைத்த ஆசனத்தில் அமர்ந்து வீணையை வாசித்து அதற்கேற்பப் பாடினாள். அவள் பாடலைக் கேட்டு ஆடவர் மனமுருகினர். இசைக்கு உருகும் பறவைகளான 'கின்னர மிதுனங்கள்' மண்டபத்தே வந்து தங்கின. உடனே அரசர்களில் பலர் காந்தருவதத்தைக்கு முன் சென்று உட்கார்ந்து வீணை வாசித்துப் பாடினர். அவர்கள் பாடலைக் கேட்ட கின்னர மிதுனங்கள் வெளியே பறந்து சென்றன. அவர்கள் காந்தருவதத்தைக்குத் தோற்று எழுந்து சென்றனர். அவ்வாறே அந்தணரும், வணிகரும் காந்தருவதத்தையின் இசைப் போருக்குத் தோற்று வருந்திச் சென்றனர். இவ்வாறு யாவரும் தோற்று விடவே கட்டியங்காரன் மிகக் கோபம் கொண்டான்.

"இனி இவளை இசையில் வெல்பவன் காமனையன்றி இப்பூமியில் எவனும் இல்லை; ஆதலால் இசைப்போர் காளையோடு ஒழிவதாக" என்று கூறி வெறுத்துச்

சென்றான். இவ்விதம் ஆறு நாட்கள் இசைப்போர் நடந்தும் வெற்றி பெற்றவர் எவரும் இல்லையே என்று சீதத்தன் மனம் வருந்தியிருந்தான்.

காந்தருவதத்தையின் இசைப் போரினைப் பற்றி நன்றாக அறிந்திருந்த சீவகன் அன்று நடந்த நிகழ்ச்சியை அறிந்து, தன் நண்பன் புத்திசேனனைப் பார்த்து, "புத்திசேனா! நான் இசைப் போருக்குச் செல்லப் போவதைக் கந்துக்கடனுக்கு அறிவித்து வா; ஆனால் 'அக்கன்னியிடத்து விருப்பத்தால் செல்லவில்லை. அவளை வென்று என் இசைக் கல்வி வெளிப்படுத்தற்குச் செல்கிறேன்' என்று கூறுவாயாக" என்று அனுப்பினான். உடனே புத்திசேனன் அவ்வாறே கந்துக்கடனிடம் சென்று சொன்னான்.

கந்துக்கடன் அதைக்கேட்டுச் சிறிது ஆலோசித்தான். "புத்திசேனா! சீவகன் இசையில் வல்லவனாதலின் வெற்றி பெறுவான். ஆனால் கட்டியங்காரனுக்கு அவனிடத்து இன்னும் பொறாமை வளர்ச்சியுறும். அதற்காக மனம் வருந்துகிறேன். அதனால்......" என்று கந்துக்கடன் கூறுமளவில் அவனுக்கு அறிமுகமான காகமாலை யென்பவளின் தோழி ஒருத்தி அங்கு வந்து தன் கூந்தலில் செருகி யிருந்த குவளைப்பூ ஒன்றைத் தந்தாள்.

கந்துக்கடன் அப்பூவை வாங்கிப் பிரித்துத் தனக்கு ரகசியங்களைத் தெரிவிக்கும் காகமாலை யென்பவள் அப்பூ இதழில் எழுதிய வார்த்தைகளைப் படித்தான்:

"கட்டியங்காரன் என்னிடம் ஒன்று கூறினான். அது சீவகனைக் கொலை புரியும் சூழ்ச்சி. ஆதலால் நம்பியை நகரினின்றும் போக்கிப் பாதுகாப்பான இடத்தில்

இருக்கச்செய்க" என்று அதில் எழுதியிருந்தது. அதைப் படித்தபின் அங்கு நின்ற தோழி அவர்களை நோக்கிக் கூறலானாள்:

"ஐயன்மீர்! யான் கூறுவதையும் கேட்டருளுக! முன்பு அனங்கமாலை என்னும் மங்கை நாட்டியமாடினாள். அதற்குக் கட்டியங்காரன் வந்திருந்தான். சீவகனும் வந்திருந்தான். பலர் வேண்டுகோளின்படிச் சீவகன் அனங்கமாலைக்கு அலங்காரம் செய்ததால், அனங்கமாலை சீவகனழகைக் கண்டு காதல் கொண்டாள். அவள் நடித்தபோது தான் சீவகனிடம் காதல் கொண்டுள்ளதைக் குறிப்பித்தாள். அதையறிந்த கட்டியங்காரன் அவள்மீது தான் காதல் கொண்டுள்ளமையால் சீவகனிடம் கோபம் கொண்டான். உடனே அம்மங்கையைக் கட்டியங்காரன் வலிதிற் றூக்கிச் சென்று தன் அரண்மனையில் அவளைக் கற்பழித்தான். அனங்கமாலை பலர் முன்பாகத் தான் சீவகனைக் காதலிப்பதாக முறையிட்டாள். கட்டியங்காரன் சீவகனை இகழ்ந்து கூறித் தன் அமைச்சர் பலரையும் நோக்கி 'சீவகனே இந்நகருக்குத் தலைவன்!' என்று பரிகசித்தான். சீவகன் பிறப்பையறியாத மந்திரியர் அவனிடத்து உள்ள அன்பால் புகழ்ந்து பேசினர். அது பொறாத கட்டியங்காரன் சீவகனை அன்று முதல் கொலை செய்யச் சமயம் பார்த்திருக்கிறான்" என்று மொழிந்தாள்.

கந்துக்கடன் அவளை நோக்கி, "இன்னும் ரகசியம் உண்டேல் அறிந்து வா" என்று அவளுக்குப் பரிசளித்து

பின்னர் புத்திசேனனை நோக்கி, "வீர! இங்கு நிகழ்ந்த யாவற்றையும் சீவகனுக்குக் கூறிச் சேனையுடன்

செல்லும்படிச் சொல்; நீயும் தோழரும் உடன் செல்லுங்கள்" என்று மொழிந்து சென்றான். புத்தி சேனன் சீவகன் இருக்குமிடம் நோக்கிச் சென்றான்.

# காந்தருவதத்தையின் மணம்

கந்துக்கடன் அநுமதியை எதிர்பார்; சீவகன் புத்திசேனனைக் கண்டதும் புன்முறுவலுடன் அவனை நோக்கினான். குறிப்பறிந்த புத்திசேனன், கந்துக்கடன் சொல்லியதையும் நாகமாலையின் தோழி வந்து கூறியவற்றையும் விளக்கமாகச் சீவகனிடம் மொழிந்தான். சீவகன் அம்மொழியைக் கேட்டுச் சிரித்து, "நண்பா! கட்டியங்காரன் நம்மை ஒன்றும் செய்யத் துணியான். அவனால் ஒன்றும் ஆகாது. நாம் கவலையின்றிச் சென்று வருவோம். ஆயத்தம் செய்க" என்று கூறித் தன்னை ஆடையாபரணங்களால் அலங்கரித்துக் கொண்டான். தன் ஊர்தியாகிய பெண்யானையின் மீது சீவகன் ஏறிப் புறப்பட்டான். அவனைச்சூழ, புத்தி சேனன், பதுமுகன், தேவதத்தன், நந்தட்டன், நபுலன், விபுலன் முதலிய தோழரும் தம்பியரும் ஆயுதபாணிக ளாகத் தத்தமக்குரிய யானைமீது ஏறிவந்தனர். இவர் களுக்குப்பின் கந்துக்கடன் ஏவற்படி படைவீரர் நூற்று வர் ஆயுதங்களுடன் ஊர்திகளிற் சென்றனர். முடிசூடச் செல்லும் அரசகுமாரன் போல் சீவகன் வீதி வழியே

காந்தருவதத்தை இருக்கும் மண்டபத்தைச் சீவகன் அடைந்தான். தன்பின்னே வந்த தோழரையும் படை

வீரரையும் வெளியே நிறுத்தித் தான் மட்டும் தனியாக மண்டபத்தில் ஏறிச் சென்றான். அவன் பின்னே வீணையை ஏந்தி நபுலன் சென்றான். மண்டபத்தில் நிறைந்திருந்த மன்னர் முதலியவர் சீவகன் வருவதைக் கண்டதும் ஒதுங்கி வழி விட்டனர். யானைக்கூட்டத்திற் செல்லும் ஆண் சிங்கம் போன்று சீவகன் இறுமாந்து நடந்து சென்றான். அன்று இசைப்போரின் கடைசி நாளாகையால் யாவரும் நடக்கப் போவதை ஆவலுடன் நோக்கியிருந்தனர். சீவகன் இசைப்போர் செய்ய வந்திருப்பதை நபுலன் வீணாபதியிடம் தெரிவித்தான்.

வீணாபதி காந்தருவதத்தையிடம் அதைக் கூறி அவள் அநுமதி பெற்று, உருவுதிரையை நீக்கினாள். சீவகன் அங்குப் போடப்பட்டிருந்த ஆசனத்தில் அமர்ந்து காந்தருவதத்தையை நோக்கினான். வித்தியாதர மங்கையான காந்தருவதத்தைச் சீவகனைக் கண்டதும் வெட்கி நாணத்தால் தலைகுனிந்தாள்; "இவன் நம்மை வெற்றி கொள்வன்" என்று தன் அறிவால் உணர்ந்தாள்.

சீவகனுடைய இசைக்கலையின் மேம்பாட்டை அறிய எண்ணிய காந்தருவதத்தை நரம்பாலும், மரத்தாலும் குற்றமுடைய வீணைகள் பலவற்றை வீணாபதியிடம் கொடுத்து "இதன் நன்மை தீமைகளை ஆராய்க என்று சொல்" எனக் கூறினாள்.

சீவகன் வீணாபதியிடமிருந்த ஒவ்வொரு வீணையையும் வாங்கிப் பார்த்து, "இது அழுகிய மரத்தாற் செய்யப்பட்டது; இது மெலிய மரத்தாற் செய்யப்பட்டது; இது இடியுண்ட மரத்தாற் செய்யப்பட்டது. இது வெம்பிய மரத்தாற் செய்யப்பட்டது. இது நரம்பினிமையில்லாதது. இந்நரம்பில் மயிரும் மண்ணும்

உள்ளது" என்று கூறி எல்லாவற்றையும் குற்றமுடைய தென்று மொழிந்தான்.

பின்னர், காந்தருவதத்தை உயர்ந்த வீணையொன்றைக் கொடுத்துக் கேட்க, "இது உத்தமமான மரத்தாற் செய்யப்பட்ட சிறந்த வீணை" என்று அதன் வேறு பாடுகளை ஆராய்ந்து சொன்னான் சீவகன். காந்தருவதத்தை அதைக் கேட்டு நாணமுற்று ஒன்றும் பேசாதிருந்தாள். வீணாபதி முதலிய மகளிர் சீவகன் அழகையும் இசைக் கலைத் தேர்ச்சியையும் பார்த்து ஆச்சரியமுற்று நின்றனர்.

"இனி இம்மங்கை, சீவகனுக்குத் தோற்று விட்டாள்" என்று சபையினர் ஆரவாரித்தனர்.

"பிரமன் நீண்ட நாள் நினைத்திருந்து அழகு மிக்கவரில் அழகு மிக்கானாகிய ஒருவனைப் படைக்க வேண்டுமென்று நிருமித்தாற் போன்ற இச்சீவகனே இவளுக்குத் தக்க கணவன்" என்று கூறி மகளிர் மகிழ்ந்தனர்.

ஆடவரை எதிர் நோக்காத காந்தருவதத்தையின் கண்கள் சீவகன் திருமேனியில் படிந்து அவன் அழகைப் பருகின. எரிகின்ற மெழுகைப்போல் உள்ளம் உருகினாள். சீவகனைத் தழுவுவது நமக்குக் கிடைக்குமோ என்று ஏக்கம் கொண்டாள். சிறிது நேரத்திற்கெல்லாம் மயக்கம் நீங்கி, தன்னிலையை உணர்ந்து, மனந்தேறி சீவகனை வீணை வாசித்துப் பாடுமாறு வீணாபதியிடம் தெரிவித்தாள். வீணாபதி சீவகனுக்கு அதைக் குறிப்பிக்க, சீவகன் வீணை வாசிக்க ஆயத்தமானான். தன் தம்பி நபுலனிடமிருந்த வீணையை வாங்கிப் புன்னகையுடன் வாசித்தான். பின் அதற்கேற்ப ஆலாபனம் செய்து பாடினான். சீவகன் பாட்டைக் கேட்ட யாவரும் அவனது

இசை யொலியிலே மனமயங்கி யிருந்தனர். அவன் பாடலுக்கு உள்ளம் உருகிக் கின்னர மிதுனமும் அசுணப் பறவையும் மண்டபத்தே வந்து தங்கின.

வீணை வித்தகியான வீணாபதியும் காந்தருவதத்தையும் மனம் உருகிக் கண்ணீர் சொரிந்தனர். சொற்சுவையும் பொருட்சுவையும் மிக்க பாட்டைச் சீவகன் இனிய குரலில் பாடினான். அவனது கண்டப்பாடலும் வீணை வாசிப்பும், பருந்தும் நிழலும் போல் ஒன்றியிருந்தன. அந்த மதுர கீதத்தைப்போல் தானும் பாட எண்ணிய காந்தருவதத்தை வீணை வாசித்து அதற்கேற்ப ஆலாபனம் செய்து பாடினாள். காந்தருவ தத்தையின் பாட்டும் வீணை யொலியும் ஒரு திறமாயிருந்தன. சீவகன் பாடிய பாட்டும் வீணையொலியும் வேறொரு திறமாயிருந்தன. அவள் பாட்டு, சீவகன் பாட்டிற்குச் சிறிது தாழ்ந்து நின்றது. உடனே காந்தருவ தத்தை தான் தோற்றுப்போனமையை யுணர்ந்து அதை வீணாபதிமூலம் சபையினர்க்கு உணர்த்தினாள். தோற்ற பின்பு, சீவகன்முன் உட்கார்ந்திருக்க நாணம் கொண்டு எழுந்து வீணாபதியின் கையிலிருந்த பொன்னரி மாலையை வாங்கிச் சீவகன் கழுத்திலணிந்து அவனை வணங்கி நின்றாள். சீவகன் காந்தருவதத்தையை மணந்தானென்று பலர் மகிழ்ச்சியும் பலர் கோபமும் கொண்டு ஆரவாரம் செய்தனர். உடனே வீணாபதி காந்தருவ தத்தைக்குமுன் திரையை வீழ்த்தி மறைத்தாள்.

சீவகன் வீணையாலும் பாட்டாலும் காந்தருவ தத்தையை வென்றானென்று மனமகிழ்ந்து நகரமாந்தர் பேருவகையோடு புகழ்ந்தனர். அதைக்கண்ட கட்டியங்

காரன் மனம் பொறுமல் தன் ஆசனத்தை விட்டெழுந்து அங்கிருந்த அரசர்களைப் பார்த்து எச்சரிக்கை செய்தான்.

"அரசர்களே, இது அநியாயம்! வணிகன் மகளை அரசன் மணம் புரிதலல்லாமல் அரசன் மகளை வணிகன் மணம்புரிதல் தகாது. வணிகன் மகனாகிய சீவகன், வித்தியாதர மன்னன் மங்கை காந்தருவதத்தையை மணப்பதை நீங்கள் பார்த்துக்கொண்டிருந்தால் அவன் அரசனைப்போல் மதிக்கப்படுவான்; யாரும் அவனை அடக்க முடியாமற் போய்விடும். நீங்கள் அவனுக்குக் கீழ்ப்படிய வேண்டியதுதான். ஆதலால் விரைவில் சீவகனை மடக்கிப் போர் செய்யுங்கள். அவனை வென்ற பின், நம்மையெல்லாம் தனித் தனியே உயிருக்கு அபாய மில்லாமல், நீர் வீசு கருவியால் பொருது வெல்பவன் எவனோ அவன் காந்தருவதத்தையை மணக்கட்டும்" என்று கர்ச்சித்தான்.

கட்டியங்காரன் அவ்வாறு கூறக் கேட்ட அரசர் யாவரும் காந்தருவதத்தையிடத்துக் காதலால், சீவகனோடு போர் செய்யப் புறப்பட்டனர். சீவகன் அரசர் செய்கையைக் கண்டு புன்னகை செய்து, நந்தட்டனை ஒரு பக்கமும், சீதத்தன், தேவதத்தன், புத்திசேனன் என்பவரை மூன்று பக்கமும், நபுலனையும் விபுலனையும் இருபக்கமுமாகக்கொண்ட படையை அணிவகுத்துப் போருக்குப் புறப்பட்டான். யானை மீது இருந்த பதுமுகன், பகையரசர்களை நோக்கிச் சாம, பேத, தான உபாயங்களால் புத்தி கூறி "கட்டியங்காரன் மொழியைக் கேட்டு துன்பத்துக்கு ஆளாக வேண்டாம்" என்று எடுத்துரைத் தான். பகையரசர் எவரும் அதைக் கேளாமல் போர் செய்ய முன்வந்து நின்றனர்.

மண்டபத்திருந்த காந்தருவதத்தை தன்னால் சீவக னுக்குத் துன்பம் நேரிட்டதே என்று மனங்கலங்கிக் கண்ணீர் விட்டாள். வீணைபதி அவளைத் தேற்றினாள். "உன் கண்ணைப் போன்ற கொடிய என் அம்பினால் பகைவரைக் கொல்லுகிறேன் பார்" என்று சீவகன் காந்தருவதத்தைக்கு ஆறுதல் கூறி அவளைக் காத்திருக் கும்படி பதுமுகனை அங்கே நிறுத்தி விட்டுத் தான் தேர் மீதேறிப் பகைவர் முன் சென்றான். அவன் பின், நண்ப ருடன் சீவகன் படைகள் சென்றன. பகைவர் படையும் சீவகன் படையும் மோதித் தாக்கின. வாள்கள் மின்னலைப் போல் மின்னின. குதிரைகள் ஒன்றை யொன்று எதிர்த்தன. யானையும் யானையும் பொருதன. வீரரும் வீரரும் வேல் கொண்டு பொருதனர். சீவகன் தன் தேரைக் காற்றுடி போலவும் கொள்ளி வட்டம் போலவும் செலுத்தி நாலா பக்கமும் அம்பு மழையைப் பொழிந்தான். சீவகனைச் சுற்றி அரசர்கள் அம்புகளைச் சொரிந்தனர். நீண்ட நேரம் சீவகனோடு பொருத பகை யரசர், முடிவில் அங்கு நிற்கமாட்டாதவராய்ப் புறங் கொடுத்து ஓடினர்.

தோற்றோடும் பகைவரைக் கண்டு சீவகன் நகைத் துக் காந்தருவதத்தையை அழைத்துக்கொண்டு நண்ப ருடன் சீதத்தன் மனைக்குச் சென்றான். கந்துக்கடனும் சுநந்தையும் அங்கு வந்தனர். உடனே மணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. சீவகனுக்கும் காந்தருவதத்தைக்கும் அஷ்ட வாத்தியங்களும் முழங்கத் திருமணம் நிகழ்ந்தது. இருவரையும் நகர மாந்தர் வாழ்த்தி, மகிழ்ந்து சென்றனர். சீவகனும் காந்தருவ தத்தையும் இன்ப வாழ்வு பெற்று இருந்தனர்.

சீவகன் ஒருநாள் சோலையில் உலாவிக்கொண்டிருக்கையில் வித்தியாதர தூதனான தரன் அங்குத் தோன்றி திருமுகமொன்றைத் தந்தான். சீவகன் வணக்கமுடன் அதை வாங்கிப் படிக்கலானான்:

"கலுழ வேகன் ஓலையைச் சீவகசாமி காண்க. நன்மையுண்டாகுக. யான் நமக்கென்றே காந்தருவதத்தையைச் சீதத்தனுடன் அனுப்பினேன். அங்கு இசைப் போரும், கட்டியங்காரன் பகைப்போரும் நிகழ்ந்தமையை அறிந்தேன். காந்தருவதத்தையை மணந்ததும் அறிந்தேன். தாம் இனி எது செய்ய எண்ணினாலும் எனக்கு அறிவித்துச் செய்யவும்" என்று வாசித்தான். உடனே தன் மாமனாகிய கலுழவேகன் பாதங்களைத் திசை நோக்கி வணங்கித் தானை காந்தருவதத்தையிடம் அழைத்துச் சென்று திருமுகத்தைக் காட்டி மகிழ்ந்தான். பின்னர் தரனுக்கு பல பொருள்களைக் கொடுத்து உபசரித்துக் கலுழவேகனிடம் அனுப்பினான்.

## ௯

# கடும் நட்புப் பகை காட்டும்

முனிவரது களங்கமற்ற மனத்தைப்போல் ஆகாயம் தூய்மையுடன் விளங்கியது. முடிவில்லாது பரந்து தோன்றிய அவ்வானிலே செல்லும் சூரியன் இளவேனிற் பருவத்தை உண்டாக்கினான். அவ்விளவேனிற் பருவத்தே இராசமாபுரத்தின் பூஞ்சோலை கண்கொள்ளாக் காட்சியுடன் விளங்கியது. மலரும் தளிரும் தழைத்த அந்தப் பூஞ்சோலையில் வண்டுகள் ரீங்காரம் செய்துகொண்டு கூட்டம் கூட்டமாய்ப் பறந்து சென்றன. பூக்களைச் சூடிய

மகளிரை ஆடவர் தழுவுவதுபோல், மலர்கள் நிறைந்த பூங்கொடிகளை வண்டுகள் அணைந்திருந்தன. சோலையின் நடுவே உள்ள தடாகங்கள், அலைகளாகிய கைகளினால் பூந்தொட்டிலில் பலவகைப் பறவைகளைத் தாலாட்டிக் கொண்டு விளங்கின. காற்று மெல்லென வீசிக்கொண்டிருந்தது.

பூக்கொய்து விளையாடுவதற்கும், புனலாடுதற்கும் விரும்பிய ஆடவரும் மகளிரும் அந்தப் பூஞ்சோலையில் உலாவிக்கொண்டிருந்தனர். வண்டிகளிலும், சிவிகைகளிலும், தேர்களிலும், யானை, குதிரை முதலிய வாகனங்களின் மீதும் பலர், சோலையில் வந்து இறங்கினர். இராசமாபுரத்து வணிகர் தலைவனான குபேரமித்திரன் மகள் குணமாலையும் குபேரதத்தன் மகள் சுரமஞ்சரியும் சேடியருடன் சிவிகையினின்றும் இறங்கினர். அங்கே திரை போட்டு மறைவு செய்த இடத்தில் குணமாலையும் சுரமஞ்சரியும் சேடியருடன் சென்று தங்கினர். குணமாலையும் சுரமஞ்சரியும் பொழுது போக்கிற்காகத் தாம் கொணர்ந்திருந்த கிளியையும் பூவை யென்னும் பேசும் பறவையையும் ஒன்றோடொன்று பேச வைத்துப் பழக்கிக்கொண்டிருந்தனர். கிளியும் பூவையும் பேசுவதைக் கேட்டு இருவரும் சிரித்துக்கொண்டிருந்தனர். அப்போது நீர் விளையாட்டிற்குக் குணமாலை கொண்டு வந்திருந்த வாசனைப் பொடியை 'மாலை' என்ற அவள் சேடி, சுரமஞ்சரியிடம் காட்டி, "அம்மா! இந்த வாசனைப் பொடி, வாசனை நன்றாக வீசுகிறது பாருங்கள்!" என்று புன்னகையுடன் சொன்னாள்.

சுரமஞ்சரி, குணமாலையின் சேடி மொழிந்ததைக் கேட்டவுடன் முகம் வேறுபட்டாள். அவளுடைய

உருண்டு திரண்ட கண்களில் கோபமும் குறும்புச் சிரிப்பும் கொந்தளித்தன. தலையை அசைத்துக் கொண்டே குணமாலையின் வாசனைப் பொடியைப் பார்த்தாள்.

"குணமாலை! உன்னுடைய சந்தோஷத்தைப் போக்கி வருத்தத்தைக் கொடுக்கக்கூடியது இந்த வாசனைப் பொடி. யான் சொல்லுகிறேனென்று கோபம் கொள்ளாதே. என் வாசனைப் பொடியைப் பார்!" என்று கூறித் தன் வாசனைப் பொடியையும் குணமாலையிடம் காட்டி எளனம் செய்தாள் சுரமஞ்சரி.

சுரமஞ்சரியின் ஏளனத்தைக் கொண்ட வார்த்தை, குணமாலையின் உள்ளத்தே வேலைப் போன்று சுருக்கெனப் பாய்ந்தது. ஆனாலும், தன் வருத்தத்தைச் சிறிது அடக்கிக்கொண்டாள். "சுரமஞ்சரி, என் வாசனைப் பொடிக்கு ஒப்பானது தேவருலகிலேயேதான் உள்ளது. இவ்வுலகத்தே உண்டென்று அறிஞர் சொன்னால் உன் வாசனைப் பொடியும் இதை ஒக்கும் என்று கூறுவேன்" என்று அடக்கமாகக் குணமாலை மறுமொழி கூறினாள்.

அதைக்கேட்ட சுரமஞ்சரியின் கண்கள் கோவைப் பழம் போல் சிவந்தன.

"குணமாலை! அவ்விதமானால், இவ்வாசனைப் பொடிகளைப் பரிக்ஷிப்போம். இந்தச் சோலையில் பல அறிஞர்களும் பெரியோர்களும் வந்துள்ளனர். நம் வாசனைப் பொடிகள் இரண்டையும் சேடியரிடம் கொடுத்தனுப்பி, உயர்ந்த பொடி எது என்பதை அறிஞரிடம் காட்டி அறிந்து வரச் செய்வோம். யான் தோற்றால், புனலாடாமல் கன்னிமாடம் செல்வேன். வென்றால் கோடிப்

பொன் அருகதேவனுக்குக் காணிக்கை அளிப்பேன்'' என்று சுரமஞ்சரி வஞ்சினம் பேசினாள்.

அவள் பேச்சின் கடுமையையும், கோபத்தையும் கண்ட குணமாலை சாந்தமாக, "யானும் அவ்விதமே செய்ய விரும்புகிறேன்'' என்று சொன்னாள்.

இணைபிரியாத நட்புடனிருந்த குணமாலையும் சுரமஞ்சரியும் வாசனைப் பொடி காரணமாக மனம் வேறுபட்டு, கடும் பகை கொண்டனர். பின்னர் குணமாலையின் வாசனைப் பொடியை அவள் சேடியான மாலை என்பவள், ஒரு தட்டில் வைத்து மூடி எடுத்துக் கொண்டாள். சுரமஞ்சரியின் வாசனைப் பொடியை அவள் சேடியான கனகபதாகை என்பவள் ஒரு தட்டில் வைத்து மூடி எடுத்துக் கொண்டாள். குணமாலை, சுரமஞ்சரி இருவருடைய விருப்பப்படி, சேடியரிருவரும் பூஞ்சோலையில் நீர் விளையாட்டிற்கு வந்துள்ள ஆடவரெல்லாரிடமும் வாசனைப் பொடிகளைக்காட்டி, "இவ்வாசனைப் பொடிகளில் உயர்ந்தது எது?'' என்று கேட்டனர். வாசனைப் பொடிகளின் வாசனையை அறிந்த எல்லாரும், "இரண்டும் நல்ல வாசனையுள்ளவையே'' என்று கூறிவிட்டனர். சேடியரிருவரும் மனம் சோர்ந்தவராய், ஓரிடத்தில் கூடியிருந்த இளங்குமாரைக் கண்டு, "இவ்வாசனைப் பொடிகளில் உயர்ந்தது எது?'' என்று கேட்டனர்.

"இரண்டும் நல்ல வாசனையை உடையனவே. ஆனால் அந்த மரத்தடியில் இருக்கும் சீவகனிடம் காட்டினால் வேறுபாடு கூறி விளக்குவான்'' என்று அந்த இளங்குமரர் சொல்லினர்.

சோலையில் நடக்கும் விளையாட்டுக்களையும் காட்சிகளையும் பார்த்துத் தன் தோழருடன் அளவளாவிக்

கொண்டு அசோக மரத்தின் நிழலில் அமர்ந்திருந்தான் சீவகன். சேடியரிருவரும் அங்கு வந்து சீவகனை வணங்கி நின்றனர். "எங்கு வந்தீர்கள்?" என்று அவர்களை வியப்புடன் சீவகன் கேட்டான்.

"ஐய! எம் தலைவியரான குணமாலை, சுரமஞ்சரி என்பவருடைய வாசனைப்பொடிகள் இவை. இவ் வாசனைப் பொடிகளில் உயர்ந்ததை அறியவேண்டுவது அவர்கள் விருப்பம்'' என்று சேடியர் மொழிந்தனர். சீவகன் அவற்றைப் பார்த்த மாத்திரத்தில் குணமாலையின் சுண்ணத்தை, "இவை நல்லவை'' என்று உற்று நோக்கிக் ...

சீவகன் எண்ணத்தை அறியாத சேடியர், "ஐய! இரண்டிற்கும் வேறுபாடு கூறாமல் 'இவை நல்லவை தாம்' என்று சொல்லுவதில் பயன் என்ன? இவ்விதமே அறிஞரெல்லாரும் கூறுகின்றனர். இவற்றின் வேறு பாட்டை அறியவே தங்களிடம் வந்தோம்'' என்று மறுமொழி சொல்லினர்.

சீவகன் சேடியரைப் பார்த்துப் புன்னகை செய்து, "பெண்களே, கோடைக்காலத்து இடித்துச் செய்தமையால், இந்த வாசனைப்பொடி உயர்ந்தவை. மாரிக்காலத்து இடித்துச் செய்தமையால், இந்த வாசனைப்பொடி சிறிது தாழ்ந்தவை'' என்று குணமாலையின் வாசனைப் பொடியை உயர்த்தியும் சுரமஞ்சரியின் வாசனைப் பொடியைத் தாழ்த்தியும் கூறினான் சீவகன். குணமாலையின் வாசனைப் பொடியை உயர்ந்ததென்று சீவகன் சொன்னவுடன், "ஐய! ஒருவரை விரும்பிய காலத்து அவர் செய்யும் தீய காரியமும் நல்லதாகும். விரும்பாத காலத்து அவர் செய்யும் நல்ல காரியமும் தீயதாகும். இது உலக

இயல்புதான். ஆதலால் தாங்கள் கூறியபடி இப்பொடிகளின் உயர்வு தாழ்வைக் காரணத்துடன் எனக்கு விளங்கக் கூறவேண்டும்” என்று சுரமஞ்சரியின் சேடி கனகபதாகை மொழிந்தாள்.

“நங்காய்! அவ்விதமாயின், இவ்வாசனைப் பொடிகளின் உயர்வு தாழ்வைச் சாட்சியால் உணர்த்துகிறேன்” என்று சீவகன் சொன்னான்.

“ஐய! தேவரிலும் மக்களிலும் உனக்குக் கட்டுப் படாதவர் இல்லையாதலால், பறவை முதலியன, இவற்றின் உயர்வு தாழ்வை உணர்த்துமானால் உடம்படுவேன்” என்று கனகபதாகை கூறினாள்.

“நங்காய்! இந்தச் சோலையில் நான்கு வகை வண்டுகள் உள்ளன. அவற்றைக்கொண்டு உணர்த்துகிறேன்” என்று சீவகன் மொழிந்தான். கனகபதாகை அதற்கு உடம்பட்டாள்.

சீவகன் அங்குள்ள ஓரிடத்திற்குச் சேடியரை அழைத்து சென்று, எறும்பின் பாஷையை அறிந்த விக்கிரமாதித்தன் போல, “வண்டுகாள்! தேன்காள்! சுரும்புகாள்! மிஞிறுகாள்!” என்று வண்டுகளைக் கூப்பிட்டான். ஒலியறிதற் கேற்ற செவிகளையுடைய வண்டுகள், உடனே அங்கே பறந்துவந்து கூடின. சீவகன் உவகையுடன், இரு சேடியருடைய வாசனைப் பொடிகளையும் தன் இரண்டு கைகளால் அள்ளி ஆகாயத்தே தூவி, “இவற்றில் மிகநல்லவற்றை உண்ணுங்கள்” என்று கூறினான். சுரமஞ்சரியின் வாசனைப் பொடியை உண்ணப் பறந்த சுரும்பும் மிஞிறும் அவற்றைத் தீயவை யென்று அறிந்து உண்ணாமல் திரும்பின. குணமாலையின் வாசனைப் பொடியை நல்லவை யென்றறிந்த வண்டும்

தேனும் அவற்றை உண்டுவிட்டன. வண்டுகள் உண்ணாத சுரமஞ்சரியின் வாசனைப் பொடி கீழே உதிர்ந்து கிடந்தன. அவற்றைச் சீவகன் கனகபதாகைக்குக் காட்டி, "நங்காய்! இப்பொழுது அறிந்தாயா?" என்று கூறினான்.

"ஐய! அறிந்தேன். தாங்கள் செய்த முடிவை என் தலைவி சுரமஞ்சரியிடம் அறிவிப்பேன்" என்று கூறி, மாலையுடன் கனகபதாகை சென்றாள்.

இரு சேடியரும், நிகழ்ந்ததைக் குணமாலையிடமும் சுரமஞ்சரியிடமும் சொல்லினர். சேடியர் மொழியைக் கேட்ட குணமாலை உடல் குலுங்கச் சிரித்து, "சுரமஞ்சரி! முன்புபோல் என்னுடன் நகைத்து விளையாடவேண்டும்" என்று சொன்னாள். குணமாலையின் மொழியையும் சீவகன் முடிவு செய்ததையும் கேட்ட சுரமஞ்சரி தீயைப் போல் கொதித்தெழுந்தாள். அவளுடைய புருவங்கள் ஏறிட்டு வளைந்தன. சீவகனோடு போர் செய்யப் புறப் படுவதுபோல் அவள் தனங்கள் பொருமி யெழுந்தன.

"குணமாலை! உன்னைக் காதலித்து என் வாசனைப் பொடியை இகழ்ந்த சீவகன், என்னை விரும்பி என் காலைத் தொழும்படிச் செய்வேன்" என்று வஞ்சினங் கூறிப் புனலாடாமல் கோபித்துக் கன்னிமாடம் புகுந்தாள்.

சுரமஞ்சரி கோபித்துச் சென்றமையால், குணமாலையும் புனலாடாது தன் மாளிகை சென்று கன்னி மாடத்தே வருந்தியிருந்து, "கடும் நட்புப் பகை காட்டும்" என்ற பழமொழி சுரமஞ்சரி விஷயத்தில் உண்மையாயிற்றே! அருக தேவா! இப்பகையைத் தீர்த்து முன்பு போலவே அவளுக்கும் எனக்கும் நட்பை உண்டாக்க வேண்டும்" என்று அருகனை வணங்கினாள்.

சீவகன்மீது கொண்ட கோபத்தால், 'ஆடவரைக் கண்டாலும் அவர்கள் பெயரைக் கேட்டாலும் உண வுண்ணேன்' என்று சபதம் செய்து கன்னிமாடத்தே நோன்பு பூண்டிருந்தாள் சுரமஞ்சரி. சுரமஞ்சரிக்கும் குணமாலைக்கும் நிகழ்ந்த பகையை கனகபதாகை மூலமாக அறிந்தாள் சுரமஞ்சரியின் தாயான சுமதி. குண மாலைக்கும் சுரமஞ்சரிக்கும் உண்டாகிய பகையையும், சுரமஞ்சரியின் கொடிய விரதத்தையும் சுமதி, தன் கணவன் குபேரதத்தனிடம் கூறி வருந்தினாள்.

குபேரதத்தன் சுரமஞ்சரிக்காக, அரசனிடம் சென்று பொருள் கொடுத்து அனுமதி பெற்றுச் சுரமஞ்சரி இருந்த வீதி முழுவதும் ஆடவரில்லாமலும் அவர்கள் பேச்சுக் கேட்காமலும் செய்து விட்டான். சுரமஞ்சரியின் விருப்பப்படி வீதிகளிலும் வீடுகளிலு முள்ள ஆண் பிரதிமைகளைக்கூட அழித்துப் பெண் பிரதிமைகளாகச் செய்வித்தான். சீவகன் தன்னை விரும்பும் பொருட்டு விரதம் பூண்டிருந்தாள் சுரமஞ்சரி.

## 10

# பெண்ணுயிர் காத்த பெரும் வீரம்

நீர் விளையாட்டிற்காகச் சென்ற ஆடவரும் மகளிரும் இராசமாபுரத்தின் சோலையிலேயே தங்கினர். இரண்டாம் நாளும் நீர் விளையாடி மகிழ்ந்தனர். சுரமஞ் சரியின் நட்பை மறுபடியும் பெற வேண்டுமென்று அருகக் கடவுளை வணங்கியபின் குணமாலையும் அவள்

சேடியுடன் நீர் விளையாட்டிற்கு வந்திருந்தாள். பூக்களாலும் தழைகளாலும் அலங்கரித்துக்கொண்ட மகளிரும் ஆடவரும் ஊஞ்சலாடியும், பந்து விளையாடியும், நாட்டியமாடியும், உணவருந்தியும், கொடி வீடு கட்டி அதில் அமர்ந்தும் பொழுது போக்கினர். நீர் விளையாடிய ஒரு மங்கை கீழே உட்கார்ந்து தன் கூந்தலை விரித்துச் சுற்றிலும் பரப்பி உலர்த்தி யிருந்தாள். அங்கே சென்றுகொண் டிருந்த ஆண் மயில், அம்மங்கையைத் தன் பெட்டை மயிலென்று எண்ணித் தழுவியது. உடனே அம்மங்கை நடுங்கித் தலை நிமிர்ந்து பார்த்தாள். மயில் மங்கையைக் கண்டதும் பயந்து ஓடியது. இந்தக் காட்சியைச் சோலையிலுள்ள யாவரும் பார்த்துப் பரிகசித்திருந்தனர்.

ஓரிடத்தில் நீர் விளையாட்டிற்கு வந்திருந்த அந்தணர்கள் தாம் உண்ணுவதற்குக் கொணர்ந்த சோற்றைக் கரையில் வைத்து விட்டு நீராடிக்கொண் டிருந்தனர். அப்போது பசியால் வருந்தி ஓடிக்கொண் டிருந்த நாய், அந்தச் சோற்றைக் கண்டு ஆவலுடன் கௌவி உண்ணத் தொடங்கியது. அதைக் கண்டு கோபங்கொண்ட அந்தணர்கள் கல்லையும், தடியையும் எடுத்துக்கொண்டு அந்த நாயைத்துரத்திச் சென்று அடித்தனர். நாய் அவர்களைக் கண்டு பயந்து குரைத்துக்கொண்டே அங்கிருந்த குளத்தில் தாவி நீந்தியது. நீந்துகின்ற நாயை விடாமல் சுற்றிவளைத்து, அதன் காலொடியும்படி அடித்துப் போட்டனர் அந்தணர். அப்போது, கள்ளைக்குடித்து மதிமயங்கிய ஒருவன், தன் இரண்டு மனைவியருடன் பிதற்றிக்கொண்டே வந்து அந்தணர்களை வழி மறித்து வைதான்.

“மூடர்களே! என் நாயைக் கொன்று விட்டீர்களே! அதன் உயிரைத் திரும்பக் கொடுங்கள். இல்லாவிட்டால் என் கைகளின் பாரத்தைத் தாங்குங்கள்; இரண்டும் இல்லாதுபோனால் இந்தக் கள் நிறைந்த குடத்தால் உங்கள் தலைகளை உடைப்பேன்” என்று கோபித்து அதட்டினான். அந்தணர்கள் மனம் நடுங்கி நின்றனர். அந்தச் சமயம் அவ்வழியே வந்துகொண்டிருந்த சீவகன், கள் குடியனைப் போகச் செய்து அந்தணர்களையும் வேறு வழியே போகச் செய்தான். பின்னர் அவ்விடத்தே போகின்ற உயிருடன் துறைத்துக் கொண்டு கிடந்த நாயைச் சீவகன் பார்த்ததும் மனமிரங்கி அதனருகில் அமர்ந்து தடவிக்கொடுத்தான். உயிர்போகும் தருணத்திலுள்ள அந்த நாயும் சீவகனைக் கண்டு மகிழ்ந்து வாலை ஆட்டியது. நாய் நற்கதியை அடையவேண்டும் என்றெண்ணிய சீவகன், அதன் காதில், பஞ்சநமஸ்காரம் என்னும் மஹாமந்திரத்தை உபதேசித்தான். உடனே உயிர் நீங்கிய அந்த நாயுடலினின்றும் ஓர் தேவபுருஷன் தோன்றி சீவகன் முன் நின்றான்.

“ஐயா! நீ யார் என்பதைக் கூறவேண்டும்” என்று வியப்புடன் சீவகன் கேட்டான்.

“அரசகுமர! உன் அருளால் நாயுடலை விட்டுத் தேவனானேன். சுதஞ்சணன் என்பது என் பெயர். யக்ஷருலகில் உள்ள சங்கவெண்மலையில் சந்திரோதயம் என்னும். நகரில் வாழ்பவன்” என்று சுதஞ்சணன் மொழிந்தான்.

“ஐயா! உன்னைக் கண்டு இணையில்லா இன்பத்தை யெல்லாம் பெற்றேன்” என்று சீவகன் மகிழ்வுடன்

"அரசகுமர! உன்னை யான் அறிவேன். உலக முழுவதும் நீ ஆளும்படி தருவேன்; உன் விருப்பம் என்ன?" என்று சுதஞ்சணன் கேட்டான்.

"சுதஞ்சண! பகைவரால் வளைக்கப்பட்டு யான் வருந்த நேரிட்டால் உன்னை நினைப்பேன்; வேறு வகையில் குறை சிறிதும் இல்லை" என்று சீவகன் சொன்னான்.

"அரசகுமர! என்னை நினைக்கும்போது உன்முன் நிற்பேன். என்னை உன் நண்பனுகவே எண்ணுவாயாக" என்று கூறிச் சீவகனைத் தழுவி விடைபெற்றுச் சென்றான் சுதஞ்சணன்.

சுதஞ்சணன் ஆகாயத்தே மறைந்து சென்றதும், இக்காட்சியைக் கண்ட பலரும் அதிசயமுற்று நின்றனர். அதை அறிந்த சீவகன், "ஐயன்மீர்! புண்ணியம் செய்யாத நாய் பஞ்ச நமஸ்கார மந்திரத்தால் தேவனுகுமோ? இது மாயமாக அல்லவா இருக்கிறது என்று எண்ண வேண்டாம்; நெருப்பில் போட்ட இரும்பு உருகிய பின், அதில் ரஸத்தை ஊற்றினல் மாற்றற்ற பொன்னுக விளங்குகிறதல்லவா? அது போல, நாய் தேவனயிற்று என்று எண்ணுங்கள்" என்று கூறி மகிழ்வித்தான். எல்லோரும் வியப்புடன் பேசிக்கொண்டே சென்றனர்.

நீர் விளையாட்டு முடிந்தமையால் நகர மாந்தர் யாவரும் தங்கள் தங்களுடைய வாகனங்களில் ஏறிக் கொண்டு, நகருக்குத் திரும்பிப் போகலாயினர். சீவகனும் தன் தோழர்களுடன் உல்லாஸமாகப் பேசிக்கொண்டு நகரத்திற்குச் சென்றுகொண்டிருந்தான். ஆடவரும் மகளிரும் ஆரவாரத்துடன் கூட்டம் கூட்டமாய்ப் போய்க் கொண்டிருந்தனர்.

அந்தச் சமயத்தில், வீதிவழியே, கட்டியங்காரனுடைய பட்டத்து யானையான அசனிவேகம் மதம் பிடித்துக் காலிற் கட்டிய சங்கிலியோடு கட்டுத்தறியையும் முறித்துக்கொண்டு முழங்கிய வண்ணம் ஓடி வந்தது. மதம் பிடித்த அந்த யானையின் முழக்கமும், உருவமும், ஓடுவதால் உண்டான அதிர்ச்சியும் எல்லோரையும் நடுங்கச் செய்தன. நீர் விளையாட்டு முடிந்து வீதி வழியே செல்லும் மகளிரும் ஆடவரும் வாகனங்களை விட்டு இறங்கி நாலா பக்கங்களிலும் ஓடினர். முத்துச் சிவிகையில் ஏறிச் சென்ற குணமாலை யானை ஓடி வருவதைக் கண்டு அஞ்சினாள்; உடனே சிவிகையைத் தூக்கி வந்தவர்கள் கீழே வைத்து விட்டு ஓடி விட்டனர். குணமாலையும் சேடியான மாலையும் சிவிகையினின்றும் வெளி வந்து ஓடுகையில் யானை அவ்வழியே வருவதைக் கண்டு நடுங்கி நின்றனர். யானை அருகில் ஓடி வருவதைக் கண்ட குணமாலை மயங்கி மூர்ச்சையுற்றுக் கீழே வீழ்ந்தாள். அதைக் கண்ட, சேடியாகிய மாலை, "இந்த யானை என்னைக் கொல்லட்டும்; அதற்குள்ளாக எந்த ஆண் மகனாயினும் குணமாலையைக் காப்பாற்றட்டும்" என்று எண்ணி, தன் இரு கைகளையும் தலைமேல் குவித்து நின்று, "இவ்விடத்தில், பெண்ணுயிரைக் காக்கும் ஆண் மக்கள் இல்லையோ! ஆண் மக்கள் இல்லையோ" என்று அலறியவளாய் யானை வரும் வழியே நின்றாள்.

தோழரோடு வந்துகொண் டிருந்த சீவகன் இந்தக் காட்சியைப் பார்த்தான்; அவன் மனம் பெண்ணுயிரைக் காக்க முற்பட்டது; "பெண்ணின் உயிரைக் காப்பாற்றாமல் அஞ்சி வாழும் வாழ்வைக் காட்டிலும் இறந்து போதலில் ஒரு குறையுமில்லை; இதனால் கட்டியங்கார

னுக்கும் எனக்கும் பகை உண்டானால் அது பெண்ணுயிரைக் காட்டில் பெரிதல்ல” என்று உறுதி செய்து தோள்வீங்கும்படி உடலைக் குலுக்கித் தலை நிமிர்ந்து கச்சங்கட்டி, யானைமுன் முழங்கி ஓடினான். குணமாலையை நோக்கி ஓடிவந்த யானை அவளை விட்டுத் தன் எதிரே வந்த சீவகனை எதிர்த்தது. சீவகன் முழக்கத் துடனே பூமியினின்றும் தாவிச் சிங்கம் போன்று யானையின் நெற்றியில் குதித்தான். அதன் தந்தங்களை, கைகளாலும் கால்களாலும் குத்தி உதைத்துச் சண்டை செய்தான். யானையோடு பொருதுகொண் டிருந்த சீவகன், “குணமாலையை அப்புறம் எடுத்துப் போங்கள்” என்று கூவினான். உடனே, மாலையும், பல மகளிரும் குணமாலையை எடுத்துச் சென்று சைத்தியோபசாரம் செய்தனர். குணமாலை, மனமயங்கியிருந்தாலும், ‘குணமாலையை அப்புறம் எடுத்துச் செல்லுங்கள்’ என்று சீவகன் கூறியதைக் கேட்டாளாதலால், பெண் உயிர் காத்த பெரும் வீரத்திற்கு மனமுருகி யிருந்தாள்.

சீவகன்மீது அடங்காக் கோபம் கொண்ட யானை துதிக்கையால் அவனைச் சுழற்றி எறிவதற்குத் துதிக் கையைத் தூக்கியது. சீவகன் யானையின் இயல்பறிந்தவனாதலால், உடலைச் சுருக்கிக் குனிந்து யானை அறியாமல் பின்புறமாகத் தாவிக் குதித்து ஓரிடத்தில் மறைந்திருந் தான். யானை சீவகனைக் காணாமல் வேறு வழியே ஓடி விட்டது.

யானை சென்ற பின்பு, குணமாலையிருக்கும் இடத் தைச் சீவகன் அடைந்தான். தன் உயிரைக் காப்பாற்றிய சீவகனுடைய ஆண்மையை எண்ணி அவனை நினைந்து கண்ணீர் ததும்ப உட்கார்ந்திருந்தாள் குணமாலை.

குணமாலையின் நிலையை அறிவதற்கு அங்கு வந்த சீவகனைக் கண்டதும், நாணமடைந்து எழுந்து பூங்கொடியைப் போல் சாய்ந்து நின்றாள் குணமாலை. சீவனுக்கு நன்றி பாராட்டுபவள் போல தன்னுடைய புன்னகை ததும்பும் முகத்தால் சீவனுக்கு விருந்து செய்தாள். சீவகனுடைய கண்களும் குணமாலையின் கண்களும் ஒன்றையொன்று பருகுவன போல நோக்கின. இருவருடைய கண்களும், 'கண்ணோடு கண் நோக்கிய பின், வாய்ச் சொற்கள் வேண்டியதில்லை!' என்பதைப் புலப்படுத்தின. சட்டெனச் சீவகன் திரும்பித் தன் தோழருடன் மாளிகைக்குச் செல்லலானான். குணமாலை சீவகன் சென்ற வழியையே நோக்கியிருந்து அவ்விடம் விட்டுத் தன் சேடியுடன் மாளிகை சென்று கன்னிமாடம் புகுந்திருந்தாள். சீவகனுடைய ஆண்மையும் அழகும் வடிவமும் குணமாலையின் உள்ளத்தே பதிந்து வருத்தின. சீவகன் நோக்கிய நோக்கம் அவள் உயிரைக் கணந்தோறும் வருத்திக்கொண்டிருந்தது. குணமாலையின் முகவாட்டத்தையும் மனச் சோர்வையும் கண்ட அவள் தாய் விநயமாலை, "வருத்தத்திற்குக் காரணம் யாது?" என்று கேட்டாள். யானை கொல்ல வந்த செய்தியைச் சொல்ல அஞ்சிய சேடியர் வாய்பேசாதிருந்தனர். அவர்கள் பேசாதிருந்தமையால், "சோலைக்குச் சென்று தோழியருடன் நீர் விளையாடி வந்த வருத்தமே தான்" என்று எண்ணிய விநயமாலை, குணமாலையைத் தழுவி அவள் கண்ணீரைத் துடைத்துத் தேற்றினாள்.

"குணமாலை, உன்னுடைய கிளி, 'எனக்கு இன்னைத்தே பால் கொடுக்கும் குணமாலையைக் கூப்பிடுங்கள்' என்று அழைத்துக்கொண்டே இருக்கிறது. அங்கே

சென்று அதன் வருத்தத்தை மாற்று" என்று விசய மாலை கூறிச் சென்றான். குணமாலை, கிளியின் கிளை வு வந்தவுடன் தனியே எழுந்து சென்று 'யானையை அடக்கி என் உயிரைக் காப்பாற்றிய வீரனைக் காண்பது எந்நாள்?' என்று புலம்பினாள். பின்னர் கிளி இருக்கு மிடம் சென்று அதை நோக்கி, "கிளியே! உன்னையல்லா மல் எனக்கு வேறு துணையில்லை. யான், பிழைத்திருக் கும்படி, யானையிடமிருந்து என் உயிரைக் காப்பாற்றிய காதலனிடம் நீ தூது சென்று வர வேண்டும்" என்று கூறினாள்.

"நங்காய்! வருந்தாதே, உன் காதலன் இந்நாட்டில் இருக்கின்றானானால், இடம் முதலியன சொல்லு" என்று தன் மழலை மொழியால் கிளி கூறியது.

குணமாலை மனமகிழ்ந்து, தன் காதலை வெளிப்படை யாகக் கூறி, சீவகன் இருக்குமிடத்தை உரைத்துக் கிளியைத் தூதாக அனுப்பினாள்.

கிளி, குணமாலையின் காதலைச் சொல்லுவதற்குச் சீவகன் மாளிகையை நோக்கிப் பறந்து சென்றது.

## 11

# தூது சென்ற கிளி

சீவகனுடைய உள்ளத்தே யானைக்குமுன் நடுங்கி வீழ்ந்த குணமாலையின் தோற்றமும் அவள் தன்னைப் பார்த்த பார்வையும் பதிந்துவிட்டன. மாளிகையில் தனியே இருந்த சீவகன், பலவகை வர்ணங்களைக் கிண்ணத்தில் கரைத்து வைத்துக் கொண்டு குணமாலை

யின் உருவத்தைச் சித்திரப் பலகையில் எழுதிக்கொண் டிருந்தான். துரத்தி வந்த யானைக்குமுன் குணமாலை அஞ்சி நின்ற நடுக்கத்தையும் அவள் தன்னை நோக்கிய காதல் நோக்கையும் சித்திரத்தில் வரைந்தான். யானை யிடத்து அச்சத்தால் குணமாலை உடல் சோர்ந்து, தன் மார்பிலிருந்து நழுவி விழும் ஆடையையும் அறியாது நின்ற அந்நிலையையும் வரைந்து அதைத் திருத்தலாகாது என்று எண்ணி முத்து மாலையையும் எழுதிச் சித்திரத் தின் அழகைப் பார்த்து மகிழ்ந்தான்; குணமாலையின் உருவப் படத்தைக் கையிலெடுத்து மார்போடணைத்து கண்ணீர் ததும்ப அதையே நோக்கியிருந்தான்.

அந்தச் சமயத்தில், குணமாலையின் தூதாக வந்த கிளி, சீவகனைக் கண்டதும் துணுக்குற்றுச் சப்தம் கேட் காமல், பறந்து அங்கிருந்த தூணில் தங்கியது. சீவகன் கையிலுள்ள அழகிய உருவத்தைக் கண்டதும் அதி சயித்து மீண்டும் உற்று நோக்கியது. சித்திரத்தில் உள்ள உருவம் குணமாலையின் வடிவமேயென்று அறிந்தது. 'குணமாலையிடத்துக் காதல்கொண்டு அவள் உருவத்தை எழுதிக் கண்ணீர் விட்டு மனமுருகும் இவன், சீவகனேதான்' என்று நிச்சயித்து உவகை கொண்டது. உடனே குணமாலையின் காதலைச் சீவகனுக்கு உணர்த்த இது நல்ல தருணம் என்று எண்ணியது.

அப்போது, அதற்குத் தடையாகச் சீவகன் மனைவி காந்தருவ தத்தை அங்கு வரலானாள். அவளைக் கண்ட கிளி, வருத்தமும் அச்சமும் அடைந்து, பக்கத்திலிருந்த சண்பகமரத்தில் பறந்து உட்கார்ந்து, 'இவள், தெய்வ மங்கையோ! திருமகளோ!' என்று அதிசயித்து உற்றுப் பார்த்திருந்தது.

விரகதாபத்தால் மனம் வெதும்பி, உடல் நடுங்க, சீவகனைக் காண்பதற்கு ஆவலுடன் வந்தாள் காந்தருவ தத்தை. வந்தவள், பூக்கள் பரப்பிய படுக்கையில் சீவகன் அமர்ந்திருப்பதைக் கண்டு, பின்னர், அவன் கையில் இருந்த படத்தை உற்றுப் பார்த்துக் கூற்றாள்.

"வீரரே! இந்த உருவம் யாருடையது? தாங்கள் வரைந்த வடிவமோ?" என்று உதடு துடிக்கக் கேட்டாள். அவள் கேட்கும்போது அவளுடைய மார்பு வெடித்து விடும்போல் பொருமியது.

படத்திலே உள்ளத்தையும் பார்வையையும் ஒருங்கே பதிய வைத்திருந்த சீவகன், காந்தருவ தத்தையின் பேச்சைக் கேட்டதும் மனங் கலங்கித் திடுக்கிட்டுப் பார்த்தான். உள்ளே புன்னகை செய்து, "நங்காய்! இது ஓர் இயக்கியின் வடிவம்" என்று மறுமொழி றன்.

குணமாலையைப் பல முறை பார்த்தவளாதலால் சீவகன் எழுதிய வடிவம் குணமாலையினுடையது என்பதைக் காந்தருவதத்தை நன்கு உணர்ந்தாள்.

"கூந்தலும் ஆடையும் நழுவ நின்ற இந்தப் புதிய இயக்கி, குணமாலை யென்பது எனக்குத் தெரியும். நம் மனத்தை இயக்கிய இவள் இயக்கிதான். நீங்கள் பொய் கூறவில்லை. உண்மையேதான் சொன்னீர்" என்று கடுத்த முகத்துடன் மொழிந்தாள் காந்தருவ தத்தை. சந்திர மண்டலத்தே முத்துக்கள் தோன்றியன போல், அவள் முகத்தே வியர்வை துளித்தன. புருவங்கள் வில்லைப் போல் வளைந்து நிற்க, கண்களில் நீர் ததும்பி

மார்பில் வீழ்ந்து சிதறப் பெருமூச்சு விட்டு நின்றான் அவன்.

காந்தருவதத்தை ஊடல் கொண்டதைக் கண்ட சீவகன் எழுந்து நின்று புன்முறுவலுடன், "நங்காய்! நம் இருவருக்கும் உடம்பு இரண்டல்லது, உன் உயிரே எனக்கு உயிராயுள்ளது. இதை நீ அறிந்தவள். கங்கை நீரை விரும்பிய அன்னப் பறவை மணலூற்று நீரை விரும்பாது; ஆதலால் நீ ஊடலை விட்டுவிடு" என்று ஆறுதல் கூறினான்.

தன்னை யல்லாது பிற மங்கையின் பெயரைக் கூறக் கேட்டாலும் மனம் சகியாத காந்தருவதத்தை, சீவகன் கூறிய மொழியால் மிக்க கோபம் கொண்டாள். குண மாலையின் சித்திரப் படத்தை உற்று நோக்கித் தனக்கு எதிரான அழகையும் பருவத்தையும் குணமாலையிடத் துக் கண்டமையால், சீவகனிடம் அடங்காத ஊடல் கொண்டாள். உடனே தன் உடலில் அணிந்திருந்த ஆபரணங்களையும், பூ மாலைகளையும் எடுத்துச் சிதற எறிந்து கோபத்துடன் அந்தப்புரம் சென்று விட்டாள்.

காந்தருவதத்தை ஊடல் கொண்டு சென்று விட்டதைக் கண்ட கிளி, மகிழ்ந்து, சண்பக மரத்தை விட்டுப் பறந்து சீவகன் பாதத்தில் வந்து தங்கி, "நின் பாதம் வாழ்க" என்று பேசியது. கிளியின் குரலையும் அதன் பேச்சையும் கண்டு கேட்ட சீவகன், அதிசயித்துத் தன் கையை நீட்டினான். கிளி பறந்து அவன் கையில் அமர்ந்தது.

"கிளியே! நீ எங்கு வந்தாய்" என்று சீவகன் அன்புடன் கேட்டான். "குமர! யானையை யடக்கிய வீரனைக் கண்டு அவன் காதலை அறிந்து வா என்று குணமாலை

கூறிய வார்த்தையுடன் வந்தேன்" என்று கிளி கூறியது.

"கிளியே! யானையுண்ட விளங்கனி போல் என் உடலில் ஒன்றுமில்லாமல், என் உள்ளத்தையும் ஆண்மையையும் ஒரு பார்வையாலே கவர்ந்துகொண்ட கள்வி அன்று நடுங்கி நின்றாள்; அவள் நிலை எவ்விதம் உள்ளது?" என்று சீவகன் கேட்டான்.

"கன்னிமாடத்தே பூம்படுக்கையில் படுத்து உணவும் உறக்கமும் இல்லாமல், உன்னை நினைந்து புலம்புகிறாள். கன்னியர் தம் காமத்தைப் பிறரிடம் சொல்லாதாதலால் யான் கேட்டாலும் விளங்கச் சொல்லாள். யான் மக்கள் சாதி அல்லாமையால் அவள் வருத்தத்தை அளவிட்டு உரைக்கவும் அறியேன்" என்று கிளி கூறியது.

குணமாலையின் காதல் மழலைச் சொற்களால் கிளி மொழிந்ததைக் கேட்டுச் சீவகன் மகிழ்ச்சி கொண்டான்.

"கிளியே! குணமாலையின் வார்த்தையாகிய மருந்தை யான் பிழைக்கும்படித் தந்த நீ விரும்பியதைக் கேள்" என்று சீவகன் கேட்டான்.

"வீர, உன்னைப்போல் குணமாலையும் வருந்துகிறாள். அவளுக்கு உன் தோளே இனிய மருந்து. யான் பரிசாக விரும்புவது இதுதான்" என்று திருத்தமாகப் பேசியது கிளி.

"கிளியே! குணமாலையின் உறவினர் மிக்க பொருளையும் ஊரையும் சீதனமாகத் தரவேண்டுமென்று விரும்பினாலும் அவற்றைக் கொடுத்து அவளை யான் சேர்ந்து மகிழ்விப்பேன். இவ்வார்த்தை தவறாது. நீ சென்று இதனைச் சொல்" என்று சீவகன் கூறினான்.

"குமர! குணமாலையின் வருத்தம் நீங்கும்படி உன் வார்த்தையை மட்டும் யான் சென்று கூறுதல் முடியாது.

அதனால் அவள் வருத்தமும் நீங்காள். உன் காதல் உண்மை யென்று அவள் உணரும்படி நீ எழுதிய திருமுகத்தையும் (கடிதம்) உன் மோதிரத்தையும் கொடுக்கவேண்டும்" என்று கிளி கேட்டது. கிளியின் பேச்சுத் திறமையைக் கேட்ட சீவகன் அதைக் கொண்டாடி, பிறர் அறியாமல், தான் எழுதிய திருமுகத்தைத் திணைக்கதிரில் வைத்து, அதையும் தன் பெயர் எழுதிய மோதிரத்தையும் கொடுத்துக் கிளியை அனுப்பினான். கிளி அவற்றைப் பெற்றுக்கொண்டு குணமாலையின் மாளிகை நோக்கிப் பறந்து சென்றது.

பின்னர், சீவகன் அந்தப்புரம் சென்றான். அங்கே போர்வையால் போர்த்திக்கொண்டு கோபத்துடன் படுத்திருந்த காந்தருவதத்தையை வணங்கி இனிய சொற்களால் அவள் ஊடலை நீக்கினான். காந்தருவதத்தை கோபம் நீங்கிச் சீவகனுடன் மகிழ்ந்திருந்தாள்.

*   *   *   *

கன்னிமாடத்தே கிளியின் வரவை எதிர்நோக்கி வருந்தி யிருந்தாள் குணமாலை.

"கிளி என் காதலனைக் கண்டதோ! காணமல் வருந்துகின்றதோ! காதலனைக் கண்டு என் நிலையைச் சொல்லியதோ! என் நிலையை அவர் உணரும்படிக் கூறிற்றோ! கிளிக்கு என் காதலர் இனிய வார்த்தையைக் கூறினாராயின் அது கிளிக்கு உபசாரமன்று; என் உயிரைக் கொடுத்தாரென்றே கூறுவேன். 'கிளியோடு பேசாது போனால் யானும் சுரமஞ்சரியைப் போல் தவம் செய்தாயினும் அவரை அடைவேன். ஆ! நான் இறந்து போவேனோ! கிளி பேதையாயிற்றே! அது வருவதற்குள் நன்மை தீமையைக் கடலிழைத்து அறிகிறேன்" என்று

பிதற்றிய குணமாலை, முத்துக்களை வைத்த வட்டத்தை இழைத்தாள். 'இது தீமையை உணர்த்தினல் கிளி வருவதற்குள் உயிர் நீங்குமே!' என்ற எண்ணம் உண்டாகிக் கடலிழைத்தலைக் கைவிட்டுக் கிளியின் வரவை எதிர்பார்த்திருந்தாள் குணமாலை.

அப்போது, கிளி, குணமாலையின் முன் பறந்து வந்து உட்கார்ந்தது. கிளி என்ன சொல்லுகிறதோ என்று கவலையுடன் அதை உற்றுப் பார்த்துப் பெருமூச்சு விட்டாள் குணமாலை. கிளி, முதலில் தான் கொணர்ந்த மோதிரத்தைக் கொடுத்தது. குணமாலை ஆவலுடன் அதை வாங்கிக் கண்ணில் ஒற்றிக்கொண்டு கையில் மறைத்து வைத்துக்கொண்டாள். பின்னர் திருமுக மிருந்த தினைக்கதிரைக் கொடுத்தது கிளி. தினைக்கதிரை வாங்கிக் கூந்தலில் சூடி அடங்கா மகிழ்ச்சியோடு கிளியைத் தன் வயிற்றில் இறுக அணைத்துக் கொஞ்சினள். கிளி, சீவகன் மொழிந்தவற்றையும், அவன் எழுதிய சித்திரப் படத்தைப் பற்றியும் கூறியது. பின்னர், குணமாலை கிளியை உயர்ந்த ஆசனத்தில் இருத்திச் சீவகன் அனுப்பிய மோதிரத்தை அணிந்துகொண்டு கிளிக்குப் பாலன்னத்தை ஊட்டிக் கூட்டில் உறங்கச் செய்தாள்.

பிறகு, சீவகன் எழுதிய திருமுகத்தைத் தினைக் கதிரிலிருந்து எடுத்து, வாசித்தாள்:

"சீவகன் ஓலையைக் குணமாலை காண்க; கிளியின் வரவால் யான் வருத்தம் நீங்கினேன். நீயும் வருத்தம் நீங்குவாயாக. பொருளையும், ஊரையும் சீதனமாகக் கொடுக்க வேண்டுமென்று உன் உறவினர் விரும்பினல், அவைத அளித்து உன்னைச் சேர்வேன். அவ்விதம் செய்யேனுல், அஞ்சின பகைவர்மீது படைக்கலம்

விட்டனுளேன்" என்ற வாசகங்களைக் குணமாலை படித்து மனம் பூரித்திருந்தாள்.

அந்தச் சமயத்தில் குணமாலையின் செவிலித்தாய் (வளர்த்த தாய்) அங்கு வந்தாள்.

"குணமாலை! உன் அம்மான் மகன் பொற்குவிய இடன் உன்னை மணப்பதற்கு வந்து காத்திருக்கிறான். உன் தந்தையும், நேற்று அதற்கு இணங்கியவர்போன்று பேசினார்......" என்று செவிலித்தாயே கூறிய வளவில், குணமாலை, செவிலித்தாயின் வாயைப் பொத்திக் கோபம் கொண்டாள்.

"யானையிடமிருந்து என் உயிரைக் காத்த வீரன் சீவக சாமிக்குக் கூலியாக, என்னை ஏவல் செய்யக் கொடுப்பதல்லாமல், வேறு ஒருவனுக்குக் கொடுக்க எண்ணியது ஏன்? என்னைச் சீவகசாமிக்கு கொடுக்கா விடில் 'யான் இறத்தல், தவத்தைச் செய்தல்' என்ற இரண்டிலொன்றைச் செய்வேன்" என்று கூறிக் கண்ணீர் விட்டாள் குணமாலை.

"உன் மனம் அவனிடம் சென்றது தக்கதே, யான் அறியாமல் கூறினேன்; நீ கருதியவாறே நடக்கும்" என்று கூறிச் செவிலித்தாய் தேற்றினாள். பின்னர் குணமாலையின் தாயான விநயமாலையிடம் நிகழ்ந்ததைக் கூறினாள். விநய மாலை மனமகிழ்ந்து தன் கணவன் குபேரமித்திரனிடம் அதைக் கூறினாள். குபேரமித்திரன், நான்கு அறிஞரை கந்துக்கடன் சம்மதியைப் பெற்று வரும்படி அனுப் பினான். குபேரமித்திரன் எண்ணத்திற்குக் கந்துக் கடன் உவகையோடு சம்மதித்தான். உடனே குண மாலைக்கும் சீவகனுக்கும் மணம் நிகழ்ந்தது. சீவகன், குணமாலையின் நீங்காத இன்பத்தே மயங்கிப் பொழுது போக்கியிருந்தான்.

# 12

# சிறையும் விடுதலையும்

கட்டியக்காரனுடைய பட்டத்து யானையான அசனி வேகம், சிலகளால் அடக்கப்பட்டது முதல் உணவுண்ணாமலும் உறங்காமலும் கண்ணீரொழுகக் கோபத்துடன் நின்றுகொண்டிருந்தது. பகைவனுக்குத் தோற்றுப் புறங்காட்டிய வேந்தனைப்போலத் தலையைத் தொங்க விட்டுப் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தது. பல நாட்களாக யானை, உணவும் உறக்கமுமில்லாமல் வருந்தியிருப்பதை அறிந்த கட்டியக்காரன் பாகனை அழைத்து, "யானைக்கு உண்டாகிய துன்பம் என்ன?" என்று கோபத்துடன் கேட்டான். கட்டியக்காரன் கோபத்துடனிருப்பதைப் பார்த்த பாகன், மனங்கலங்கி, நீர் விளையாட்டன்று சிலகளால் யானை அடக்கப்பட்ட செய்தியை விரிவாகக் கூறினான்.

பாகன் கூறிய மொழியைக் கேட்டவுடன், கையோடு கையை மோதிக் கண்கள் கனலக் கடுங்கோபமுற்றான். உடனே தன் மைத்துனன் மதனனைக் கூப்பிட்டான்.

"மதனா! பசுக்களுக்காக வேடரோடு பொருது வென்றதையும், இசைப்போருக்கு வந்த அரசர்களை வென்றதையும் எண்ணி இன்று என்னுடனும் போர் செய்ய நினைத்து என் யானையை அடக்கின செட்டி மகனை, ஓடிப்பிடித்து வாருங்கள்! அவன் ஆண்மையை அழித்து விடுகிறேன்" என்று கட்டியக்காரன் கட்டளையிட்டான். கட்டியக்காரனைக் காட்டிலும் பன்மடங்கு கோபம்

கொண்ட மதனன், வீரர் நூற்றுவருடன் சீவகனைப் பிடித்துவரப் புறப்பட்டான். யமதூதர்களைப்போல ஆயுதம் தாங்கியவர்களாய் மதனனும் வீரரும் சீவகன் மாளிகையில் புகுந்தனர். உமையும் உருத்திரனும்போல சீவகனும் குணமாலையும் ஒன்றாய்க் கூடியிருந்த மாளிகையில் வீரர் புகுந்தவுடன், சேடியர் ஓடிச்சென்று சீவகனிடம், "அரசன் வீரர் வருகின்றனர்" என்று தெரிவித்தனர். அதற்குள்ளாகச் சிங்கத்தைப்பிடிக்க வந்த நரிக் கூட்டங்களைப்போல் மதனன் முதலிய வீரர் உள்ளே வந்துவிட்டனர்.

சீவகன், சேடியர் சொல்லையும் வீரர் ஆரவாரத்தையும் கேட்டுக் கோபம் கொண்டு, ஆண் சிங்கம் பெண் சிங்கத்துடன் குகையிலிருந்து புறப்படுவதுபோல் குணமாலையுடன் பள்ளியறையினின்றும் வெளிப்பட்டான். வீரர்களைக் கண்ட குணமாலை இடியுண்ட சிறு பாம்பு போல நடுக்கமுற்று நின்றாள். வீரர்களின் முகக் குறிப்பால் அவர்கள் வந்த காரியத்தை அறிந்த சீவகன், வில்லையும் அம்பறாத் தூணியையும் கையில் தாங்கினான். "இங்கு வந்த காரியத்தைச் சொல்லுங்கள்" என்று கேட்டான், தலை நிமிர்ந்து.

"'எனக்கடங்காமல், அனங்கமாலையை விரும்பியவனும், என் யானையை அடக்கி அரசர் தொழிலை நடத்துகின்றவனுமான சீவகனுக்கு வாழ்நாள் இன்றோடு முடிவுற்றது. அவனைச் சிறைப்பிடித்து வருக' என்று எம் அரசன் கட்டளையிட்டான். ஆதலால் அரசன் பாதத்தை அடைய வருக" என்று மதனன் ஏவலால் சில வீரர்கள் மொழிந்தனர்.

கட்டியங்காரன் இட்ட கட்டளையைக் கேட்டதும், திரிபுரமெரித்த முக்கண்ணன் போல் சீவகன் புன்னகை செய்து கண் கனலப் பார்த்தான்; "நந்தட்ட! கட்டியங்காரன் வாழ்நாள் முடிவுற்றது; நீ போய்த் தேரைச் சித்தம் செய்வாயாக" என்று சீவகன் நந்தட்டனுக்குக் கட்டளையிட்டான். நந்தட்டன் சீவகன் மொழிப்படி விரைந்து சென்றான்.

சீவகன் யானையை அடக்கியதால் கட்டியங்காரன் கோபங்கொண்டு வீரர்களை அனுப்பியதையும் சீவகன் மாறாகப் போர்க்கோலங்கொண்டு கோபித்து நிற்றலையும் பார்த்த கந்துக்கடன் மனங் கலங்கினான். 'கட்டியங்காரனோடு பகை கொள்ளல் பெருந் தீங்கு தரும். அவனுக்கு அடங்கிக் கட்டுப்பட்டுச் சென்றால் கோபம் நீங்குவான்; அதுவே சீவகன் செய்யத்தக்கது' என்று நிச்சயம் செய்தான் கந்துக்கடன்.

கோபத்துடன் நின்று போர் செய்வதைப்பற்றி எண்ணிய சீவகன், 'கட்டியங்காரனோடு ஒரு வருடம் முடியும் வரையில் பகைகொள்ளேன்' என்று அச்சணந்தியாசிரியரிடம் தான் கூறியிருப்பதை நினைந்து போர் செய்தலைத் தவிர்த்துப் பொறுமையுடன் நின்றான்.

சீவகன், கோபம் தணிந்திருப்பதைக் கண்ட கந்துக்கடனும் சுநந்தையும் இது நல்ல தருணமென்றெண்ணி, "சீவக! அரசனுக்கு அடங்கிக் கட்டுப்படுதலே இப்போது நன்மை தரும்; எங்களுக்காக உன் வீரத்தையும் வன்மையையும் நீ அடக்கிக்கொண்டு கட்டியங்காரனிடம் சென்றால் உலகம் உன் ஆண்மையைக் குறைகூறி இகழாது" என்று கூறினர்.

சீவகன், தன் ஊழ்வினையை எண்ணி, கட்டியங்கார னுடைய ஆணைக்குக் கட்டுப்பட்டான். உடனே மதனன் முதலியோர்கள், சீவகனைச் சூழ்ந்து சிறைப்படுத்தி அழைத்துச் செல்ல முற்பட்டனர்.

சோமாலையும் சுநந்தையும் நிலத்தில் வீழ்ந்து வாய்விட்டு அரற்றுவதைக் கண்ட சீவகன், அவர்களுக்கு ஆறுதல் கூறிவிட்டு வீரருடன் நடந்து சென்றான். சீவகன், கட்டியங்காரனுடைய வீரர்களால் சிறைப்பட்டு வீதி வழியே செல்லுதலைக் கண்ட நகர மாந்தர் கண்ணீர் விட்டு வருந்தினர். சீவகன் பெருமைக்கு இது குறை என்று வருந்தினர்.

"நாகரிகனை சீவகனை நாம் பார்த்தால், சிறைப் பட்டுச் செல்லும் அவன் நம்மைப் பார்க்க வெட்கப் படுவான். ஆதலால் அவனைப் பார்க்காதீர்கள்" என்று பலர் மொழிந்தனர்.

"சீவனுக்கு இந்தத் தீவினை ஏன் வந்தது" என்று கூறினர் சிலர்.

"சீவகன் கோபித்து எழுந்தால், மதனனும் வீரரும் உயிருடனிருப்பரோ?" என்று பேசிக்கொண்டனர் பலர்.

"இவன் உலகத்தையே காக்கப் பிறந்தவனாயிற்றே" என்று பலர் இரங்கிச் சொல்லினர்.

இவ்வாறு நகர மாந்தர் பேசுவதைக் கேட்ட சீவகன் மனமகிழ்ந்து, "என்முன் நிற்க யமனும் அஞ்சுவான். ஆதலின் மண்ணுலகத்து என்முன் நிற்பவரில்லை; சிங்கத்தைக் கொல்வது எளிது. என்னை வெல்ல முடியாது; நீங்கள் வருந்தவேண்டாம்" என்று ஆறுதல் கூறிச் சென்றான். சிலம்பி நூலால் கட்டப்பட்ட சிங்கம்போல்

சீவகன் செல்வதைக் கண்ட நகரமாந்தர் துக்கக்கடலில் அழுந்தினர்.

* * * *

கட்டியங்காரனுடைய கோபத்தைத் தணிக்க எண்ணிய கந்துக்கடன் பன்னிரண்டு கோடி பொற்காசு களைக் கொண்டு சென்று அவன் பாதங்களில் வைத்து வணங்கினான்.

"அரசே! தங்கள் யானை பெண்ணைக் கொன்றால் அந்தப் பழி தங்களை அடையுமே என்று சீவகன் யானையை அடக்கிப் பெண்ணைக் காத்தான். இவ்விதம் செய்தது நீதியன்றோ! இது நீதியல்லாது போனால் உலகத்தில் நீதியென்பது வேறு என்ன இருக்கிறது?" என்று கந்துக்கடன் மொழிந்தான். அதற்கு மறுமொழி கூறாமல் கட்டியங்காரன் இருந்தான்.

"அரசே! உயிரைக்காத்தல் அரசன் கடமையென் பதை அறியாத சீவகன், முன்பு பசுக்களைக்காத்து உங்களுக்கு வெற்றி தந்ததுபோல் இக்காரியத்தையும் செய்தான். இது குற்றமென்றெண்ணினால் பிழை பொறுக்க வேண்டும்" என்று மீண்டும் சொன்னான் கந்துக்கடன். அதற்கும் மறுமொழி சொல்லாமல் கோபத்துடன் அமர்ந்திருந்தான் கட்டியங்காரன்.

"அரசே! எனக்குத் தொன்றுதொட்டு வந்த பொருள்களையெல்லாம் தந்து விடுகிறேன். சீவகன் பிழையைப் பொறுத்து அவனை விட்டு விடுக" என்று வேண்டிக் கொண்டான் மீண்டும். அதுகாறும் வாய் பேசாதிருந்த கட்டியங்காரன் கடுங்கோபத்துடன் கந்துக் கடனை விழித்துப் பார்த்தான்.

"கந்துக்கடா! உலகமறியும்படி, சீவகனால் வருந்தியிருக்கும் என் யானை அசனிவேகத்தின் தந்தமாகிய எழுத்தாணியால், அவன் மார்பாகிய ஓலையில் என் வெற்றியை எழுதுவிப்பேன். நீ வருந்தாமல் வீடு செல்: இனி சீவகனைக் கனவிலும் எண்ணாதே" என்று கர்ச்சித்தான் கட்டியங்காரன்.

"சீவகனை யானையால் கொல்லுவிப்பேன்" என்ற கட்டியங்காரன் குறிப்பு மொழியால் கந்துக்கடன் அறிவு கலங்கி விஷமுண்டவன் போலானான். பின்னர், முனிவன் முன்பு கூறிய மொழியை நினைந்து ஆறுதலடைந்தவனாய் தன் மாளிகைக்கு வந்தான். அழுதுகொண் டிருந்த சுநந்தை, கந்துக்கடனைக் கண்டதும், "சீவகன் நிலை என்ன ஆயிற்று?" என்று ஆவலுடன் கேட்டாள்.

"சுநந்தை! வருந்தாதே, முன்பு நம் வீட்டிற்கு அதிதியாக வந்திருந்த முனிவன், சீவகன் நமக்குக் கிடைக்கப் போவதையும், அவன் பிறப்புத் தொடங்கித் துறந்துபோகும் அளவும் நடக்கும் காரியத்தையும் கூறிய பின்னர், 'நிகழும் துன்பமும் உண்டு; உங்களால், அவன் விரம் கட்டுப்பட்டுச் சிறைப்படுவான். அப்போது அவனை ஓர் யக்ஷன் எடுத்துப் போவான். எட்டு மாதங்களுக்குப் பின்னர் அவனைக் காண்பீர்கள்' என்று மொழிந்து சென்றான். ஆதலால் வருந்தாதே" என்று கந்துக்கடன் சொன்னான். உயிரற்ற பிணம் போல் இருந்த சுநந்தையும் குணமாலையும் கந்துக்கடன் கூறிய முனிவன் மொழியால் ஆறுதலுற்று வருத்தம் நீங்கினர்.

* * * *

சீவகன் சிறைபட்டானென்று கேட்ட பதுமுகன் முதலிய தோழர் துயரக்கடலில் ஆழ்ந்தனர். எல்லாருக்கும்

கட்டியங்காரன் மீதும் மதனன் மீதும் கோபம் உண்டாகியது. பதுமுகன் கோபத்துடன் ஒற்றறியும் ஒரு வீரனை அழைத்து, "சீவகன் நிலையை அறிந்து வா!" என்றனுப்பினான்.

பின்னர் தோழர்களைப் பார்த்து, "நண்பர்களே! கட்டியங்காரனுடைய கழுதை சீவகனுடைய புலியைச் சிறைப் படுத்தி விட்டானென்று நினையாதீர்; கந்துக்கடனும் சுநந்தையுமே, சீவகனைச் சிறைப்படும்படி செய்திருப்பர்" என்று பதுமுகன் கூறும்போது, ஒற்றறியச் சென்ற வீரன் ஓடிவந்து, "ஐய! சீவகன் வீரர்களிடமே சிறைப்பட்டு வீதிவழியே செல்கிறான். கந்துக்கடனே சிறைப்படும்படி செய்தனனாம்" என்று கூறினான்.

"நண்பர்களே! யான் சொல்லியபடியே ஆயிற்று! இனி, சீவகனை மீட்டுவர என்ன உபாயம் செய்ய வேண்டும்? விரைவில் சொல்லுங்கள்" என்றான் பதுமுகன்.

"நண்ப! ஊரைப் பல இடங்களில் தீயிட்டுவிட்டு, மதனனைக் கொன்று சீவகனை மீட்டுவிடலாம்" என்று புத்திசேனன் சொன்னான்.

அவ்விதமே பதுமுகன் முடிவுசெய்து போருக்கு ஆயத்தமானான். அவனைச் சுற்றி நபுல விபுலரும், நந்தட்டன் முதலியவரும் குபேரமித்திரன் முதலியவரும் போருக்குப் புறப்பட்டனர்.

சீவகன் சிறைப்பட்டதையும் பதுமுகன் முதலானவர் போருக்குப் புறப்படுவதையும் அறிந்த காந்தருவதத்தை வித்தியாதர மங்கையானமையால், சீவகனை மீட்டுவர எண்ணித் தன் விஞ்சையால் பல பூதங்களை உண்டாக்கினாள்.

சிறைப்பட்டுச் செல்லும் சீவகன் மதனன் ஏவலால் சிறைச்சாலை யிருக்கும் இடம் நோக்கிச் செல்கையில், 'யான் சிறைப்பட்டதைக் கேட்ட பதுமுகன் முதலிய தோழரும், விஞ்சையில் வல்ல காந்தருவதத்தையும் என்னை மீட்பதற்கு உபாயம் செய்வாராதலால், அவர்களால் விடுதலைப் பெற்று நான் தப்பி வாழ்தல் மிகவும் இழிவான காரியம். ஆதலால், யான் என் தோழன், சுதஞ்சணனையே நினைப்பேன்' என்று நிச்சயித்தான். உடனே, தன் தோழனை சுதஞ்சணனைச் சீவகன் நினைத்தான்.

சங்கவெண்மலையில், ஓர் அரம்பையுடன் பாடிக் கொண்டிருந்த சுதஞ்சணன் தன் இடக்கண் துடித்தவுடன், சட்டென்று சீவகனை நினைத்துப் பார்த்தான். சீவகன் சிறைப்பட்டுச் செல்லுதலை தன் ஞானத்தாலறிந்தான் சுதஞ்சணன். உடனே தன் உருவத்தை மட்டும் அவ்வரம்பை முன் நிருமித்து வைத்துவிட்டு, சீவகன் இருக்குமிடம் தோன்றினான் சுதஞ்சணன். உடனே பெரும் மழையை உண்டாக்கினான். காற்று சுழன்று வீசியது. இடியும் மின்னலும் தோன்றின. சீவகனைச் சூழ்ந்து செல்லும் வீரர்கள் ஒருவரை ஒருவர் அறிய முடியாமல் மனங் கலங்கினர். உடனே சுதஞ்சணன், சீவகனைத் தூக்கி மார்பில் தழுவிக்கொண்டு ஆகாயத்தே சென்றான். மாளிகையின் உப்பரிகையி லிருந்த காந்தருவதத்தை, சீவகன் செல்வதைக் கண்டதும் வாழ்த்தி, அவன் பிரிவுக்கு மனம் வருந்தித் தான் வரவழைத்த பூதங்களைத் திரும்ப அனுப்பிவிட்டாள்.

மழை ஓய்ந்தபின், மதனனும் வீரரும் சீவகனைக் காணாமல் அங்கும் இங்கும் தேடினர்; கிடைக்கவில்லை. கட்டியங்காரனுக்கு என்ன சொல்வதென்று மதனன்

மனங் கலங்கினான். அங்கே போர்க் கோலத்துடன் சென்ற பதுமுகன் முதலியவர், சீவகன் தப்பி ஓடி விட்டானென்பதை அறிந்து மகிழ்ந்து திரும்பி விட்டனர்.

மதனன், தன்னுடைய வீரர்களுடன் ஆராய்ந்து, வீதியிற் செல்லும் ஒரு வாணிபனைப் பிடித்துக் கத்தியால் பல கூறுகளாக வெட்டி வேறுபாடறியாமற் செய்து அரசனிடம் எடுத்துச் சென்று, "வேந்தே! சீவகனைக் கொண்டு வருகையில் மழையும் இருளும் உண்டாயின. அப்போது சீவகன் தப்பிப் போகப் பார்த்தான். உடனே, அவனைக் கொன்று பிளந்து கொண்டு வந்தோம்" என்று கூறிப் பிணத்தைக் காட்டினான்.

"மதனா! கொல்லுதற்கரிய வீரனைக் கொன்றாயாதலால் நீ இச்சிறப்புக்களைப் பெற்றுக்கொள்" என்று கூறிக் கட்டியங்காரன் மதனனுக்குப் பல சிறப்புக்களைச் செய்தான்.

## 13

## சீவகன் யாத்திரை

சீவகனை எடுத்துச் சென்ற சுதஞ்சயன் சங்க வெண்மலையிலுள்ள சந்திரோதய நகரத்தை அடைந்தான். புதியதொரு மண்டபம் அமைத்து அதில் சீவகனை இருக்கச் செய்தான். சீவகனுக்கு நேர்ந்த சிறைப்பாவம் நீங்கும்படி புண்ணிய தீர்த்தத்தால் நீராட்டுவித்தான். தன் மனைவியர்களுடனும், பரிவாரங்களுடனும் சேர்ந்து சீவகனுக்கு விருந்து செய்வித்து மகிழ்ந்திருந்தான். கட்டியங்காரனால் சிறைப்பட்ட போதும், சுதஞ்சனால் விடுதலையடைந்தபோதும்

வருத்தமும் மகிழ்ச்சியும் சிறிதும் இல்லாமல் விதியின் செயல் என்று எண்ணியிருந்தான் சீவகன். சீவகனுக்கு மகிழ்ச்சி யுண்டாக்கும் பொருட்டு நாட்டிய மங்கையர் பலரை அவன் முன்பு நடிக்கச் செய்தான் சுதஞ்சணன். அதனால் சீவகன் ஒருவாறு கவலையற்ற மகிழ்ச்சியோடு இருந்தான்.

"ஐயா! எம் கண்கள் இவ்வீரனுடைய அழகைக் கண்டு இமையாதிருந்த பயனைப் பெற்றன. உமக்கு எவ்வாறு இவ்வீரனுடன் நட்பு உண்டாயிற்று?" என்று சுதஞ்சணனை அவன் மனைவியர் கேட்டனர்.

"இந்த வீரன், எனக்கு நாயப் பிறப்பை நீக்கி இவ்வுடம்பைப் பெறும்படிச் செய்தான்" என்று கூறிச் சீவகன் வரலாற்றையும் தன் மனைவியரிடம் சொன்னான்.

"அவ்விதமானால், இவ்வீரனுடைய பகையை நாம் அழித்துப் பூமியை இவனுக்கு உரிமையாக்குவோம்" என்று அத்தேவ மகளிர் கூறினர்.

"நங்கையீர்! நீங்கள் போக பூமியையும் தேவருலகத்தையும் இவ்வுலகத்திலே தருவீரென்றாலும் தர வல்லமையுடையீர்; ஆனால் யான் பூமியைப் பெறும் காரியத்தில் நீங்கள் ஒன்றும் எண்ணவேண்டாம். போர்க்களத்தில் பகைவனைக்கொன்று யானே என் பூமியைப் பெறுவேன்" என்றான் சீவகன்.

சீவகனுடைய மொழியையும் வீரத்தையும் பார்த்த யாவரும் வியப்பும் மகிழ்ச்சியும் கொண்டு பேசாதிருந்தனர். சீவகனுடைய புகழை எடுத்துக் கூறி, சுதஞ்சணன் மகிழ்ச்சியுடன் இருந்தான். அப்போது சீவகன் கருத்தில் ஓர் எண்ணம் உதித்தது. சுதஞ்சணனிடம் தன் எண்ணத்தைச் சொல்ல விரும்பினான்.

"நண்ப! பூமியி லுள்ள காடுகளும், மலைகளும், நாடுகளும், பொய்கைகளும், ஆறுகளும் என் கண்களைக் குளிரச்செய்வன. அந்தக் காட்சிகளைப் பார்க்கவேண்டுமென்ற விருப்பம் எனக்கு மிகுதியாக உள்ளது. கிணற்றில் தங்கியுள்ள மீன்களைப்போலத் தாம் பிறந்த ஊரிலேயே இருந்துவிடுகின்றவர்கள், அயல் நாட்டின் இன்பத்தைப் பெற முடியாது. ஆதலால் யான் பூமியின் வளப்பத்தைக் காணச் செல்கிறேன்; நீ இவ்விடத்திலே இரு" என்று சீவகன் மொழிந்தான்.

சீவகன் எண்ணத்தை அறிந்த சுதஞ்சணன் மனம் மகிழ்ந்தான். சீவகனுடைய நன்மையைக் கருதி அவனுக்குப் போகும் வழிகளின் இயல்புகளைச் சொல்ல எண்ணினன். தன் அருகே சீவகனை இருக்கச் செய்தான். மலையிலிருந்து செல்லும் வழிகளையும் காட்டின் வழிகளையும், அவ்விடங்களின் இயல்புகளையும், வழியில் நிகழும் இன்ப துன்பங்களையும் விளங்கச் சொன்னன். சீவகன், வழியின் தன்மைகளை அறிந்து உவகை கொண்டான். சீவகனுக்கு மேல் நடக்கும் காரியங்களை ஞானத்தால் அறிந்திருந்த சுதஞ்சணன், சில மந்திரங்களைக் கூற நினைத்தான். சீவகனைத் தனியே அழைத்துச் சென்று, அழகு ஒழிக்க உடம்பைத் தரும் மந்திரத்தையும், பாம்பு முதலியவற்றின் விஷத்தையும் நோயையும் தீர்த்தற்குரிய மந்திரத்தையும் வேண்டிய உடம்புகளைத் தரும் மந்திரத்தையும் அவனுக்கு மொழிந்தான். மந்திரங்களை உபயோகிக்கும் தந்திரங்களையும் சீவகன் அறியும்படிக் கூறினன்.

சீவகன் மூன்று மந்திரங்களையும் தன் மனத்தே நன்றாக இருத்திக் கொண்டான். பின்னர் சுதஞ்சணை

னிடமும், அவன் மனைவியரிடமும் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டான். அப்போது சீவகன் மனத்தில் காந்தருவதத்தையைப் பற்றியும், குணமாலையைப் பற்றியும் எண்ணம் உண்டாயிற்று. 'காந்தருவதத்தையையும் குணமாலையையும் இன்னும் ஒரு மாதத்தில் சென்று காண்பேனோ?' என்று சீவகன் எண்ணலுற்றான். சுதஞ்சணன் அவனுடைய மனக்கருத்தை உணர்ந்தான். சிறிது புன்முறுவலுடன் சீவகனைப் பார்த்து, "அன்ப! நீ அவர்களைச் சேர்ந்து நிலையாக இன்புறுவது பன்னிரண்டாம் மாதத்தில்தான். அதற்குள்ளாக நிலையான இன்பத்தைப் பெறமுடியாது. பன்னிரண்டாம் மாதத்தில் உன் பகைவனை கட்டியங்காரனை வென்று முடிசூடிப் பின்னர் முத்தியும் பெறுவாய்" என்று மொழிந்தான். தன் எண்ணத்தை அறிந்து மறுமொழி கூறிய சுதஞ்சணனைச் சீவகன் தழுவிக்கொண்டான். அரசிளங்குமரனாகிய சீவகன், மலையிலிருந்து நடந்து இறங்கிச் செல்வதற்கு மனம் பொறாத சுதஞ்சணன், அவனைத் தானே எடுத்துச் சென்று கீழே கொண்டுவிட எண்ணினான். சீவகனைத் தன் இரண்டு கைகளாலும் அள்ளி எடுத்து மார்போடு அணைத்துக்கொண்டு புறப்பட்டான். தன் விஞ்சையால் ஒரு கணத்தில் மலையிலிருந்து கீழே உள்ள ஒரு சோலையில் வந்து நின்றான். சீவகனை அவ்விடத்தே நிறுத்தி, "அன்ப! உன்னைப் பின்பு பார்ப்பேன்" என்று கூறி மறைந்தான்.

சுதஞ்சணனுடைய உதவியை நினைந்து அவன் அன்புக்கு மனமகிழ்ந்தான் சீவகன். உடனே தனியாக அந்தச் சோலைவழியே நடந்தான். இதற்கு முன்னம் தனியே சென்று அறியாத சீவகன் சோலையிடத்தே

தனியே நடந்து சென்றான். அரசிளங் குமரன் காலால் நடந்து காட்டில் செல்வதைக்கண்டு வருந்தி அழுவதைப் போல் மலைகளிலிருந்து அருவிகள் ஒழுகிக் கொண்டிருந்தன. அறிவில்லாத மூடர்கள், பெரியோர்களுடைய துன்பத்தைக் கண்டு பரிகசிப்பதுபோல், முல்லையரும்புகள் நிறைந்த கொடிகள் சீவகனுக்கு முன் ஆடிக் கொண்டிருந்தன. சீவகனைக் கண்டு முல்லையரும்புகள் சிரிப்பதை, வண்டுகள் பார்த்து, 'முல்லைகாள்! தனியாகப் போகின்றவனைக் கண்டு சிரிக்கின்றீர்; உம்முடைய பற்களை உருத்திடுவோம், தெரியுமா?' என்று கூறுவன போல் ஒலித்து, முல்லையரும்புகளைக் குடைந்து தேனைக் குடித்துப் போயின.

பூக்கள் நிறைந்த செடிகளையும், கொடிகளையும், மரங்களையும், விலங்குகளையும், நீர் நிலைகளையும், மலைக் காட்சிகளையும் பார்த்துக்கொண்டே சீவகன் நடந்து சென்றான். இவ்வாறு சீவகன் செல்கையில் அவனுக்கு எதிரில் ஒரு வேட்டுவன் வந்துகொண் டிருந்தான்.

இருட்டின் ஒரு பகுதிக்குக் கருமை பூசினாற்போன்ற மேனியை உடையவன்; ஆழமான வங்குகளிலுள்ள உடும்புகளைப் பிடித்து இழுத்ததால் அவன் மார்பு உள்ளே ஒடுங்கியிருந்தது. அவன் அங்கங்கள் உயர்ந்தும் தாழ்ந்தும் இருந்தன. பார்ப்பதற்கு, நீண்ட மயிரையுடைய கரடியைப் போன்ற தோற்றமளித்தான். வாய்க்கு வெற்றிலையே கண்டறியாதவன். அவன் பேச்சு ஆட்டின் குரல்போன்றிருந்தது. உடலில் பெரிய மரவுரி. காலில் செருப்பு. கையில் பெரிய வில். தோளில் அம்பறாத்தூணி தொங்கியது. அவனுடன் வந்துகொண் டிருந்த ஓர் இளமங்கை தழைகளையே ஆடையாக உடுத்

துக்கொண்டிருந்தான். அவர்கள் கைகளில் மாமிசமும், கிழங்குகளும், தேனும் இருந்தன. அவர்களுடைய விசித்திரமான தோற்றத்தைக் கண்டு சீவகன் வியப்புற்றான்.

"ஐயா! நீங்கள் இருப்பது எவ்விடம்?" என்றான் சீவகன்.

"இதோ பார்! அருவியோடு தெரியும் மலையுச்சியிலுள்ள தினைப்புனம்! அதற்குத் தென்மேலை மூலையில் வாழ்கிறேன்; யான் குறவர்களுக்குத் தலைவன்" என்றான் அவ்வேட்டுவன்.

"நல்லது; நீங்கள் உண்ணும் உணவு என்ன?"

சீவகன் மொழியைக் கேட்ட வேட்டுவன் சிரித்துக் கொண்டான்;

"ஐயனே! சொல்லுகிறேன் கேள்! ஆண் பன்றியையும் முள்ளம் பன்றியையும் கொன்று அதைச் சமைப்போம். அவ்விதம் சமைத்த கொழுப்பில் தேனை ஊற்றித் தின்போம். பின்பு நெல்லால் ஆக்கின தொண்டிக் கள்ளைக் குடிப்போம்; தெரியுமா?" என்றான்.

"ஐயா! நீங்கள், முற்பிறப்பில் மாமிசம் முதலியவற்றைத் தின்றமையால் இப்பிறப்பில் வேடரானீர்கள். ஆதலால் அவற்றை விட்டு விடுங்கள்" என்று சீவகன் சொன்னான்.

"ஐயோ! அவற்றை விட்டுவிட்டால் எவ்வாறு நாங்கள் உயிருடன் இருப்போம்! எம் உடம்பை வாட்டாதீர்; வேறு யாருக்காவது இதைச் சொல்லுங்கள்" என்றான் வேட்டுவன்.

"ஐயா! மாமிசத்தைத் தின்று நரகத்தில் வாழ்தல் நன்றா? மாமிசம் தின்னாமல் உடலை வாட்டித் தேவராய் வாழ்தல் நன்றா?" என்றான்.

"மாமிசத்தை நீக்கித் தேவராய் வாழ்தலே நல்லது" என்று வேட்டுவன் சொன்னான்.

"நீர் உண்மையைச் சொன்னீர். அவ்விதமே செய்ய வேண்டும்" என்றான் சீவகன். உடனே வேட்டுவன், மாமிசம் முதலியவற்றை எறிந்துவிட்டுச் சீவகனை வணங்கித் தன் இருப்பிடம் சென்றான்.

சீவகன், வேறு வழியே சென்றான். அங்கு அரக்கு மாளிகையில் நெருப்பால் சூழப்பட்ட பாண்டவரைப் போலக் காட்டுத் தீயால் வளைக்கப்பட்ட யானைக் கூட்டத்தைக் கண்டு மனமிரங்கினான். உடனே சுதஞ்சணன் தனக்குக் கூறிய மந்திரத்தால் மழையை உண்டாக்கித் தீயை அணைத்து யானைகளின் துன்பத்தை நீக்கினான். பின்னர் அவ்விடம் நீங்கி அரணபாதம் என்னும் மலையை அடைந்தான். அங்குள்ள முனிவர்களை வணங்கிச் சினாலயத்தை அடைந்தான். சினாலயத்தில் உள்ள அருகனை வலம் வந்து மலர்களால் அருச்சித்துத் துதி செய்தான். அங்குள்ள இயக்கி ஒருத்தி, சீவகனிடத்து அன்புகொண்டு பழம் முதலியவற்றால் சீவகனுக்கு விருந்து செய்து உபசரித்தாள். விருந்துண்டபின், அவ்விடம் விட்டுப் பல சோலைகளைக் கடந்து பல்லவ தேசத்தின் எல்லையை அடைந்தான். அங்கே வயல்களில் களை பறித்துக்கொண்டிருந்த உழத்தியரிடம் அங்குள்ள நகரத்திற்குள் செல்லும் வழியைக் கேட்டுச் சந்திராபமென்னும் நகரத்திற்குள் புகுந்தான்.

பல்லவ தேசத்தின் தலை நகரமான சந்திராப நகரின் ஓர் புறத்தே உள்ள சண்பக மரச்சோலைக்குள் சீவகன் சென்றான். சோலை பல வகையினாலும் அழகுடன் விளங்கியது. அங்கு, மங்கையர் பலர் ஆடவ

ருடன் கூடியிருந்தனர். அவர்களுக்கு நடுவே அந் நாட்டின் இளவரசனான உலோகபாலன் என்பவன் வீற்றிருந்தான். அவனுக்கு எதிரில் உள்ள மேடையில் தேசிகப் பாவை என்ற நாட்டியப்பெண் நடனம் ஆடிக் கொண்டிருந்தாள். அவளுடைய சிறந்த நாட்டியத்தைக் கண்டு உலோகபாலன் முதலியவர் பரவசமுடன் அமர்ந் திருந்தனர். இந்தக் காட்சியை அவ்வழியே வந்து கொண்டிருந்த சிவகன் கண்டான். தேசிகப் பாவையின் நாட்டியத் திறமையைக் காண்பதற்கு அங்குள்ள ஆடவ ரோடு தானும் ஒருவனாக அமர்ந்தான். நாட்டியமாடிக் கொண்டிருந்த தேசிகப் பாவை அங்கு வந்து அமர்ந்த சிவகனைப் பார்த்தாள். கவிகளும் புகழுதற்கரிய வடிவம் கொண்ட சிவகனுடைய அழகைத் தன் கண்களாகிய கைகளால் முகந்து பருகினாள். அவளுடைய பார்வையும் உள்ளமும் சிவகனிடம் பதிந்து விட்டன. சிவகன்மீது காதல் கொண்டு நாட்டியம் ஆடுதலையும் மறந்து அவனைப் பார்த்தபடியே நின்றாள். 'கன்னித் தன்மையோடு முற்றிக் கனிந்து மணம் வீசும் காமமாகிய பழத்தை இவ் வீரனுக்கு உண்ணக் கொடுப்பேன்' என்று விரதம் பூண்டு மயங்கி நின்றாள். தேசிகப் பாவை, நாட்டியம் ஆடாமல் யாரோ ஒருவன்மீது காதல் கொண்டு நோக்கி நிற்பதை உலோகபாலன் அறிந்து அதிசயமுற்றான். அவள் நோக்கும் திசையைத் தானும் பார்த்தான். 'மன்மதனுடைய வடிவம் இதுதானோ!' என்று சிவகனைக் கண்டு மயங்கினான். உடனே சிவகனைத் தன்னிடம் அழைத்து உபசரித்தான். சிறிது நேரம் இருவரும் அளவளாவினர். "நீ என் விளையாட்டுத் தோழன்" என்று கூறிச் சிவகனை அருகில் இருத்திக் கொண்டான்

உலோகபாலன். இருவரும் அன்பால் ஒருவராயினர். 'இனி நான் இவனைப் பெற்றேன்!' என்று தனக்குள் கூறிக்கொண்டாள் தேசிகப் பாவை. முன்பு போல் மீண்டும் அவள் நாட்டியம் ஆடி எல்லோரையும் மகிழ்வித்தாள். சீவகனும் தேசிகப் பாவையின் நாட்டியத் திறமையைக் கண்டு அதிசயம் அடைந்தான்.

## 14

# பதுமையைப் பாம்பு கடித்தது

சுக்கிராப நகரத்தின் சோலையில் நாட்டியம் முதலியவற்றைக் கண்டு, சீவகனும் உலோகபாலனும் இனிதாகப் பொழுது போக்கி இருந்தனர். இருவரும் மனங்கலந்து பேசிக்கொண்டிருக்கையில் ஒரு வீரன் அவர்கள் முன்பு ஓடிவந்து வணங்கினான். உலோகபாலன் வியப்புடன் வீரனுடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்தான்.

"ராஜபுத்ர! பதுமையைப் பாம்பு கடித்துவிட்டது!" என்று நடுநடுங்கிக் கொண்டே அந்த வீரன் சொன்னான். உடனே உலோகபாலன் துணுக்குற்று எழுந்தான். இடி விழுந்தாற் போன்றிருந்தது அவ்வீரன் கூறிய மொழி. கவலையும் துக்கமும் உலோகபாலன் மனத்தே குடி கொண்டன.

"நண்ப! நீ இவ்விடத்தில் இரு. நான் வந்துவிடுகிறேன்" என்று கூறி உலோகபாலன் அரண்மனைக்குப் புறப்பட்டான். சிறிது தூரம் நடந்து சென்றதும், "பதுமையைப் பாம்பு கடித்தது எப்படி?" என்று அந்த

வீரனிடம் கேட்டான். உடனே அவ்வீரன் மறுமொழி கூறலானான் :

"வேந்தே! கன்னிமாடத்திற்கு அருகில் உள்ள சோலையில் முல்லைக்கொடியையும், கருப்பூரச்செடியையும் பதுமை வளர்த்துவந்தாள். அவை நன்றாக வளர்ந்தன. ஒரு நாள், முல்லைக் கொடியில் பல அரும்புகள் தோன்றின. அந்தச் செய்தியைப் பதுமைக்குச் சில சேடியர் கூறினர். அதைப் பார்ப்பதற்கு உடனே பதுமை ஓடினாள். ஓடும் வழியில் ஒரு குராமரம் நிறையப் பூக்களைப் பூத்து ஒரு பெண்ணைப்போல விளங்கியது. குரா மரத்தினைக் கண்ட பதுமைக்கு அதிலுள்ள பூக்களைப் பறிப்பதற்கு ஆசை உண்டாயிற்று. 'இக்குரவம் பாவை என் தோழி' என்று கூறி அம்மரத்தில் உள்ள பூக்களைப் பறிப்பதற்குக் கையை நீட்டினாள். அம்மரத்தின் கிளையைத் தழுவிக்கொண்டிருந்த குக்கட சர்ப்பம் பதுமை நீட்டிய கையைக் கடித்துவிட்டது. உடனே பதுமை பயந்து நடுங்கி, 'அம்மேயோ!' என்று கூறினாள். அதைக் கேட்டு பதுமையின் தாய் வந்துவிட்டாளோ என்று எண்ணிய சேடி, பதுமையிருக்குமிடம் ஓடி, 'திலோத்தமையம்மை வந்தாரோ' என்று கேட்டாள். பதுமை சோர்வுடன், 'சேடி! என்னைப் பாம்பு கடித்து விட்டது. என் தந்தை தனபதியையும், என் தமையன் உலோகபாலனையும் எனக்காக வணங்குக. என் தாய் திலோத்தமையையும் பிறரையும் தழுவிக்கொள். என்னை நாள்தோறும் நினைத்திரு' என்று கூறி அவளைத் தழுவிக் கொண்டே கீழே வீழ்ந்தாள்."

இவ்வாறு வீரன் மொழிந்ததைக் கேட்டுக் கொண்டே உலோகபாலன் வேகமாக நடந்து சென்றான்.

அரண்மனைக்குள் சென்று பதுமை மயங்கிக் கிடப்பதைக் கண்டான். தான் கற்ற மந்திரங்களையும், மருந்துகளையும் உபயோகித்தான். சிறிதும் குணமாகவில்லை. சிறந்த வைத்தியர்களாலும் மாந்திரிகர்களாலும் விஷத்தை நீக்கமுடியவில்லை. உலோகபாலன் மிக மனம் வருந்தினான். உடனே ஒரு முடிவு செய்து, "பதுமையைப் பாம்பு கடித்தது. விஷத்தை நீக்குபவர்களுக்குத் தனபதி அரசன், நாட்டில் ஒரு பகுதியையும், நிதியையும் தந்து பதுமையையும் மணம் புரிவிப்பான். விஷத்தைத் தீர்த்து அவற்றைப் பெற்றுக்கொள்க" என்று கூறி நகரத்தினர்க்கு முரசறைவித்தான். முரசறைவித்த பின்னர் வைத்தியர் பலரும், மந்திரம் வல்லவர் பலரும் வந்து விஷத்தை நீக்க முயன்றனர்.

"சிதமண்டலி கடித்துவிட்டது" என்றார் சிலர்.

"கருவழலை கடித்து விட்டது. பிழைப்பது அரிது" என்றார் சிலர்.

"நாகம் கடித்தமையால் இனி உயிர் வாழாள்" என்று சிலர் கூறினர்.

"இரத்தம் சோர்ந்து விட்டது. இனி உயிர் மீளாது. அவ்வளவுதான்" என்று பலர் தைரியமாக மொழிந்தனர். மந்திரம் வல்ல அந்தணர் பலவாறு முயன்றும் பதுமைக்கு மயக்கம் தெளியவில்லை. பின்னர் சோதிடரில் சிறந்த ஒருவன் ஆராய்ந்து பார்த்து, "வேந்தே! ஒரு விஷயம். பாம்பு உதிக்கின்ற நாளில் பாம்பு கடித்தால் இறைவனாலும் விஷத்தை அகற்ற முடியாது. ஆனால் பதுமைக்குப் பாம்பு கடித்தநாள், பாம்பு உதித்த நாள் அன்று; ஆதலால் இவள் எவ்விதமேனும் உயிர் பெற்றெழுவாள்; இங்கே தோன்றுகின்ற பல நன்னிமித்தங்களால்

இத்துன்பத்தைத் தீர்க்க ஒரு வீரன் இக்காட்டிற்கு வந்துள்ளான்" என்று கூறினன்.

சேரனிடம் வார்த்தையைக் கேட்டு உலோகபாலன் ஆச்சரிய முற்றான். வருத்தத்துடனிருந்த அவன் முகம் மலர்ச்சி பெற்றது. பக்கத்திலிருந்த தூணில் கையைத் தட்டி, எழுந்து நின்று ஒரு வீரனைக் கூப்பிட்டான். அவன் முன் அவ்வீரன் வந்தான்.

"அடே! சோலையில் என்னுடன் இருந்த வீரனை இங்கு அழைத்து வா!" என்று கட்டளையிட்டான். அந்த வீரன் விரைவாகச் சென்று சீவகனிடம் அரசிளங்குமாரனுடைய கட்டளையைத் தெரிவித்தான். வேறொன்றும் எண்ணாமல் விரைவாக உலோக பாலன் இருக்குமிடம் சீவகன் வந்து சேர்ந்தான். கீழே ஓர் மங்கை மயங்கிப் படுத்திருப்பதையும், அவளைச் சுற்றி மகளிரும் ஆடவரும் சோகத்துடன் நின்றிருப்பதையும் கண்டு, "இது என்ன கொடுமை?" என்றான்.

"நண்ப! எம்மால் நீ பெரும் புகழ் பெறுவாய். இம் மங்கை என் உடன் பிறந்தவளான பதுமை என்பாள். இவளைக் குக்குட சர்ப்பம் கடித்து விட்டது. நீ இவளுயிரைக் காப்பாற்றவேண்டும்" என்று உலோகபாலன் கூறினன். சீவகன் புன்முறுவலுடன் உலோகபாலனை தழுவிக் கொண்டான். அங்கு வருந்தி நிற்பவர்களுக்கெல்லாம் ஆறுதல் கூறினன். மீண்டும் அவனை நோக்கி, "அன்ப! நீ வருந்தாதே, யாரும் வருந்த வேண்டாம்! எத்தகைய பாம்பு கடித்திருந்தாலும், இடையூறு செய்ததற்குத் தேவர் செய்த தீவினையாயிருந்தாலும் இவளுக்குச் சாவு இல்லை" என்று சிரித்துக் கொண்டே மொழிந்தான்.

பதுமையின் ரூபலாவண்யத்தைப் பார்த்த சீவகன் அதிசயம் அடைந்தான். 'இம்மங்கையின் நிறைந்த அழகைப் பொறுமையுடன் தடையில்லாமல் கண்களாற் காணும் பேறு கிடைத்ததே' என்று மனமகிழ்ந்தான். பதுமையின் கையில் பாம்பு கடித்த இடத்தைப் பார்த்துக் கோழிபோல் பறக்கும் வன்மையுள்ள குக்குட சர்ப்பம் பதுமையைக் கடித்தது என்பதை உணர்ந்தான். பாம்புகளின் வகையையும் அவைகளின் தன்மையையும் உலோகபாலன் முதலியவர்க்கு விளங்கச் சொன்னான். ஓர் குவளை மலரை எடுத்துச் சுதஞ்சணன் கூறிய மந்திரத்தை மூன்று உருக்கள் ஓதிப் பதுமையின் கூந்தலில் செருகினான். பின்னும், இரண்டு உருக்கள் ஓதிப் பதுமையின் மேனியை உற்று நோக்கித் தியானித்தான். உடனே சூரியனைக் கண்ட பனிபோல் விஷம் பதுமையின் மேனியை விட்டு அகன்றது. உறக்கம் நீங்கியவள் போல் பதுமை கண் விழித்தாள். சீவகன் பதுமைக்கு அருகில் உட்கார்ந்து அவள் முகத்தை ஆவலுடன் நோக்கியிருந்தான். கண்விழித்த பதுமை சீவகன் அழகைக் கண்டு பருகிவிடுவாள் போலப் பார்த்தாள். இருவர் நோக்கும் ஒன்றுபட்டு மயங்கின. சீவகன் மீது கொண்ட காதலால் மீண்டும் பெருமூச்சு விட்டு மயக்கம் அடைந்தாள் பதுமை. சீவகனிடத்து வேட்கை கொண்டே பதுமை மயக்கமுற்றாள் என்று உணர்ந்த அவள் தாயும் சேடியரும், வருத்தமும் சந்தோஷமும் ஒருங்கே கொண்டனர். "ஐய! உன் கையால் இவளைத் தொடுவாயானால் இவள் மயக்கம் நீங்குவாள்" என்று சீவகனிடம் அவர்கள் மொழிந்தனர். 'காதலித்தோனைக் கண்டாலும், அவர்கள் மொழியைக் கேட்டாலும், அவரைத்

தொட்டாலும் சோர்வு நீங்கி அவர்க்கு உயிர் நிலைத்து நிற்கும்' என்பதை உணர்ந்த சீவகன், பதுமையின் மேனியைச் சந்தனம் பூசினாற்போல் குளிரும்படித் தடவினான். உடனே பதுமை நாணங்கொண்டு உடல் கூசி எழுந்து ஒதுங்கி நின்றாள்.

பதுமை உயிர்பெற்று எழுந்ததைக் கண்டு யாவரும் மனமகிழ்ந்தனர்.

"இந்தக் குமரன், வித்தியாதரனோ!" என்று பலர் புகழ்ந்தனர். "தேவ குமரனோ!" என்று பலர் சொல்லினர். "போன உயிரை மீட்டுவிட்டானே!" என்று பலர் வியந்தனர். "அரசன், இவனுக்கே பதுமையைக் கொடுப்பான்" என்று கூறினர் பலர். "மன்மதனாகிய இவனே பதுமைக்குக் காதலன்" என்று பலர் மொழிந்தனர். பதுமையின் தந்தை தனபதிக்கு அளவில்லாத மகிழ்ச்சி உண்டாயிற்று. சீவகனை மார்புறத் தழுவிக்கொண்டான். தன் இருப்பிடத்திற்கு அழைத்துச் சென்று சீவகனை உபசரித்து மகிழ்வித்தான். சீவகன் தனபதிக்குத் தான் கற்ற கலைகளையெல்லாம் மொழிந்தான். சீவகனுடைய கல்வித் திறமையைத் தனபதி புகழ்ந்தான். சூரியாஸ்தமனம் ஆனவுடன், சீவகன் உறங்குவதற்குச் சென்றான்.

பதுமையின் அழகாலும், அவள் தன்னை நோக்கிய நோக்காலும் அவள்மீது காதல் கொண்ட சீவகன் அன்றிரவு உறங்காமல் வருந்தியிருந்தான். சீவகனைக் கண்டது முதல், 'அவனைக் கணவனாக அடையவேண்டும்' என்று எண்ணிய பதுமையும் அன்றிரவு உறங்காமல் வருந்தியிருந்தாள். உண்மைக் காதலராகிய இருவரும் ஒரே சமயத்தில் ஒருவரை ஒருவர் நினைந்து வருந்தினர்.

சீவகனிடம் காதல் கொள்வதற்குக் காரணமாக இருந்த இடம், பாம்பு கடித்த சோலையே ஆதலால் அங்கே சென்று தன் வருத்தத்தைப் போக்கிக்கொள்ள எண்ணினாள். உடனே விடியற் காலத்திருளில் தனியே அவ்விடத்திற்குச் சென்றாள். சீவகனும் பதுமையை நினைந்து பாம்பு கடித்த சோலைக்குச் சென்றான். எதிர்பாராத விதமாய் இருவரும் சந்தித்தனர். உள்ளம் மகிழ இருவரும் ஒன்றுகூடி இன்பமெய்தினர். அச்சமயம் மகளிர் பலர் அவ்வழியே வந்தவுடன் இருவரும் ஓடி தனித்தனியே அவரவர் இருப்பிடத்தை அடைந்தனர்.

சீவகனும் பதுமையும் காதல் கொண்டுள்ளதைக் குறிப்பால் தனபதி அறிந்து கொண்டான். அதைப் பற்றி முடிவு செய்துவிடலாமென்று எண்ணி மதிதரன் என்னும் மந்திரியை அழைத்தான்.

"மதிதரா! சீவகன், பதுமையின் உயிரை மீட்டவன்; அழகு மிக்கவன். உலகத்தை ஆளும் அரசர்க்குரிய லக்ஷணங்கள் அவனிடம் அமைந்துள்ளன. அவன் உடம்படுவானாகில் பதுமையை அவனுக்கு மணம் புரிவிக்கலாம்" என்றான்.

"வேந்தே! உருவத்தாலும் ஒப்புமையாலும் சீவகனுக்குத் தக்கவளே, பதுமையும்" என்றான் மதிதரன்.

"மதிதரா! சீவகனிடம் சென்று என் எண்ணத்தை அறிவித்து அவன் உடம்பாட்டையும் தெரிந்து வா" என்று அரசன் கூறினான்.

மதிதரன், சீவகனிருந்த மாளிகையை அடைந்து தனியே அழைத்து அரசன் எண்ணத்தை அவனுக்கு உரைத்தான்.

"அரசன் விரும்பியபடியே ஆருக!" என்று தன் உடம்பாட்டைச் சீவகன் மொழிந்தான். மதிதரன் தனபதியிடம் சீவகன் உடம்பாட்டைக் கூறினன். மதிதரன், உலோகபாலன், திலோத்துமை மூவரும் ஒன்று கூடி ஆலோசித்து, "அழகில் மிக்க சீவகன், பதுமையின் கூந்தலைத் தொட்டுப் பூவைச் சூட்டினன்; அவள் உடலைத் தொட்டு மயக்கத்தை அகற்றினன்; மந்திரம் ஓதி உயிரை மீட்டான்; 'உற்றார்க் குரியர் பொற்றொடி மகளிர்' ஆதலால் சீவகனுக்குப் பதுமையை வாழ்க்கைப் படுத்துவதே சிறந்தது" என்று கூறி நிச்சயம் செய்தனர்.

தனபதியின் கட்டளைப்படி மணம் செய்தற்கு வேண்டிய காரியங்கள் ஏற்பாடாயின. புதியதாக மண்டபமொன்று கட்டப்பட்டது. அலங்காரம் செய்த அம்மண்டபத்தில் பதுமைக்கும் சீவகனுக்கும் கலியாணம் நிகழ்ந்தது. காதலிருவரும் உள்ளன்பு மிக்கவராய் இன்பத்துடன் பொழுது போக்கியிருந்தனர்.

*     *     *     *

ஒரு நாள் மாலைக் காலத்தில் சோலைக்காட்சியைக் காண்பதற்குத் தனிமையாகச் சீவகன் சென்றான். அந்தச் சோலையில் வீணை வாசித்துக்கொண்டு தேசிகப் பாவையென்னும் நடன மங்கை உட்கார்ந்திருந்தாள். சீவகன் அவளைக் கண்டான். 'முன்பு சோலையில் நாட்டியம் ஆடுகையில் நம்மைக் கண்டு காதல் கொண்ட மங்கையே, இவள்' என்பதை அறிந்துகொண்டான். மாலைக் காலத்தில் மணம் வீசும் சோலையில், அலங்கார சோபையும், அவயவ சோபையுமாகிய பூக்களைப் பூத்த பூங்கொடி போன்றிருந்தாள் தேசிகப்பாவை. அவன்

மீது சீவகன் காதல் கொண்டு அருகில் சென்றான். சீவகனைக் கண்ட தேசிகப்பாவை நாணமும் மகிழ்ச்சியும் அடைந்தாள். 'என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட வீரனை என்று காண்பேன்' என்று ஏங்கியிருந்த அவள் சீவகனை வணங்கித் தலை குனிந்து நின்றாள். சீவகன், அவளை அணைத்துத் தழுவி இன்புற்று சோலையில் உள்ள காட்சிகளைக் கண்டு மகிழ்ந்திருந்தான். இருள் நெருங்கிய பின்பு, அவளிடம் விடை பெற்றுத் தன் மாளிகைக்குச் சென்றான்.

* * * *

சீவகனுக்குச் சிறிதும் குறைவு ஏற்படாமல் உலோக பாலனும் தனபதியும் உபசரித்திருந்தனர். பலவகை யிலும் இன்பத்தைத் தந்து சீவகனைப் பதுமை மகிழ் வித்தாள். இரண்டு மாதங்கள் வேறு கவலையில்லாமல் சீவகன் இன்பமுடன் பொழுது போக்கினான். மேல் நடக்கும் காரியங்களை எண்ணிய சீவகன், அவர்களைப் பிரிந்துபோக எண்ணினான். ஒருநாள் நடு இரவு எங்கும் நிசப்தமாக இருந்தது. பூக்கள் பரப்பிய கட்டிலில் பதுமையும் சீவகனும் படுத்திருந்தனர். சீவகன் மார்பு மீது தாமரைப் பூப்போன்ற தன் கையை வைத்துக் கொண்டு பதுமை உறங்கினாள். சீவகன் பதுமையின் கையை மெள்ள எடுத்துப் படுக்கையில் வைத்தான். அவள் உணராதபடி படுக்கையை விட்டு எழுந்து நடந்தான். உடம்பை விட்டு உயிர் நீங்குவதுபோல் பதுமையை விட்டுச் சீவகன் பிரிந்தான். விரைவாகப் பள்ளியறையை விட்டு அகன்று அரண்மனை வாயிலையும் கடந்தான். நள்ளிருளில் நகரத்தின் எல்லையைச் சீவகன் கடந்து கொண்டிருந்தான்.

விடியற்காலையில் பதுமை கண் விழித்தாள். பக்கத்தில் சீவகனைக் காணுமல் துணைபிரிந்த அன்றிலைப் போல் மனங் கலங்கிப் பல இடங்களில் தேடினுள். எங்கும் காணவில்லை. தான் வளர்த்த கிளி, பூனை, மயில் முதலியவற்றைக் கோபித்தாள். விளக்கு, செடி, கொடி, மரம் முதலியவற்றை நோக்கி வாய் விட்டுப் புலம்பினுள். தன் அங்கங்களை வெறுத்தாள். ஆபரணங் களைக் கழற்றி எறிந்தாள். பதுமை புலம்புவதைக் கண்ட தோழி அவளுக்கு ஆறுதல் சொன்னுள். 'பதுமையின் இனிய காமச் செவ்வியிலே சீவகன் பிரிந்து சென்ருனே' என்று தாயும் தந்தையும் வருந்தினர். 'சீவகன் வந்து விடுவான்' என்று பதுமையின் தாய் திலோத்தமையும், தோழியும் ஆறுதல் கூறினர். பதுமையும் சிறிது ஆறுதல் அடைந்திருந்தாள்.

சீவகனைத் தேடும்படி, தனபதி பல தூதரை அனுப் பினுன். அவர்கள் நகரைக் கடந்து பல இடங்களிலும் தேடினர். தன்னைத் தேடுவதை அறிந்த சீவகன் வேற்று வடிவம் கொண்டு சென்ருன். சீவகனைக் கண்ட தூதர், "உம்மைப் போன்ற அரச குமாரனைக் கண்டீரோ?" என்று கேட்டனர். சீவகன் சோதிடம் கூறுபவன் போல் நடித்து, "அவனை ஒன்பதாம் மாதத்தில் காண்பீர்" என்று கூறிச் சென்ருன்.

# 15

# கேமசரியை மணந்தது

பல்லவ தேசத்தைக் கடந்து, காட்டின் வழியே கடந்து சென்றான் சீவகன். சோலைக் காட்சிகளையும், மலைக் காட்சிகளையும் கண்குளிரக் கண்டு மகிழ்வுடன் நடந்தான். காட்டிற்கு அடுத்தாற்போல் தோன்றிய பெரிய மலையை அடைந்தான். அம்மலையிலுள்ள சுனையில் நீராடி, பூக்களால் அருச்சித்து அருகனை வணங்கினான். அருகனை மனம்மகிழத் துதிசெய்துவிட்டு சித்திர கூடத்தை நோக்கிப் போனான். அங்கே, முனிவர்களும், யோகிகளும், பலவாறு செய்தற்கரிய தவங்களைச் செய்து கொண்டிருந்தனர். நெருப்பில் நின்றும், நீரில் நின்றும், மரத்தில் கட்டப்பட்ட உறியில் இருந்தும், தலை கீழாகத் தொங்கியும், தவம் செய்துகொண் டிருந்தனர் முனிவர்கள். மாதவர் பள்ளியைச் சீவகன் அடைந்தவுடன், அங்கிருந்த முனிவர்கள் இவனை வரவேற்றனர். மலை வாழைக்கனி, பலாக்கனி, மாங்கனி, வள்ளிக்கிழங்கு முதலியவற்றைச் சீவகனுக்குக் கொடுத்து அருந்தச் செய்தனர். சீவகன் பலகலைகளிலும் வல்லவனென்பதை உணர்ந்த முனிவர்கள் அவனைப் பல கேள்விகள் கேட்டனர். அதற்குத் தக்க விடை கூறிப் பின்னும், "ஐயன்மீர், கல்லைக் கழுத்தில் கட்டிக் கொண்டவன் கடலில் நீந்துதல் முடியுமானால், காம நுகர்ச்சியை விரும்பி மனைவியரோடு தவம் செய்யும் நீங்களும் முத்தி பெறுவீர்கள்; ஆதலால், உங்களுடைய தவம் பிறவியை நீக்காது!" என்றான் சீவகன்.

சீவகன் மொழிந்ததைக் கேட்ட முனிவர்கள், கோபமும், வருத்தமும் கொண்டனர். "குமர, யாங்கள் தவம் செய்யும் வழியே, முத்தி அடைவதற்குத் தகுதி யானது. திருமால் கூறிய ஆகமத்தில் இதுவே கூறப் பட்டுள்ளது. நீ சொல்வது சிறிதும் பொருந்தாது!" என்று மறுமொழி கூறினர் முனிவர்கள்.

"ஐயன்மீர், யான் கூறுவதற்கு வருந்தவேண்டாம்; தொங்குகிற உறியில் இருந்து, காயையும், பழத்தையும் அருந்தினால் பாபம் நீங்கி முத்திபெறலாம் என்று ஆகமத்தில் கடவுள் கூறியுள்ளாரா? அவ்விதமானால், வௌவால் மரத்திலே தொங்கி, பழத்தை அருந்து கிறது; அதுவும் முத்திபெறுமல்லவா? புல் பூண்டு களைத் தின்று முத்தி பெறலாம் என்றால் கல்லை உண்கின்ற புறாக்களும் முத்தி பெறுமன்றோ? சடை வளர்த்து, நீரில் மூழ்கித் திரிந்து முத்தி பெறலா மென்றால், காட்டிலுறையும் கரடியும், குளத்தில் மூழ்கி முத்தி பெறுமன்றோ? ஆதலால் உம்முடைய பயனில் லாத வார்த்தைகளைச் சொல்லவேண்டாம். மனைவியரை விட்டு நீங்கித் தவம் செய்யுங்கள். வெண்மையான ஆடையில் பட்ட இரத்தத்தை, இரத்தத்தாலேயே போக்க முடியாது. அதுபோலப் பெண்டிரிடத்து ஆசையால் உண்டான பாவத்தை அவரைக் கொண்டு போக்க முடியாது. ஆடைவெந்து போகுமென்று பயந் தவர், நெருப்பை ஆடைக்குள்ளே வைத்து மூடினால் எரிந்துபோகுமல்லவா? ஆதலால் மனைவியரைப் பிரிந்து, நேர்மையான தவத்தைச் செய்யுங்கள்" என்று சீவகன் புத்தி கூறினான்.

சீவகனுடைய மொழியைக் கேட்டு, அவன் அறிவுத் திறமையை முனிவர் அறிந்தனர். உடனே அவனை வணங்கி, "உன்னால் அறிவு பெற்றோம்" என்று கூறி மனைவியரைப் பிரிந்து தவம் செய்யலாயினர். சீவகன் அன்று இரவுப் பொழுதை அங்கேயே போக்கிக் களைப்பு நீங்கினான்.

பொழுது விடிந்தது. சீவகன் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு அவ்விடம் விட்டுப் புறப்பட்டான். முனிவர்கள், சீவகன் போவதற்குத் தக்க வழிகளைக் கூறி அனுப்பினர். சீவகன் முனிவர் கூறிய வழியே நடந்து பல ஆறுகளையும், காடுகளையும் கடந்து சென்றான். அங்கு ஓரிடத்தில், தடாகங்களும், பூஞ்சோலைகளும் இருக்கக்கண்டு அதன் வழியே சென்று தக்கநாட்டின் தலை நகரமாகிய கேமமாபுரத்திற் புகுந்தான். அந்த நகர்க் காட்சிகள் பலவற்றையும் கண்டு களித்து ஓர் ஆல மரத்து நிழலில் அமர்ந்து அருகனைத் தியானித்திருந்தான்.

* * * *

கேமமாபுரத்தில் சுபத்திரன் என்பவன் வணிகர் தலைவனாய் விளங்கினான். அவன் அரசனைப்போல் பெருஞ்செல்வம் உடையவன். அவன் மனைவியின் பெயர் நிப்புதி. அவர்களுக்கு மகளாய்த் தோன்றிய கேமசரி என்ற கன்னி அழகு மிக்கவளாய் விளங்கினாள். அழகாலும், பெயராலும், அவள் புகழ் நாடெங்கும் பரவியிருந்தது. அவளுடைய சாதகத்தைக் கணித்த சோதிடன், "இவள் ஆடவரெல்லாரையும் ஆடவராக மதிக்கமாட்டாள். இவளுக்குக் கணவனாக வருபவன் எவனோ அவனைக் கண்டதும் ஆடவனாக எண்ணி, இவள்

காணம் கொள்வாள். எவனைக் கண்டு நாணமடை கின்றாளோ அவனுக்கு இவளை மணம் புரிவிப்பாயாக!" என்று கூறினான். சோதிடன் கூறியவாறே ஆடவர் யாரையும் ஆடவராக மதிக்காமல் இருந்து வந்தாள் கேமசரி. அவள் தக்க பருவம் அடைந்த பின்பும் அவளுக்குக் கணவனாக வாய்ப்பவன் கிடைக்கவில்லை. அதனால் சுபத்திரன் மிக்க கவலையடைந்தான். 'தன் மாளிகைக்குத் தன்னால் அழைத்துவரப்படும் ஆடவர் யாரையும் கேமசரி ஆடவராக மதிப்பதில்லை, நாணமடைந்ததும் இல்லையே! கேமசரியின் கணவன் எப்பொழுது வருவான்' என்று ஏங்கியிருந்தான் சுபத்திரன். கேமசரியின் பருவ முதிர்ச்சியைக் கண்ட தாய் நிப்புதி மனம் வருந்தியிருந்தாள். "பூ மலர்ந்தபோதே அதிலுள்ள தேனை வண்டு உண்ணவரும்; அதுபோலவே மகளிர்க்குப் பொருந்திய நுகர்ச்சியும்! ஆதலால் விரைவில் இவளை மணம் செய்து கொள்வதற்குரிய வீரன் வருவான். நீ வருந்தாதே" என்று நிப்புதியை ஆற்றுவித்தான், சுபத்திரன்.

சுபத்திரன், தேரிலேறி, சோலைப்புறத்தே உலாவப் போனான். அங்கு ஓர் ஆலமரத்தின் நிழலில் அமர்ந்திருந்த சீவகனைக் கண்டான். 'இவன் இந்நாட்டிற்குப் புதியவன் போன்றுள்ளான். தேவனைப் போன்ற தேக காந்தி பெற்ற இவன் யார்?' என்று தனக்குள் ஆராய்ந்தான். பின்னர், சீவகனோடு சிறிது அளவளாவினான். சீவகன் சுபத்திரனிடம் அன்புடன் பேசினான். சுபத்திரன் தன் மாளிகைக்கு வருமாறு சீவகனை வேண்டினான். சீவகன் உடம்பட்டான். சுபத்திரன் சீவகனைத் தேரில் க்கொண்டு தன் மாளிகையை நோக்கிச் சென்றான்.

கன்னிமாடத்தே வீணை வாசித்து அருகக்கடவுளை எண்ணிப் பாடிக்கொண் டிருந்தாள் கேமசரி. அவள் பாடலைக் கேட்ட நிப்புதி மனமிரங்கி, 'அருகக் கடவுளின் அருளால் இவளுக்கு இன்றே கணவன் கிடைப்பான்' என்று நினைத்துத் தானும் இறைவனை வணங்கினாள். இந்நிலையில் சுபத்திரனும், சீவகனும் தேரை விட்டிறங்கி மாளிகைக்குள் வந்தனர். சுபத்திரன் சீவகனை, மகிழ்ச்சியோடு, கன்னிமாடத்திற்கு அழைத்துச் சென்றான். வீணை வாசித்துக்கொண் டிருந்த கேமசரி, சீவகனைக் கண்டதும் துணுக்குற்று எழுந்து நாணி நின்றாள். ஆடவர் யாரையும் ஆடவராக நினையாத அவள் சீவகனுடைய ஆண்மைத் தோற்றத்திற்கு அஞ்சி தலை குனிந்து நின்றாள். ஒருபுறம் சாய்த்த தலையுடன் சீவகனுடைய திருமேனியின் அழகைத் தன் கண்களால் பருகினாள். அவள் பார்வையை எதிர்கொண்டழைப்பது போல் சீவகனும் அவளை விரும்பி நோக்கினான். காதலர் உள்ளத்தை அறிந்துகொள்ள, கண்களே போதுமல்லவா!

சீவகனைக் கண்டு கேமசரி நாணம் கொண்டாள் என்பதைக் கண்ட சுபத்திரனும், நிப்புதியும், அளவில்லாத மகிழ்ச்சி கொண்டனர். இச்செய்தியைச் சேடியர் எல்லோருக்கும் உணர்த்தினர். கேமசரிக்குக் கணவன் கிடைத்தான் என்ற செய்தி நகரமெங்கும் பரவியது.

சீவகனுக்கு ஒரு மாளிகை அமைத்து அதில் அவனை இருக்கச் செய்தான் சுபத்திரன். சீவகனை நினைந்து கேமசரி வருந்தி யிருந்தாள்.

நல்ல நாளில் கேமசரியை சீவகனுக்கு வாழ்க்கைப் படுத்தினான். நகரம் எங்கும் விழாக் கொண்டாடினர். மாளிகைகளெல்லாம் அலங்காரம் செய்யப்பட்டன.

சீவகனும், கேமசரியும் காமமெனும் கனியை நுகர்ந்து பொழுது போக்கினர். சோலைகளிற் சென்று விளையாடி மகிழ்ந்தனர். தடாகங்களிற் படிந்து நீர் விளையாடி உவந்தனர். மலைமீதேறி அங்குள்ள காட்சிகளைக் கண்டு களித்தனர். இவ்வாறு இரண்டு மாதங்கள் சீவகனும், கேமசரியும் இன்ப வாழ்க்கை நிகழ்த்தினர்.

ஒரு நாள் இரவின் பிற்பகல், யாவரும் மெய்ம் மறந்து உறங்கிக்கொண் டிருந்தனர். கேமசரியும், சீவகனும், ஒரு கட்டிலில் படுத்திருந்தனர். காமவின்பத்தால் மனம் மயங்கி, உறங்கிக்கொண் டிருந்தாள் கேமசரி. பிரிந்து செல்வதற்குத் தக்க தருணம் என்று எண்ணிப் புறப்பட்டான் சீவகன். கேமசரி விழித்துக் கொள்ளாதபடி, மெள்ள அறையின் கதவைத் திறந்து விரைவில் மாளிகையைவிட்டு நீங்கினான் சீவகன்.

கணவன் பிரிந்து செல்வதாகக் கனவு கண்டாள் கேமசரி. உடனே துயில் நீங்கி, எழுந்து சீவகனைக் காணாமல் மனம் கலங்கினாள். சீவகன் மறைந்து நின்று விளையாடுகிறானோ என்று எண்ணிப் பலவிடத்தும் தேடினாள். அவனைக் காணாமையால், தன்னை அவன் பிரிந்து விட்டானென்றே எண்ணி வருந்தினாள். மாளிகையில் உள்ள ஒவ்வோரிடத்தையும் தேடினாள். வாய் விட்டுப் புலம்பினாள். கேமசரி அழுவதைக் கேட்டு அவள் தாய் நிப்புதி அங்கு வந்தாள். சீவகன் பிரிந்து விட்டானென்று கேமசரி வருந்துவதை அறிந்து தேற்றினாள். 'சீவகன் மீண்டும் வருவான்' என்று பலவாறு ஆறுதல் கூறினாள்.

மனைவியரைப் பிரிந்து யாத்திரை செல்லும் மாந்தரைப் போல், சீவகன், வயல்கள் நிறைந்த நிலத்தை விட்டுக் காட்டில் புகுந்தான். சிறிது தூரம் சென்ற பின் அங்குள்ள சோலையில் புகுந்து சுனை நீருக்கு அருகில் அமர்ந்தான். அங்கு அழகுள்ள ஒரு மங்கை காட்டிலிருக்கும் வனசரிதனைக் காதலித்து நின்றாள். அவள் தன்மையைக் கண்ட சீவகன், 'இவள் இயக்கி போலும்' என்று பார்த்துக்கொண்டிருந்தான்.

'தன் மீது காதல் கொண்டு நிற்கிறாள் இம்மங்கை' என்பதை அறிந்த வனசரிதன் அவளுக்கு உடம்பின் நிலையாமை முதலியவற்றைக் கூறினான்.

"ஐய! என் பெயர் அனங்கமாவீணை. யான் தோழியுடன் விளையாடுகையில் ஒரு வித்தியாதரன் என்னை எடுத்துச் சென்றான். பின்னர் அவனுடைய கற்புமிக்க மனைவியால் விடுதலை பெற்று வந்துள்ளேன். என்னை நீர் சேராவிட்டால் இறப்பேன்" என்று அம்மங்கை கூறினாள். வனசரிதன் அவள் மொழிக்கு இணங்காமல் காம இன்பத்தின் நிலையாமையை எடுத்துக் கூறினான்.

இந்நிலையில், அனங்கமாவீணையின் கணவன், பவதத்தன், அவளைக் காணாது வாய்விட்டுப் புலம்பும் ஒலியைக் கேட்ட சீவகன், வனசரிதனுக்குப் புத்திகூறி, அவ்விடம் விட்டுச் சென்று பவதத்தனைக் கண்டான். பவதத்தன், அனங்கமாவீணை பிரிந்ததைப் பற்றிச் சீவகனிடம் கூறிப் புலம்பினான்.

"ஐய! பெண்கள் மனவலி உடையரல்லர். ஆயிரம் எண்ணம் உடையவர். குடிப் பிறப்புக் கெடுமென்று பாரார். பத்துப் பொன்காசுகள் கொடுத்தால் இந்திரன் மகளும் கொடுத்தவர் பின் செல்வாள். ஆதலால் நீ

ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இம்மந்திரத்தைக் கூறிச் சிறிது தூரம் சென்றால் உன் மனைவியை ஓர் இயக்கி கொணர்ந்து தருதலால் நீ காண்பாய்” என்று கூறி மந்திரமும் ஓதுவித்தான்.

சீவகன் கூறியவாறு பவதத்தன் அம்மந்திரத்தைப் பலதடவைகள் உச்சரித்தவாறு சிறிது தூரம் சென்றான். அவன் சென்ற இடத்திற்கு அருகிலே அனங்கமா வீணையும் வந்து எதிர்ப்பட்டாள். அவளைக்கண்டு மகிழ்ந்த பவதத்தன், தான் பட்டதுன்பங்களைக் கூறி, மேலும் அம்மந்திரத்தை மொழிந்தான். அது கேட்ட அனங்கமாவீணை வனசரிதனை மறந்தவளாய், பவதத்த னிடம் பேரார்வமுற்று அவனுடன் சென்றாள்.

## 16

# நீங்காத விலங்கு

சீவகன், காட்டின் நடுவில் விளங்கிய மலையில் ஏறினான். அங்கே உள்ள சினாலயத்தை அடைந்து அருக தேவனை வணங்கித் துதித்தான். பின்னர் மலையை விட்டு இறங்கிக் காட்டைக் கடந்து சென்றான். அங்குத் தடாகங்களையும் சோலையையும் கண்டு நகரம் ஒன்று அருகே உள்ளதென்று எண்ணியவனாய் மேலும் நடந் தான். அப்போது அவனுக்கு எதிரில் ஓர் ஆடவன் புற நகரினின்றும் வந்துகொண்டிருந்தான்.

“ஐய, இந்நாட்டின் பெயரும், நகரத்தின் பெயரும் கூறவேண்டும்” என்று சீவகன் அவனைக் கேட்டான்.

“ஐயனே! நீ இந்தத் திசைக்கே புதியவன்போன் றிருக்கிறாய். இந் நாட்டின் பெயர் மத்திமதேசம். இதோ

தெரியும் நகரத்தின் பெயர் ஏமமாபுரம். நீ என்னுடன் வார்த்தையாடினமையால் நமக்குள் நட்பு உண்டாயிற்று. உணவு அருந்திச் செல்ல வேண்டும்” என்றான் அவன்.

“ஐய! நகரிலே சென்றபின்பு பார்க்கிறேன். இப்பொழுது போய் வருகிறேன்” என்று சீவகன் கூறினான். உடனே அவனும் விடைபெற்றுச் சென்றான்.

சீவகன் அவ்விடம் விட்டுப் பக்கத்திலிருந்த பொய்கையை அடைந்து அதன் கரையில் உட்கார்ந்தான். பொய்கையில் அன்னங்கள் விளையாடுவதைக் கண்டான். ஆண் அன்னம் தன் பெண் அன்னத்தின் கோபத்தை நீக்கி மகிழ்ந்திருப்பதைப் பார்த்தான். உடன் காந்தருவதத்தையின் எண்ணம் அவனுக்கு உண்டாயிற்று. அவளை நினைத்துப் பலவாறு புலம்பினான். பின்னர் அங்கிருந்து எழுந்து நகரத்தினுள்ளே புகுந்தான். அரண்மனையின் ஓர் பகுதியில் உள்ளதும் பொக்கிஷங்கள் வைக்கப் பட்டதுமான மாளிகையின் பக்கம் சீவகன் நடந்து சென்றான். அந்த நாட்டின் அரசன் தடமித்தன் என்பவனுடைய மகன் விஜயன் அவ்வழியே வந்துகொண்டிருந்தான். எதிரில் வந்த சீவகனைக் கண்டதும் விஜயன் துணுக்குற்றான்; ‘இந்த நாட்டிலுள்ளவர்கள் இம் மாளிகையின் பக்கத்தில் வரார்; ஆதலால் இவ் வீரன் இந் நாட்டைச் சேர்ந்தவனல்லன்; புதியவன்தான்’ என்று தனக்குள் நிச்சயித்தான். உடனே சீவகனுக்கு முன் சென்று, “வீர! நீ எந்த நாட்டைச் சேர்ந்தவன்? உன் ஊரின் பெயர் என்ன? உனக்கு என்ன பெயர்?” என்று கேட்டான்.

சீவகன் விஜயன் தோற்றத்தையும் வார்த்தையையும் கேட்டவுடன் அரசிளங்குமரன் என்று அறிந்தான். உடனே

நாட்டின் பெயர், ஊரின் பெயர், தன் பெயர் எல்லா வற்றையும் மறைத்து வேறுவிதமாக மறுமொழி கூறினான். சீவகனுடைய பேச்சையும், தோற்றத்தையும் கண்டு, 'இவனால் நமக்கு மிக்க பயனுண்டு; ஆதலால் என் தந்தையிடம் இவனை அழைத்துப் போவேன்' என்று நிச்சயித்தான்.

"வீர! இந்நாடும் நகரமும் உன்னுடையவை. எம் மாளிகையும் உனக்குத் தங்கும் இடமே! யாங்களெல்லாரும் உனக்கு உறவினர்" என்று விஜயன் மொழிந்தான். சீவகன், விஜயன் வார்த்தைக்கு உடம்பட்டுப் புன்முறுவலுடன், "மேலும் சொல்ல வேண்டாம்" என்று மொழிந்தான்.

சீவகனை நண்பனாகப் பெற்ற விஜயன் மகிழ்ச்சியுற்றான். பக்கத்தே கனிகள் நிறைந்த மாமரத்தைக் கண்ட விஜயன், ஒரு மாங்கனியைப் பெற வேண்டுமென்று எண்ணினான். உடனே தன் கையிலிருந்த வில்லை எடுத்து வளைத்து ஒரு மாங்கனியின்மீது குறிவைத்து அம்பை எய்தான். விஜயன் எய்த அம்பு குறி தவறிவிட்டது. மாங்கனியைப் பெறாமல் விஜயன் ஏமாற்றம் அடைந்தான். அதைக்கண்ட சீவகன் சிரித்து, விஜயன் கையிலிருந்த வில்லையும் அம்பையும் வாங்கினான். மாங்கனியின்மீது குறி வைத்து ஓர் அம்பை விட்டான். மறு கணத்தில் அம்பும் மாங்கனியும் சேர்ந்தாற்போல் சீவகன் கைகளில் வந்து வீழ்ந்தன. சீவகனுடைய வில்லின் திறமையைக் கண்டு விஜயன் வியப்புற்றான். சீவகன் அம்பெய்த விதத்தையும் அம்பும் மாங்கனியும் ஒருங்கே அவன் கைகளில் வீழ்ந்தமையும் கண்டு ஆச்சரியமடைந்து, "ஐய! நீ வில்லைப்படைத்த கடவுள்" என்று புகழ்ந்தான்.

பின்னர், சீவகனை அழைத்துக்கொண்டு தன் மாளிகைக்குச் சென்றான் விஜயன். உணவு முதலிய வற்றால் சீவகனுடைய களைப்பை நீக்கி உபசரித்தான். வழி நடந்த வருத்தம் நீங்கிக் களிப்புடனிருந்த சீவகனைத் தன் தந்தை தடமித்தனிடம் அழைத்துச்சென்று அவன் தன்மைகளையெல்லாம் விளங்கக் கூறினான். தடமித்தன் சீவகனை அன்புடன் உபசரித்து, "வீர! உன்மீது யாங்கள் மிக்க அன்புடையோம்; நீ வில் வித்தையில் நிகரில்லாதவன். இவ்விஜயன் வில்வித்தைக்கு மிகப் புதியவன். இவனல்லாமல் இன்னும் நால்வர் குமரர் உள்ளனர். அவர்கள் கல்வி மாட்சிபெறவில்லை. அவர் களுக்கும் நீ கல்வி கற்றுக்கொடுக்க வேண்டும். இதுவே உன்னை யான் வேண்டுவது" என்று மொழிந்தான்.

சீவகன் அரசனுடைய விருப்பத்திற்கு உடம் பட்டான். அன்று முதல், விஜயன், கதம்பன், கனகன், அசலன், சேனன் என்ற ஐந்து அரசிளங் குமரர்க்கும் சீவகன் கல்வி கற்பித்தான். வில், வாள், வேல் முதலிய ஆயுதப் பயிற்சியையும், யானைப் போர், குதிரைப் போர், தேர்ப் போர், மற்போர் முதலியவற்றையும் பயில்வித்து வந்தான். அரசிளங்குமரர் சீவகன் கட்டளைப்படி கல்வி பயின்றனர்.

* * * *

ஒருநாள் சீவகன் பொழுது போக்கிற்காகத் தனியே சோலைக்குச் சென்றான். அங்கு மலர்ந்திருந்த முல்லை, மல்லிகை முதலிய பூக்களைப் பறித்துப் பலாச்சுளை களையும் கலந்து ஒருவகை மாலை கட்டினான். பூக்களா லாகிய ஒரு பந்தையும் செய்தான். ஒரு மலரில் சில எழுத்துக்களை எழுதி, பூ மாலையில் அதைச் செருகி

வைத்தான். பனிநீரை மாலையில் தெளித்து அலங்கரித்து அதன் அழகைப் பார்த்து உட்கார்ந்திருந்தான். அப்போது அரண்மனையின் அந்தப்புரத்தில் வேலை செய்யும் ஒரு குறளி, சீவகன் வைத்துக்கொண்டிருந்த பூமாலையைப்பார்த்து அவனருகில் வந்தாள்.

"ஐய! இந்த மாலையும் பந்தும் அழகுடையவாக இருக்கின்றன. இவை, எம் அரசன் மகள் கனகமாலைக்குக் கொடுக்கத் தக்கன. அவள் அழகிற்கு இவை அலங்காரமாயிருக்கும்" என்று அந்தக் குறளி மொழிந்தாள்.

"அவ்விதமே கொண்டுபோய்க் கொடு" என்று மாலையையும் பந்தையும் சீவகன் தந்தான்.

சீவகனிடம் மாலையையும் பந்தையும் பெற்ற குறளி கனக மாலையிடம் ஓடினாள்.

"கனகமாலை! இவற்றை உன் தமையன்மாருடைய ஆசிரியர் கொடுக்கும்படிக் கூறினார்" என்று மாலையையும் பந்தையும் கனகமாலையிடம் கொடுத்தாள். சீவகனைப் பல முறை கண்டு நினைவில் பதித்து வைத்திருந்த கனகமாலை ஆவலுடன் அவற்றை வாங்கிக் கொண்டாள். ஒரு மலரில் எழுத்துக்கள் இருப்பதைக் கண்டு வியப்புடன் அவற்றைக் கூர்ந்து படித்தாள். 'மகளிர் பலரும் ஆடும் நாடகங்களைக் கண்டு அவருடன் இன்பம் நுகராதவர் வாழும் வாழ்வு, மக்கட் பிறப்பிற் பிறந்தும் நன்கு நுகராத வேடரது வாழ்வாயிருக்கும்...' என்று அவனெழுதிய பிறவற்றையும் படித்துச் சீவகன் மீது காதல் கொண்டாள்.

'எனக்கு மிக்க காதலை உண்டாக்கி என் மனத்தைப் பிணித்த அவனை யானும் அவ்விதமே பிணிக்கிறேன்' என்று நிச்சயம் செய்து கொண்டாள். மறுநாள் தன்

மார்பிலணிந்திருந்த மாலையை ஒரு செப்பில் வைத்து அதைத் தன் தோழி அனங்கவிலாசினி என்பவளிடம் கொடுத்துச் சீவகனிடம் அனுப்பினாள். அனங்கவிலாசினி ஒருவரும் அறியாமல் சீவகனிடம் சென்று, "இதைக் கனகமாலை கொடுத்தாள்" என்று செப்பைக் கொடுத்தாள். சீவகன் அதை வாங்காமல் அனங்கவிலாசினியை உற்றுப் பார்த்தான்.

"ஐய! தாங்கள் கொடுத்த மாலையே கனகமாலைக்குக் காதல் நோயை உண்டாக்கிற்று. அந்நோய்க்கு மருந்து தாங்கள்தாம். தாங்களே அவளுக்கு உயிர். இதை வாங்கிக்கொள்ள வேண்டும்" என்று அனங்கவிலாசினி மொழிந்தாள்.

"நங்காய்! அரசனுடைய ஆதரவில் இருப்பவன் யான். இங்கு வாழ்பவரெல்லாம் ஐம்பொறியையும் அவித்தவர்கள்" என்றான்.

"ஐய! நீர் மிகப் பயந்தவரோ!" என்று அவள் கேட்டாள்.

"இல்லை. ஆசிரியனையுள்ள எனக்கு இது பொருந்துமா?" என்றான் சீவகன்.

"நீர், இம்மாலையைப் பெற்றுக் கொள்ளாவிட்டால் கனகமாலை உயிர் நீங்குவாள்" என்றாள் அவள். சீவகன் புன்முறுவலுடன் மாலையை வாங்கிக் கொண்டான். அனங்கவிலாசினி மகிழ்ந்து கனகமாலையிடம் சென்று நிகழ்ந்தது கூறி அவளை ஆற்றியிருந்தாள்.

* * * *

சீவகன் சில நாட்களில் அரசிளங் குமரர் ஐவரையும் பல கலைகளிலும் வல்லவராக ஆக்கினான். மைந்தர் கல்வி முற்றப் பெற்றமையைக் கண்ட அரசன், சீவகன்

திறமையை மெச்சினான். ஒருநாள் அரசன் சபையில் வீற்றிருக்ும்போது, சிலரை அழைத்து, "என் மைந்தர்க்குக் கல்வி கற்பித்த வீரன், அரசர் குலமோ, அந்தணர் குலமோ, இரண்டிலொன்றுதான். மற்றக் குலத்தினர்க்கு இத்தகைய கல்வித் திறமை உண்டாகாது. ஆதலால் அவனை நீங்காத விலங்கிட்டுச் சிறை செய்கிறேன். இப்பொழுதே அவனைக் கொண்டு வாருங்கள்" என்று கட்டளையிட்டான். உடனே ஏவலாளர் சென்றனர். அரசன் கட்டளையைக் கேட்ட சபையோர், "கல்வியும் கொடிது போலும்" என்று கூறி வருந்தினர். 'என்ன நிகழுமோ' என்று அஞ்சினர்.

ஏவலாளர்களுடன் சீவகன் அரசனிடம் வந்து வணங்கினான். தடமித்தன், சீவகனை மகிழ்ச்சியோடு தன் பக்கத்தே உட்காரச் செய்து, "ஐய! நீ என் மைந்தர்க்குக் கல்வி கற்பித்தாய். அதற்குத் தக்க கைம்மாறு செய்ய வல்லவனல்லேன். என் மகள் கனகமாலையை உனக்கு மணம் செய்து கொடுப்பதே தக்க கைம்மாறு" என்று கூறினான். 'சீவகனுக்கு நீங்காத விலங்கு கனகமாலைதான்' என்று எண்ணிச் சபையோர் மனமகிழ்ந்தனர். சீவகன் மறுமொழி கூறாமல் இருந்தான். தடமித்தன் சீவகன் கையைப் பிடித்துக் கொண்டு, "வீர! 'கலையும் வடிவும் ஒருங்கே உடைய வீரனே கனகமாலைக்குக் கணவன்' என்று சோதிடன் கூறியுள்ளான். அவ்விரண்டும் ஒருங்கே உடையவன் நீயே. உனக்கே கனகமாலை உரியவள்" என்றான். சீவகன் உவகையோடு உடம்பட்டான். நல்ல நாளில் சீவகனுக்கும் கனகமாலைக்கும் மணம் நிகழ்ந்தது. காதலர் இருவரும் களிப்புடன் இருந்தனர்.

17

# சீவகனும் நந்தட்டனும்

இராசமாபுரத்தில் சீவகனைக் காணாது வருந்திய தோழர்கள் ஒன்று கூடி ஆலோசித்தனர். "நாம் இனிச் செய்யும் காரியத்தை முடிவாக ஆலோசிக்கவேண்டும்" என்று பதுமுகன் மொழிந்தான்.

"பதுமுகா! கட்டியங்காரனைக் கொன்று ஊரை அழித்து விட்டுச் சீவகனைச் சேர்வோம்" என்று புத்தி சேனன் சொன்னான்.

"நண்பர்களே! அது தகாது. சீவகன் உள்ள இடத்தை அறிந்து கொண்ட பிறகே கட்டியங்காரனைக் கொல்ல முயற்சிக்கவேண்டும்" என்றான் தேவதத்தன்.

"இல்லை, பகைவரைக் கொன்ற பிறகே, துன்பம் நீங்கும்" என்றான் சீதத்தன். பதுமுகன் உடனே எழுந்து நந்தட்டனை நோக்கி, "நண்ப! தாய் தந்தையர்க்கு வருத்தம் நீங்கும்படி அவர்களுடன் நீ இருக்க வேண்டும். அவர்கள் இறந்தால் நீர்க்கடனை நீயே செய்யவேண்டும்" என்றான்.

"பதுமுக! என் கண்ணீரால் எல்லோருக்கும் யான் நீர்க்கடன் செய்து விட்டேன். உயிருடன் இருப்பவர்க் கன்றோ, 'நீ தாய் தந்தையரைப் பார்த்துக் கொள்' என்று சொல்ல வேண்டும். யான் உயிர்வாழச் சம்மதி யேன். தாமதியாமல் பகைவனைக் கொல்லப் புறப் படுங்கள்" என்று நந்தட்டன் கூறினான்.

உடனே பதுமுகன் முதலியவர்கள் ஆயுதந் தாங்கிப் புறப்பட்டனர்; "சீவகன் வாழ்க" என்று சொல்லி

ஆரவாரித்தனர். அப்போது அவ்விடத்தே ஒருவன் பாட்டொன்றைப் பாடினான்.

'தலைவன் வந்து விடுவான். அவனை நினைந்து வருந்த வேண்டாம். அவன் வரும் காலம் இன்னும் வரவில்லை; வருந்த வேண்டாம்' என்னும் கருத்தமைந்த பாட்டைத் தோழர்கள் கேட்டதும் நின்று விட்டனர்.

"நாம் தனித்தனியே சீவகனைப் பல இடங்களிலும் சென்று தேடுவோம். அவனைக் கண்ட பின்பே கட்டியங்காரனைக் கொல்லவேண்டும். ஆதலால் எல்லோரும் தனித்தனியே பிரிந்து சென்று சீவகனைத் தேடுங்கள்" என்று பதுமுகன் கூறினான். அதை ஒப்புக்கொண்ட எல்லோரும் சீவகனைத் தேடச் சென்றனர்.

நந்தட்டன் காடு முழுவதும் தேடியும் சீவகனைக் காணமல் இராசமாபுரத்திற்கே வந்து சேர்ந்தான். சீவகனைக் காணாத வருத்தத்தால் அவன் மனம் சோர்வடைந்தது. ஒரு நாள் சீவகன் இரண்டாம் மனைவியான குணமாலையிருக்கும் மாளிகைக்குச் சென்றான். சீவகன் பிரிவால் நொந்து மெலிந்திருந்த குணமாலை, நந்தட்டனைக் கண்டதும் சிறிது மகிழ்ச்சி கொண்டாள். கவலையால் நந்தட்டன் முகம் வாடியிருப்பதைப் பார்த்ததும் குணமாலைக்கு வருத்தம் மிகுதியாயிற்று. நந்தட்டன் சீவகனுக்கு உடன் பிறந்தவன் என்ற எண்ணத்தால் அவனை உபசரிக்கத் தொடங்கினாள். பக்கத்தில் இருந்த சேடியைப் பார்த்து, "ஐயர்க்கு இனிய உணவைச் சமைத்துக் கொண்டு வாருங்கள்" என்று கூறினாள். உடனே சேடியர் சென்று இனிய உணவை ஆக்கிக் கொணர்ந்தனர். குணமாலையின் கட்டளையை மீறுவதற்கு

கந்தட்டன் அஞ்சினான். உடனே விருப்பும் வெறுப்பும் இல்லாமல் உணவை அருந்துவதற்கு அமர்ந்தான். அருகில் நின்றுகொண்டிருந்த குணமாலை, கந்தட்டன் உணவை அருந்துவதற்கு உடம்பட்டு அமர்ந்ததைக் கண்டு வருத்தமும் கோபமும் அடைந்தாள்.

“ஐயனே! உமது தலைவனார் இல்லாமலும் நீர் உணவு அருந்த உடம்பட்டீரே! என்ன கொடுமை இது! நீர் மிகவும் கொடியவர்; இவ்வாறு செய்வதற்கு நீரும் உடம்பட்டீரோ? ஐயனைத் தேட உமக்கு ஆவல் இல்லை!” என்று கூறிக் கொண்டே கண்ணீர் சோரக் கீழே விழுந்தாள் குணமாலை. அதைக் கண்டு கந்தட்டன் திடுக்குற்றான். தான் செய்தது தவறு என்று எண்ணிப் பேசாமல் அம் மாளிகையை விட்டு வெளியேறினான்.

குணமாலை கூறிய கொடிய சொற்களாலும் சீவகன் பிரிவாலும் கந்தட்டன் உள்ளம் புண்பட்டது. “சீவகனைக் காண்பேன்! அது முடியாது போனால் என் உயிரை விடுவேன்; இவ்விரண்டில் ஒன்றை இன்று பகற் பொழுதிற்குள் செய்து முடிப்பேன்” என்று உறுதி செய்து கொண்டே சென்றான். ‘சீவகனைப் பற்றிய செய்தி காந்தருவதத்தைக்குத் தெரிந்திருக்குமோ?’ என்று ஐயங் கொண்டவனாய், அவள் மாளிகைக்குச் சென்றான்.

‘சீவகனைச் சேரும் நாள் என்று வருமோ?’ என்று ஏங்கி வருந்தி வீணை வாசித்துக்கொண்டிருந்தாள் காந்தருவதத்தை. அப்போது கந்தட்டன், அங்கே சென்றான். ஐந்து வில் அளவு கொண்ட தூரத்தே நின்று காந்தருவதத்தையை வணங்கினான். காந்தருவதத்தை தனக்குற்று, ‘எதிரில் தலை வணங்கி நிற்பவன் கந்தட்டனே’ என்று அறிந்து கொண்டாள்.

"வீரனே! அவ்விடம் அமர்க" என்றாள். நந்தட்டன் மூன்று வில் அளவு உள்ள தூரத்தே நின்று மீண்டும் வணங்கிக் காந்தருவதத்தையின் காலில் உள்ள சிலம்பையே பார்த்து நின்றான். அவளுடைய வாடிய முகத்தையும், மெலிந்த தோள்களையும், பசலை பரவிய மார்பையும் அவன் பார்க்கவில்லை. நந்தட்டன் மனத்தில் கோபம் பொங்கிக்கொண்டிருந்தது.

'சீவகனுடைய பிரிவுக்கு இவள் வருந்தவில்லை; இல்லையேல் இவள் காலில் சிலம்பு முதலிய அணிகள் இருப்பதற்கில்லை; உல்லாஸமாக வீணையும் வாசிக்க மாட்டாள்' என்று அவன் எண்ணினான். "அன்னையே! எம் ஐயன் எங்கு இருக்கிறான்? அவன் இறந்து விட்டால் நீர் தவம் செய்தல் ஒரு காரியம்; இல்லையேல் தீயிலே வீழ்தல் ஒரு காரியம். இவ்விரண்டும் இல்லாமல், கணவன் இறந்தால் ஆபரணங்களைச் சுமந்திருப்பதை யான் கேட்டறியேன்" என்று கூறிக்கொண்டே குனிந்து நின்றான். சீவகனிடத்துள்ள அன்பாலும், வருத்தத்தாலும் நந்தட்டன் கடிந்து கூறுகிறான் என்று எண்ணி அவனைக் காந்தருவதத்தை பொறுமையுடன் தேற்றினாள். சீவகன் வேற்றுருவம் கொண்டு மறைந்திருப்பதையும் நந்தட்டனுக்குக் கூறினாள். சீவகன் இருக்குமிடத்தைக் காண்பதற்கு ஆவல் கொண்ட நந்தட்டன் மகிழ்ச்சியுற்றான். தான் அறியாமல் பிதற்றியதற்கு மனம் வருந்தினான்.

"வீரனே! உன் தமையனார் நம்மை மறந்து பல கல்யாணங்களைச்செய்து இன்பமுடன் வாழ்கிறார். அந் நிகழ்ச்சிகளையெல்லாம் மதிமுகம் என்னும் விஞ்சையால் (மந்திரத்தால்) யான் அறிந்திருக்கிறேன். அப்படி

யிருக்க, ஐயனுக்குத் துன்பம் வந்தது என்று வருந்துவதில் என்ன பயன்? வீர! யான் ஏவும் காரியத்தைச் செய்தால் உன் தலைமயனைக் காண்பாய்" என்று கூறி புன்னகை செய்தாள் காந்தருவதத்தை.

"அன்னையே! இப்பிறப்பில் அல்லாமல் எழு பிறப்பிலும் யான் அடிமையாகக் கடவேன்" என்று கூறி நந்தட்டன் வணங்கினான். உடனே காந்தருவதத்தை ஒரு விஞ்சையைச் சொல்லித் தன் முகத்தைத் தடவினாள். உடனே அந்த விஞ்சை சீவகன் இருக்குமிடத்தை நந்தட்டனுக்கு விளக்கியது; சீவகன் ஒரு கட்டிலில் அமர்ந்து கனகமாலைக்குக் கற்பகமாலையைச் சூடி அலங்கரித்துக்கொண்டிருக்கும் காட்சியைக் கண்டு நந்தட்டன் வணங்கினான். அவ்விஞ்சையை உடனே அவள் மாற்றினாள்.

"அன்னையே! சீவகசாமியின் பாதத்தை யான் அடைகிறேன். அருள் செய்யவேண்டும்" என்று கூறினான் நந்தட்டன். 'சீவகன் சுதஞ்சணனை நீங்கிய பின் உருவம் முதலியவற்றை மாற்றிக்கொண்டிருக்கிறான். ஆகையால், அவனை நந்தட்டன் பார்க்க முடியாது. அல்லாமல் அரசனுடைய அரண்மனையில் அந்தப்புரத்தில் நந்தட்டன் தன் உருவத்துடன் சென்றால் தீங்கு உண்டாகும்; சீவகனை இவன் பார்க்கும் வரையில் சீவகன் போன்ற வடிவமே இவனுக்கும் இருக்க வேண்டும்' என்று காந்தருவதத்தை நிச்சயித்தாள். உடனே சேடியரை அழைத்து, "மாலை, சந்தனம், ஆடை, ஆபரணங்கள், வாள் முதலியவற்றைக் கொண்டு வாருங்கள்" என்று கூறினாள். அவற்றை உடனே கொணர்ந்தனர் சேடியர். "வீர! இவற்றை நீ அணிந்து கொள்'!

என்று நந்தட்டனுக்குச் சொன்னாள். அவள் கட்டளைப் படி ஆடையாபரணங்களைத் தன் மேனிமீது அணிந்து கொண்டான். வாள் முதலிய ஆயுதங்களை ஏந்திக் கொண்டான். வேற்று வடிவம் கொண்ட சீவகனைப் போலவே நந்தட்டன் விளங்குவதைக் கண்டு காந்தருவ தத்தை உவகை கொண்டாள். உடனே ஆகாசகாமினி என்ற மந்திரத்தை உச்சரித்தாள். பின்னர், சேடிய ரைக் கொண்டு, ஓரிடத்தைச் சந்தனத்தால் மெழுகச் செய்து, பூக்களை உதிர்த்து அகிற்புகையைப் புகைத்து அவ்விடத்திற் போட்ட படுக்கையில் நந்தட்டனைப் படுக்கும்படிக் கூறினாள்.

நந்தட்டன் உடனே மன்மதன் தம்பி போல் ஒளி வீசும் மேனியுடையவனாய்ச் சென்று படுக்கையிற் படுத் தான். உடனே உறங்கியவன் போலானான். காந்தருவ தத்தை உடனே சேடியருடன் அவ்விடத்தை விட்டு மாளிகையினுள்ளே சென்றாள். நந்தட்டன் கிடந்த அறையில் ஒரு பூதம் தோன்றியது. உடனே அவனை எடுத்துக்கொண்டு போய் விடியற்காலத்து இருளில் ஏமமாபுரத்தில் உள்ள சீவகன் வாழும் அரண்மனையில் படுக்கவைத்து மறைந்து சென்றது.

விசயன் முதலிய அரசிளங் குமரர் வில்வித்தை பழகும் இடத்தில் நந்தட்டன் உறங்கிக்கொண் டிருந் தான். அரண்மனை வேலைக்காரியாகிய வசந்தரி என் பவள் அப்போது வில்வித்தை பழகும் இடத்தை வழி படுவதற்குத் தூப தீபங்களும் பூவும் ஏந்தி வந்தாள். அந்த இடத்தை அவள் அணுகியதும் பூமியில் உறங்கிக் கிடந்த நந்தட்டனைக் கண்டாள். கனகமாலையின் கணவன் என்று மயங்கித் தனக்குள், 'ஐயன் வெறுந்நிலத்தில்

கிடப்பதற்குக் காரணம் என்ன' என்று எண்ணிக் கனக மாலையைக் கோபித்தற்கு விரைந்து போனாள். அந்தப் புரத்தில் படுக்கையில் கனகமாலையும் சீவகனும் மகிழ்ந் திருப்பதைக் கண்டு வசந்தரி திடுக்குற்றாள். 'இது என்ன அதிசயம்! கனகமாலையின் கணவன் பெரிய மாயாவியோ?' என்று எண்ணிப் பயந்து கனகமாலையின் தமையன் விசயன் இருக்குமிடம் ஓடினாள். வசந்தரி ஓடி வந்ததைக் கண்டதும், "வசந்தரி, என்ன விசேஷம்?" என்று விசயன் கேட்டான்.

"இளவரசே! வில்வித்தை பயிலும் இடத்தை யான் தீப தூபமிட்டு வணங்கச் சென்றேன். அங்கே வெறும் நிலத்தில் கனகமாலையின் கணவர் உறங்கிக் கிடந்தார். யான் கனகமாலையிடம் கோபம் கொண்டு அவளைக் கேட் பதற்கு, விரைந்து அந்தப்புரம் சென்றேன். ஆனால் அங்கும் படுக்கையில் கனகமாலையுடன் ஐயன் இருக் கிறார்; அவர் செய்தி பெரிய மாயமா யிருக்கிறது; பாதுகாத்துக் கொள்ளுங்கள்" என்று கூறிச் சென்றாள் வசந்தரி.

அதைக்கேட்டு விசயன் வியப்பும் அச்சமும் அடைந் தான். உடனே விரைந்து வில்வித்தை பழகும் இடத் திற்குச் சென்றான். அப்போது நன்றாகச் சூரியோதயம் ஆகிவிட்டது. நந்தட்டனும் உறங்கி விழித்தவன்போல் எழுந்து உட்கார்ந்தான். அச்சமயம் விசயன் அவ்விடத் திற்கு வந்து நந்தட்டனைக் கண்டான். வசந்தரியைப் போலவே விசயனும் சந்தேகம் அடைந்தான். சிறிது உற்றுப் பார்த்த பின், 'இவன் வேறு ஐயன் வேறு' என்று அறிந்து கொண்டான்.

"ஐயனே! நீ யார்?" என்று விசயன் கேட்டான். ஊழ்வினையால் நந்தட்டனுக்கு மறுமொழி கூற நா எழவில்லை; பேசாமல் உட்கார்ந்திருந்தான். உடனே விசயனுக்கு அதிசயமும் ஐயமும் உண்டாயின. விரைவாகச் சீவகன் இருக்குமிடம் சென்று அவனிடம் கூறலானான்:

"ஐயனே! வசுந்தரி, வில்வித்தை பயிலும் இடத்தை வணங்கச் சென்றனளாம். அங்கு வெறும் நிலத்தே தாம் உறங்குவதைக் கண்டு கனகமாலையைக் கோபிக்க இங்கு வந்தனளாம். இவ்விடத்திலும் தாம் இருக்க, மனம் மயங்கி என்னிடம் வந்து கூறி, 'ஐயன் செய்தி மாயமாயிருக்கிறது. பாதுகாத்துக்கொள்ளுங்கள்' என்றும் கூறிச் சென்றாள். யான் சென்று அவனைப் பார்த்தேன். அவன் உம்முடைய உத்தம இலக்கணத்தை உடையவனாய் இருக்கிறான்; நீண்ட தோளுடையவன். சிவந்த கண்ணையுடையவன்; நீல நிறத்தையும் சுழற்சியையும் உடைய தலைமயிருடையவன்; மாலைகளை அணிந்த அவன் மேனி பொன்னைப்பூசினாற்போன்று விளங்குகிறது. காதுகளில் அழகிய குண்டலங்கள் தொங்குகின்றன. மார்பில் குவளைமாலையை அணிந்திருக்கிறான். அந்த அழகன் யார் என்று யான் அறியேன்" என்றான்.

விசயன் வார்த்தைகளைக் கேட்ட சீவகன் வியப்புற்றான்; 'விசயனும், வசுந்தரியும் தாம் கண்ட வாலிபனை யான் என்று கூறுகின்றனர்; ஆதலால், காந்தருவதத்தையின் சூழ்ச்சியால் நந்தட்டனே என் உருவத்தைப் பெற்று வந்திருக்கிறான்' என்று எண்ணினான். உடனே விரைந்து சென்றான். நந்தட்டன், சீவகனைக் கண்டதும் ஆனந்தக் கண்ணீர் பெருகத் தருமனைக் கண்ட அருச்சுனனைப்போல் கை குவித்து அவன் பாதங்களில்

வீழ்ந்தான். தொழுது கீழே கிடந்த தம்பியான நந்தட்டன் தாமரைத் தடாகம் போன்று விளங்கினான். தமையனான சீவகன் தம்பியின் முகம் முதலியவற்றை மலரச் செய்தலால் பால சூரியனைப்போல் பொலிவுடன் நின்றான். சீவகன் நந்தட்டனை மூன்று முறை தழுவிக் கொண்டு தனக்கு உற்ற வருத்தமெல்லாம் நீங்கினான். அதைக் கண்ட விசயன், 'சீவகனும் நந்தட்டனும் உடன் பிறந்தார்' என்று அறிந்தவனாய் உவகை கொண்டான். சீவகன் நந்தட்டனை இருக்கச் செய்து, "நந்தட்ட! என் நிலைமையை அறியாமல் நீ மிகவும் வருந்தி மேனி கருகிப் போயினை; தாய் தந்தையரும் தோழரும் மிக வருந்தியிருப்பார்கள். பின்னர் வரும் தீங்கை முன்பே அறியாமல் எல்லாரும் வருந்தும்படிச் செய்து விட்டேன்; அதற்காக இனி நீ வருந்தாதே" என்று சொன்னான்.

"ஐயனே! நன்மையும் தீமையும் அடைந்தவர் நீர் மட்டுமல்லர். முன்பு இருந்த இராமபிரானுக்கும் உண்டு. இராமபிரான் உம்மைப்போற் செய்யாமல் தம் துன்பத்திற்குத் தம்பியையும் உதவியாக அழைத்துச் சென்றார். நீர், என்னை, அன்று மதனன்மேல் போருக்குச் செல் என்று ஏவாமல், உடன் பிறந்த மகளிரைப்போல் உதவாதிருந்து வருந்தும்படிச் செய்து விட்டீர்; முற்பிறப்பில் செய்த பாவத்தாலேயே உமது பாதங்களைப் பிரிந்து பாவியேன் வருத்தம் அடைந்தேன்" என்று கூறிக் கண்ணீர் சொரிந்தான் நந்தட்டன்.

"நந்தட்ட! நீ வருந்தாதே" என்று பல கூறித் தேற்றி அவனைக் கனகமாலையிடம் அழைத்துச் சென்றான். நந்தட்டன் கனகமாலையைக் கண்டதும் வணங்கினான். நந்தட்டனை இன்னானென்றறியாத கனக

மாலை, சீவகனைப் பார்த்து, 'இவர் யார்' என்னும் குறிப்பால் நோக்கினாள்.

"நங்காய், இவன் உன் மைத்துனன்" என்று கூறினான் சீவகன்.

"இத்தகைய இளைய உறவினரை எழு பிறப்பும் பெறவேணுக" என்று கூறி நந்தட்டனுக்கு விருந்து செய்து உபசரித்தாள். விருந்துண்ட பின்னர், சீவகனும் நந்தட்டனும் தனியே இருந்து பேசினர். நந்துக்கடன் முதலியவர்களது வருத்தத்தையும், தோழர்கள் தேடியலையும் வருத்தத்தையும், அவர்கள் செய்கையையும், தான் தேடச் சென்றதையும் கூறினான். குணமாலையின் மாளிகைக்குச் சென்றதையும் அவள் கூறியதையும், பின்னர் காந்தருவதத்தையிடம் சென்று அறியாமையால் தான் கூறியதையும், அவளால் தான் இங்கு வந்து சேர்ந்ததையும் மொழிந்தான். சீவகன் அதைக் கேட்டு வருந்திக் கண்ணீர் விட்டான்.

பின்னர், நந்தட்டன் சீவகனை நோக்கி, "ஐயனே, நீர் போனபின் நிகழ்ந்தவற்றையும் சொல்ல வேண்டும்" என்றான். சீவகன், தான் சுதஞ்சணனால் கொண்டு போகப்பட்டது முதல், பதுமை, கேமசரி, கனகமாலை முதலிய மகளிரை மணந்த வரலாறுகளையும் மற்றவற்றையும் நந்தட்டனுக்குக் கூறி, 'தாய் தந்தையரைக் காணப் பெறவில்லையே' என்று வருந்தினான். நந்தட்டன் அதைக் கண்டு உள்ளம் நொந்து கண்ணீர் சொரியலானான். சீவகன் நந்தட்டனைத் தேற்றி, "வீர! பொருள் பெறலாம்; பகைவரை அழித்துவிடலாம்; பெண்டிர், பிள்ளைகள் யாவும் பெறலாம்; உண்டாக்க முடியாத சிறந்த பொருள் உடன் பிறப்பல்லவா? அத்

தனைய என் தம்பியைப் பெற்றேன்; இனி எனக்கு அரியது என்ன இருக்கிறது?'' என்று கூறி அவனை மகிழ்வித்தான். பின்னர் இருவரும் இனிதாக அளவளாவினர். நடமித்தன் முதலியவருக்குச் சீவகன் கந்தட்டனை அறிமுகம் செய்வித்தான். பாலும் தேனும் கலந்தது போல் சீவகனும் கந்தட்டனும் இனிதாகப் பொழுது போக்கிக்கொண்டு ஏமமாபுரத்தில் இருந்தனர்.

## 18

# துறவு பூண்ட மங்கை

சீவகனைத் தேடிச் சென்ற தோழர்கள் அவனைக் காணாமையால் இராசமாபுரத்திற்கு வந்து சேர்ந்தனர். தோழர்கள் சீவகன் பிரிவால் மனம் குழைந்து உடல் மெலிந்து உருகினர். 'சீவகனை எவ்வாறு தேடிக் காண்பது?' என்று ஆலோசனை செய்தனர். 'காந்தருவதத்தை வருத்தமில்லாமல் இருப்பதால், சீவகன் வேறு எவ்விடத்திலேனும் மறைந்திருப்பானோ? அவ்விதம் அவன் எங்கு இருந்தாலும் அறிந்து விடுவோம்' என்று எண்ணி ஒரு முடிவு செய்தனர். உடனே, பதுமுகன், புத்திசேனன், தேவதத்தன், சீதத்தன் நால்வரும் காந்தருவதத்தையின் மாளிகைக்குச் சென்றனர். தோழர்களின் வரவை அறிந்த காந்தருவதத்தை அவர்களை வரவேற்று உபசரித்தாள். தோழர்கள் காந்தருவதத்தையை வணங்கி நின்று, சீவகன் இருக்குமிடத்தைக் கூறும்படிக் கேட்டனர். சீவகன் ஏமமாபுரத்தில் மறைந்திருப்பதையும், பிறவற்றையும் அவள் சொன்னாள். சீவகன் ஏமமாபுரத்தில் இருக்கிறான்

என்பதைக் கேட்டதும் அளவில்லாத மகிழ்ச்சி தோழருக்கு உண்டாயிற்று. ஆனந்தத்தால் கண்ணீர் பெருக எழுந்து குதித்தனர்; ஆரவாரம் செய்தனர்.

"அன்னையே! உம்மைத் தொழுதவர்களுக்குத் துன்பமெல்லாம் நீங்கும். அடியேம் மனமகிழ்ந்தோம். ஏமமாபுரம் சென்று சீவக சாமியின் பாதத்தைச் சேர்கிறோம். தாங்கள் சொல்லும் காரியம் உண்டேல் கூற வேண்டும்" என்றனர் தோழர். காந்தருவதத்தை மகிழ்ச்சியோடு சீவகனுக்கு ஒரு திருமுகம் (கடிதம்) எழுதிப் பிறர் வாசிக்காதவாறு, அரக்கிட்டுக் காதோலையால் முத்திரை செய்து அதைத் தோழரிடம் கொடுத்தாள். தோழர்கள் வணங்கித் திருமுகத்தைப் பெற்றுப் புறப்பட்டனர்.

காந்தருவதத்தையின் மாளிகையை விட்டு நீங்கியதும் ஏமமாபுரம் போவதற்குத் தோழர்கள் ஆயத்தம் செய்தனர். விரைவில் இருபதினாயிரம் குதிரைவீரர்கள் குதிரைகளுடன் தோழர்களின் கட்டளைப்படி வந்து சேர்ந்தனர். வெண்மையான கடலலைகள் போலக் குதிரைகள் வரிசை வரிசையாய் நின்றன. ஒரு கொடியில் நூறு காத தூரம் செல்வனவாகிய எருதுகளும், கோவேறு கழுதைகளும், ஒட்டகங்களும் பண்டங்களைச் சுமந்து வந்தன. சிறிது நேரத்தில், கண்ணைக் கவரும், காட்சியை யுடையதும், பச்சைக் கிளிகள் போன்ற நிறம் உடையதுமான குதிரைகள் நான்கு வந்தன. நபுல விபுலர்கள், கந்துக்கடன் முதலியவருக்குக் காவலாக இராசமாபுரத்திலேயே தங்கினர். பதுமுகன் முதலிய நால்வரும், அந்தப் பச்சைக் குதிரைகள்மீது ஏறினர். சங்கம், பறை முதலிய வாத்தியங்கள் முழங்கின. வாளும்

வேலும் மின்னின. தோழர்கள் குதிரைப் படையுடன் ஏமமாபுரத்தை நோக்கிச் சென்றனர். பல காடுகளையும் மலைகள் பலவற்றையும் கடந்தனர். செல்லும் வழியில் மிக அழகிய சோலையைக் கண்டு அங்கே தங்க எண்ணினர். அந்த இடம் தண்டகாரணியம் என்று தெரிந்ததும் தோழர்கள் மகிழ்ந்தனர். வண்டுகள் உறங்க, குயில்கள் கூவ, மயில்கள் நடனம் ஆடும் அந்தச் சோலையில் தோழர்கள் படையுடன் தங்கி இளைப் பாறினர். பூக்களின் வாசனையாலும் பொன் போன்ற கனிகள் நிறைந்த மரங்களாலும் உள்ளம் குளிர உடல் குளிர வீசும் மந்தமாருதத்தாலும் தேவருலகைப் போன்று விளங்கியது அந்தச் சோலை. அதன் நடுவில், முனிவரும் யோகியரும் தவம் செய்துகொண் டிருந்த தாபதப்பள்ளி என்னும் இடத்தைக் கண்டனர் தோழர். தாபதப்பள்ளியின் அழகையும் பிறகாட்சிகளையும் பார்ப் பதற்கு விரும்பித் தோழர் சுற்றித் திரிந்தனர்.

பெரிய மரத்தின் நிழலில் பூக்களைச் சொரியும் செடிகளுக்கு அருகில் மரப் பலகையில் அமர்ந்திருக்கும் துறவு பூண்ட மங்கை ஒருத்தியைத் தோழர் கண்டனர். காவியுடை அணிந்து நீண்ட கூந்தல் சடைபோலச் சுருண்டு தொங்க, மெல்லிய மேனி வருந்த துறவுக் கோலத்துடன் அம்மங்கை அமர்ந்திருந்தாள். தோழர்கள் அந்த மங்கையைக் கண்டதும் வியப்பும் அச்சமும் உடை யவரானார்கள். 'இம்மங்கை பொற்றாமரையில். வாழும் திருமகளோ! வீணை வித்தகியான நாமகளோ! உமா தேவியோ!' என்று எண்ணி அதிசயித்தனர். சச்சந்தனை இழந்த விசயை துறவுக்கோலம் பூண்டு அவ்வாறு நோன்பு கொண்டிருந்தாள். அவள் 'சீவகனை மயானத்

தில் விட்டுப் பிரிந்து வந்தோமே' என்று எண்ணி நாள் தோறும் மனம் உருகினள். 'சீவகனைக் காண்போம்' என்ற எண்ணத்தால் அவள் உயிர் உடலில் தங்கி இருந்தது.

"தேவி! தாங்கள் யார்? இங்கு இருப்பதன் காரணம் என்ன? தங்கள், ஊர் குலம் முதலியவற்றையும் தயவுசெய்து சொல்லவேண்டும்" என்று தோழர் வினவினர்.

"வீரர்களே! யான் இங்கு வந்ததையும், என் குலத்தையும் இந்த வேஷத்தோடு யான் கூறலாகாது. நீங்கள் யார்? இங்கு வந்த காரணம் என்ன? உங்கள் வரலாற்றைக் கூற முடியுமானால் சொல்லுங்கள்" என்றாள் விசயை.

விசயையின் சொற்களைக் கேட்ட தோழர் வாய் பேசாதிருந்தனர். உடனே தேவதத்தன் விசயையின் முன்சென்று வணங்கிக் கூறலானான்:

"தேவி! செல்வத்தால் சிறந்த இராசமாபுரம் என்னும் நகர் எங்களுடைய ஊர்; அந்நாட்டின் பெயர் ஏமாங்கத நாடு. அந்த நகரத்தில் சச்சந்தன் அரசனாக இருந்தான். அவன் மந்திரி சாகரனுக்கும் குருதத்தை என்பவளுக்கும் பிறந்த இவன் சீதத்தன். சச்சந்தனுடைய குருவாகிய அசலனுக்கும் திலோத்தமை என்பவளுக்கும் பிறந்த இவன் புத்திசேனன். அரசனுக்கு உரிய செட்டியாகிய தனபாலனுக்கும் பவித்திரை என்பவளுக்கும் பிறந்த இவன் பதுமுகன். அரசனுக்கு உயிர் போன்றவனை விசயதத்தனுக்கும் பிரீதிமதி என்பவளுக்கும் பிறந்தவன் யான்; என் பெயர் தேவதத்தன். சச்சந்தன் இறந்த அன்றே கந்துக்கடன் பெற்ற நம்பி

யோடு நாங்கள் பிறந்தோம். எங்கள் பெற்றோர் அந்த நம்பிக்கு எங்களைத் தோழராகக் கொடுத்தார்கள்; ஒரு வருஷத்திற்குப்பின், நபுலன், விபுலன், நந்தட்டன் என்பவர் பிறந்தனர். அவர்களுடன் நாங்கள் ஐவரும் சேர்ந்து திசை யானைகள் எட்டைப்போல் வளர்ந்து திரிந்தோம். நல்லாசிரியரிடம் பல நூல்களைக் கற்றோம்; வில், வாள், வேல் முதலிய படைத் தொழில்களையும் வீணைத் தொழிலையும் கற்றோம். மல் யுத்தம், தேர்ப் போர், யானைப் போர், குதிரைப் போர், காலாட் போர் முதலியவற்றில் ஸமர்த்தரானோம். எங்கள் நம்பி பசுக் கூட்டத்தை மீட்டுக் கோவிந்தையைப் பதுமுகனுக்குக் கலியாணம் செய்வித்தான். காந்தருவதத்தையை இசைப் போரில் வென்று மணந்தான். யானையை அடக்கிக் குணமாலையை மணந்தான். அவன் எங்கள் உயிர்த் தோழன்; அவன் பெயர் சீவகன். அவனைப்பெற்ற நந்துக்கடன் ஒரு நாள் கட்டியங்காரனுடைய குற்றத்தைக் கண்டும் சீவகனைப் போர் செய்ய ஒட்டாமல் அடக்கினான். அதனால் கட்டியங்காரன் சீவகனை நகரிலே கொல்ல..." என்று சொன்னவுடன், "ஆ" என்று கூறி விசையை கீழே வீழ்ந்து மூர்ச்சை யடைந்தாள். தோழர் அதைக் கண்டு வியப்புற்றனர்.

"இத்தேவியார், சீவகனுக்கு உற்ற துன்பத்தைக் கேட்டவுடன் தம் மகனுக்கு உற்ற துன்பம் போல் எண்ணி வருந்தி மூர்ச்சித்து விழுந்தாரே! ஆ! என்னே! இவர் மிகவும் அருளுடையவராயுள்ளார். இவ்வாறு அருளை உண்டாக்கிய தவப் பெருமையை என்ன என்று சொல்வது!" என்று கூறி அதிசயித்தனர். விசையையின் மூர்ச்சையை நீக்க எண்ணினர். குளிர்ந்த நீர் முதலிய

வற்றைக் கொணர்ந்து தெளித்து மூர்ச்சையைத் தெளிவித்தனர். மூர்ச்சை நீங்கியதும் கண்ணீர் பெருகி ஓட விசயை பொருமினள்.

"எம்மானே! அரசன் இறக்க எந்திரமயிலூர்ந்து சுடுகாட்டில் வீழ்ந்த எனக்குத் துணையாய்த் தோன்றினையே! நீயும் பிரிந்தனையே! கந்துக்கடன் எடுத்துச் சென்று சுநந்தையிடம் கொடுக்க, உவகையோடு வளர்த்த அவளும் வருந்தும்படி பிரிந்தனையே! என்னையா! என்னரசே! 'நீ உயிருடன் இருந்து உன் புதல்வனால் பகையை வெல்க' என்று என்னை வேந்தன் விடுத்தானே. மூன்று கனவுகளில் முதற்கனவு பலித்ததே! மற்றக் கனவிரண்டும் பயன் தருமென்று உயிரோடிருந்தேனே! நீ ஒரு குடைக்கீழ் உலகமெல்லாம் அரசாள யான் கண்டு மகிழ்ந்து பின்பு, 'இனி நீ துறந்து போ அம்ம' என்று நீ சொல்ல நான் போவேன் என்று இருந்தேனே! அதற்குமுன் போயினையே! ஐயோ! கோமான் மகனே! குருகுலத்தாற் போரேறே! ஏமாங்கதத்தார் இறைவா! என் இன்னுயிரே! நாமா! சீவகனுக்குத் தீங்கு இல்லை என்று இங்கு வந்தார் சொல்லக் கேட்டு மகிழ்ந்திருந்தேன். கடலுள் கப்பல் கவிழ்ந்தது போலாயிற்றே! உன்னைப் பெற்றபின் மீண்டும் ஒரு முறை பார்க்க முடியாமல் செய்த தீவினை யாதோ? ஆ! என்னைப்போலப் பாவிகளான மகளிர் இனிமேல் பூமியில் தோன்றாதீர்" என்று புலம்பி மீண்டும் பூமியில் விழுந்து பொருமினள்.

விசயையின் புலம்பலைக் கேட்டதும் தோழர் மனம் கலங்கினர். 'சச்சந்தன் மனைவியான விசயை என்பவளே இவள்' என்று உணர்ந்தனர். சீவகன் விசயையி

னுடைய மகன் என்று எண்ணி, எண்ணி மனம் குளிர்ந்தனர். சீவகன் தாய் உயிருடன் இருப்பதற்கு அவர்கள் அதிக மகிழ்ச்சி கொண்டனர். உவகையால் ஒருவரை ஒருவர் பார்த்துச் சிரித்துக்கொண்டனர்.

"காரியம் முடிந்த விதத்தைப் பார்த்தீர்களா? கட்டியங்காரன் ஒரு பொருளோ! நாங்களே யமனைச் சென்று அவன் உயிரை உண்போம். உலகைக் கைக்கொள்வோம்" என்று கூறித் தோழர் ஆரவாரித்தனர். விசயையை இனிய வார்த்தைகளால் தேற்றினர்.

"தேவி! சீவகனுக்குச் சாவு இல்லை; அவனைக் கொல்லக் கொலைக்களத்தை அடைந்தவுடன் ஒரு தெய்வம் அத்துன்பத்தை நீக்கியது. அவன் இராசமாபுரத்தை விட்டு ஏமமாபுரம் சென்றான்; நாங்கள் அங்குச் செல்கின்றோம்; உம்மை வணங்கிப் போக இங்கு வந்தோம். இப்போது, சீவகன் வணிகன் அல்லன்; அரசன் என்று அறிந்துகொண்டோம்" என்று கூறினர். சீவகன் உயிரோடு இருக்கிறான் என்ற வார்த்தைகளால் விசயையின் உள்ளம் குளிர்ந்தது; உவகையால் உடல் பூரித்தாள்.

"வீரர்களே! சச்சந்தராஜன் என்னிடத்துக் காதலால் பூமியைக் காத்தலை விட்டு மந்திரியால் மாய்ந்தான். இரணியன் மந்திரியர் சொற்களைக் கேட்காமல், தன்னையன்றி வேறு கடவுள் இல்லை என்று கூறி உதவியின்றி மடிந்தான். அதுபோலவே, அரசனும், மந்திரியர் கூறிய புத்தியைக் கேட்காமல் கட்டியங்காரனுக்கு அரசைக் கொடுத்து அவனால் மாய்ந்தான். அரசன் அடைந்த பின்பு யான் அடைந்த துன்பங்களையெல்லாம் சீவகனுக்குக் கூறுங்கள். பின்பு சீவகனை வருந்தாதபடி

விரைவில் என்னிடம் அழைத்து வாருங்கள். இந்தக் காரியத்தில் சீவகனையல்லாமல் பிறர்க்கு ஒன்றும் சொல்லாதீர்கள்; யாரையும் நம்பாதீர்கள்; அறியாதவரோடும் மகளிரோடும் பேசாதீர்கள்; பகைவர் மனம், பாம்பின் ஓட்டம், மகளிர் மனம் என்ற மூன்றும் ஒரு நிலையில் நிற்பன அல்ல. ஆதலால் உள்ளத்தையும் பேச்சையும் பாதுகாத்துக்கொள்ளுங்கள்" என்று விசயை கூறினாள்.

"தேவி! இன்னும் ஒரு மாதத்திற்குள் தங்கள் திருவடியைச் சீவகன் சேரும்படி அழைத்து வருவோம்; பின்பு, பகையை வெல்வோம்'' என்று கூறி விசயையின் பாதங்களை வணங்கித் தோழர் புறப்பட்டனர்.

குதிரைப் படைகள் பேராரவாரமுடன் கிளம்பின; தோழர் நால்வரும் குதிரைகள்மீது ஏறி விரைந்து சென்றனர். மனோவேக வாயுவேகமாய் மலைகளையும், காடுகளையும் விரைவிற் கடந்து சென்றார்கள். ஏமமாபுரத்திற்கு நான்கு காத தூரத்தில் உள்ள நதிக்கரையை அடைந்தனர். அருகில், ஆறும் சோலையும் இருப்பதைக் கண்டு அங்கே இறங்கித் தங்கினர். அவ்விடம் ஏமமாபுரத்தின் எல்லை என்பதை வழிப்போக்கரால் அறிந்து அகமகிழ்ந்தனர். எல்லாரும் சிறிது இளைப்பாறிய பின், சோலை நடுவே உள்ள மணல் திட்டில் தோழர் நால்வரும் அமர்ந்து, 'சீவகனை எப்படிக் காண்பது?' என்று ஆலோசித்தனர்.

19

# சீவகனும் தோழரும்

ஏமமாபுரத்தின் புறநகர்ச் சோலையில் பதுமுகன் முதலிய தோழர்கள் சீவகனைக் காண்பதுபற்றி ஆலோசனை செய்தனர். நகரில் சீவகன் இருக்கிறானா என்று அறிந்து வரும்படி மூன்று வீரர்களை அனுப்பினர். பின்னர் பதுமுகன் எழுந்து, "நண்பர்களே! ஏமமாபுர மன்னனுடைய பசுக்களை நாம் வளைத்துக் கொள்வோம்; அப்போது பசுக்களை மீட்க அரசன் படை வரும்; சீவகனும் வருவான்; அப்போது அவனை நாம் சந்தித்துக் கொள்ளலாம்; போர்க்களத்தில் அவனைக் காண்பது நிச்சயம்; அதோ, பசுக்கள் மேய்கின்றன; விரைவில் புறப்படுங்கள்" என்று கூறினான்.

"பதுமுகா! நீ கூறியபடியே செய்யலாம்; ஆனால், சீவகன் அங்கு இருப்பதை அறியாமல் பசுக்களை வளைத்துக் கொள்ளக் கூடாது; அப்படி சீவகன் இல்லாது போனால் அரசனுடைய பெரும்படை வந்துவிடும்; அதைக் கண்டு நாம் திரும்பினால், 'போருக்குப் பின் காட்டினோம்' என்று பழிப்பார்கள். எதிர்த்தோமானால், யானைகள் முழுகும்படி இரத்தப்பெருக்கு உண்டாகும்; இக்காரியத்தில் இன்னும் ஆலோசிக்கவேண்டும்" என்று புத்திசேனன் கூறினான்.

மற்றத் தோழர்கள், "பதுமுகன் கூறியபடியே செய்யவேண்டும்; வேறு நினைக்க வேண்டாம்" என்று

கூறினர். அந்தச் சமயத்தில் முன்பு நகருக்கு அனுப்பிய மூன்று வீரர்களும் வந்து தோழரை வணங்கிக் கூறலாயினர்.

"ஐயன்மீர்! நாங்கள் நகருக்குச் சென்றவுடன் ஒரு காட்சியைப் பார்த்தோம். அரசன் யானையான வளைய சுந்தரம் மதம்கொண்டு எவருக்கும் அடங்காமல் ஓடியது. பாகர்கள் யானையிடம் போவதற்கு அஞ்சி ஓடி விட்டனர். நம் நந்தட்டனுடன் சீவகன் அங்கே தோன்றினன். உடனே சீவகன் ஓடிச் சென்று யானையை அடக்கி அதன் மீது ஏறி அரண்மனைக்குள் அதைச் செலுத்தினன். அதைக் கண்ட அரசனும் மக்களும் சீவகனைப் புகழ்ந்து போற்றி வரவேற்றனர். பின்னர், சீவகனும் நந்தட்டனும் தம் மாளிகைக்குச் சென்றனர். நந்தட்டன் அருகில் இருப்பதைக் கொண்டே சீவகனை நாங்கள் அறிந்து கொண்டோம்" என்றனர்.

வீரர்களின் வார்த்தைகளால் தோழர்களுக்கு மேலும் ஊக்கம் உண்டாயிற்று. உடனே பதுமுகன், சீவகனைக் கண்டு வந்த வீரர்க்குப் பொன்னாபரணங்களைப் பரிசாக அளித்தான். பின்னர், போருக்கு ஆயத்தமாகிக் கவசங்களைத் தோழர் அணிந்து கொண்டனர். இருபதினாயிரம் குதிரை வீரர்களும் போருக்குப் புறப்பட்டனர். பறை, சங்கம் முதலியன முழங்கின. தோழர் நால்வரும் குதிரைகள் மீது ஏறி, புற நகரின் புறத்தில் மேய்ந்து கொண்டிருந்த பசுக்களை நோக்கிச் சென்றனர். தோழரின் குதிரைப் படை அரண்மனைப் பசுக்களை யெல்லாம் வளைத்துக் கொண்டது. பசுக்களைக் காக்கும் இடையர் தோழர் படையுடன் பொருதனர். தோழர்கள் அம்புகளைப் பொழிந்து இடையர்களைத் துரத்தினர்.

இடையர்கள் அஞ்சிப் புறங் காட்டினர்; உடனே அரச னுக்கு அறிவிக்க எண்ணி ஓடினர். தோழர் படை பசுக் களை வளைத்துக் காவல் செய்தது.

* * * *

அரண்மனையில் சபாமண்டபத்தில் அரசன் நடமித்தன் நந்தட்டனுடன் பேசிக்கொண் டிருந்தான். சீவகனுடைய குலம் முதலியவற்றை அறிய அரசன் ஆவல் கொண்டான். "குமர! உங்களுடைய நாடு, நகரம், குலம் முதலியவற்றைக் கூற வேண்டும்" என்றான் அரசன்.

"அரசே! எமது நாடு ஏமாங்கதம். இராசமாபுரம் என்பது நகரின் பெயர். எம் குலம்......" என்று நந்தட்டன் கூறிக்கொண் டிருக்கையில், "பகைவரின் குதிரைப்படை பசுக்கூட்டத்தைக் கவர்ந்தது" என்று இடையர் பேரிரைச்சல் செய்தனர். நடமித்தன் திடுக் குற்றுக் கண்கள் சிவக்க எழுந்து நின்றான்.

"சேனுபதி! உடனே நான்கு படைகளுடன் சென்று பகைவரைச் சிறை செய்து பசுக்கூட்டத்தை மீட்டு வருக" என்று கட்டளையிட்டான். சேனுபதி விரைந்து சென்றான். நந்தட்டன் விரைந்து சென்று சீவகனிடம் அதைக் கூறினுன். சீவகனும் நந்தட்டனும் போருக்குப் புறப்பட்டனர்.

அரசன் படைகள் வெள்ளம்போல் திரண்டு எழுந்தன. வாத்தியங்கள் முழங்கின. யுத்தமுரசு இடியைப்போல் முழங்கிக்கொண் டிருந்தது. யானைகள் நடுங்கி ஓடின; குதிரைகள் தாவிச் சென்றன. காலாட் படை விரைந்து சென்றது. படையின் நடுவில் சீவகன் வில்லைத் தாங்கி தேரில் நின்றான். அவன் தேரை

கந்தட்டன் ஓட்டிக்கொண் டிருந்தான். தேரில் நின்ற படியே சீவகன், சில வார்த்தைகளைக் கூறினான்:

"அரசனுடைய பசுக்களைக் கவர்ந்த பகைவரை அரசன் பாதங்களில் வணங்குமாறு செய்வேன்; செய்யேனானல், கன்னிமகளிர் உள்ளத்தே தோன்றும் காமம்போல, என் பெயர் உலகில் பரவாது மறைக" என்று வஞ்சினம் கூறினான். விரைவில் சீவகன் படையும் தோழர் படையும் எதிரிட்டு மோதின. அரசன் படை யோடு பொருதற்குத் தோழர் வில்லைக் கையில் ஏந்தினர். படைகளின் நடுவில் கந்தட்டன் தேரை ஓட்ட, அதில் சீவகன் வில் ஏந்தி நிற்பதைப் பதுமுகன் கண்டு உவகை கொண்டான். உடனே, 'அடியேமாகிய யாம் தன் (சீவக சாமியின்) அடி நிழலில் தங்கவேண்டிச் சச்சந்தன் மகனைக் காணவந்தோம்' என்று ஓர் அம்பில் எழுதினான். அந்த அம்பை வில்லில் தலை கீழாகத் தொடுத்துச் சீவகன் தேர்மீது எய்தான். பதுமுகன் எய்த அம்பு, சீவகனுக்கு முன்பு பின் முன்னாக மாறி வீழ்ந்தது. அந்த அம்பையும், அதிலுள்ள எழுத்துக்களையும் கண்ட சீவகன், 'இக்காரியம் செய்தது பதுமுகனே' என்று உணர்ந்தான். உடனே போர் செய்யாதபடி, தன், மேல் ஆடையை எடுத்து வீசித் தன் சேனையை விலக்கினான். உடனே தோழர் படையும் பின்வாங்கின. அப்போது பெரும் ஆரவாரம் உண்டாயிற்று.

தோழர் நால்வரும் சீவகனுக்கு முன் ஓடிச் சென்று அவன் பாதங்களில் வணங்கினர். கண்ணீர் சொரிந்து தம் அன்பைப் புலப்படுத்தினர். சீவகன் மகிழ்ச்சியோடு தோழரைத் தழுவிக்கொண்டான். கந்தட்டனும் தோழரும் தழுவிக் கொண்டனர். சீவகனும் தோழரும்

நந்தட்டனும் அளவளாவி மகிழ்ந்தனர். விசயன் முதலிய அரசிளங் குமரர்க்குத் தோழரைச் சீவகன் அறிமுகம் செய்வித்தான். சீவகன் முதலிய யாவரும் யானைகள் மீது ஏறினர். தோழரும், அரசிளங் குமரரும் சூழ, சீவகனும் நந்தட்டனும் நகருக்குள் சென்றனர். வீரரும் மகளிரும் வரவேற்க யானைகளிலிருந்து யாவரும் இறங்கி அரண்மனைக்குள் சென்றனர். சீவகன் தோழரை அழைத்துக்கொண்டு தடமித்தன் இருக்குமிடம் சென்றான். யாவரும் அரசனை வணங்கி நிகழ்ந்ததைக் கூறினர். அதைக் கேட்டு வியப்புற்ற தடமித்தன், தோழரைக் கண்டு இன்னாரென்று அறியானாய் சீவகனைக் குறிப்புப்பட நோக்கினான். தடமித்தனுடைய முகக் குறிப்பை அறிந்த சீவகன், "இவர்கள் என் உயிர்த் தோழர்கள்" என்றான்.

தடமித்தன் தோழரை உபசரித்து அளவளாவிய பின், "கனகமாலையிடம் அழைத்துச் செல்க" என்று சீவகனிடம் கூறினான். சீவகன் தோழரை அழைத்துக் கொண்டு கனகமாலை இருக்கும் மாளிகையை அடைந்தான். தோழர் கனகமாலையைக் கண்டதும் வணங்கி நின்றனர். சீவகன் புன்னகையுடன் அருகில் நின்றான். கனகமாலை திடுக்குற்று நாணியவளாய், 'இவர்கள் யாரோ' என்னும் குறிப்புப்பட சீவகனைப் பார்த்தாள். "இவர்கள் என் உயிர்த் தோழர்" என்று கூறிப் பின்னர் நிகழ்ந்ததையும் உரைத்தான்.

"ஓ! பசுக்களைக் கவர்ந்த கள்வர்களா, இவர்கள்! இனி இவர்கள் தண்டிக்கத் தக்கவர்கள்தாம்!" என்று கூறிக் கனகமாலை நகைத்தாள். பின்னர், தோழர் நால் வருக்கும் அன்புடன் விருந்து செய்து உபசரித்தாள்.

சீவகன் தோழருடன் எல்லாவற்றையும் பேசி மகிழ்ந்திருந்தான்.

தனியே சீவகன் இருக்கும்போது அவனிடம், காந்தருவதத்தை கொடுத்த திருமுகத்தை கொடுத்தான் புத்திசேனன்; காந்தருவதத்தை அனுப்பிய திருமுகத்தை ஆவலுடன் சீவகன் பிரித்தான்.

"திருவடியின் கீழ், சிற்றடிச்சியாகிய தத்தை, வணங்கினேன்; அடிகள் கண்டருள்க; எம் மன்னனாகிய கலுழவேகன், வயிரமணிகளும், மாலைகளும், ஆபரணங்களும், வீரபானமும், சந்தனம் முதலியனவும் வில் முதலிய படைக்கலங்களும் தானிடம் கொடுத்தனுப்பினான். யான், தான் வந்ததைப் பிறர் அறியாமல் அவனை மறைவிடத்தே அழைத்து வந்து, 'சீவகசாமி ஏழு மாதங்களுக்கு முன்பு தோழருடன் ஏமமாபுரம் சென்றார். இக்காரியம் சீவகசாமி தாமே அருளினார்' என்று கூறினேன். கட்டியங்காரன் தம்மைச் சிறை செய்தானென்ற பழி, வெள்ளி மலையில் பரவுதற்கு அஞ்சி, வேறு சில காரியங்களையும் சொல்லிச் சூளுறவு (ஆணை) கொண்டு அவனை அனுப்பினேன். இனி அந்தப் பழியை மறைத்து, அரச உரிமையைப் பெறுவதே புகழாகும். அவ்விதமின்றிப் பல மகளிரைக் கலியாணம் செய்து கொள்வதனால் சிறிதும் புகழ் இல்லை. சிறைப் பழியை அல்லாமல், வேறு ஒரு பழியையும் குணமாலை உண்டாக்குவாள் போல் இருக்கிறாள். காரணம், தாமே தம்மைப் பிரிந்த பிரிவால் ஆற்றாளாய், இரவு இது, பகல் இது என்று அறியாளாய் மயங்குகிறாள். சந்திரனைப் பார்த்துச் சூரியனென்றும், சூரியனைப் பார்த்துச் சந்திரனென்று கூறிப் பிதற்றுகிறாள். அவ

ளுடைய முகமும், தோளும், மார்பும் அழகிழந்து வாடி யின்றமையால், இனி அவள் பிழைப்பாளோ, இறப் பாளோ அறியேன். அவள் துன்பத்தைக் கண்ட அருமைக் கிளி, 'சீவகசாமி, நாளை வருவான்; நீ வருந் தாதே' என்று கூறினால், 'கிளியே! நீ கூறிய நாளை என்னும் நாள் பக்கத்தில் உள்ளதோ? தூரத்தில் உள்ளதோ? அந்த நாளைச் சொல்லு' என்று பிதற்று கிறாள்; அதைக் கேட்டுக் கிளி சிரிக்கின்றது. அவள் துன்பம் நாள் தோறும் இவ்விதம் இருக்கின்றது. புது மணவாளப் பிள்ளை (நித்ய கல்யாணர்)யாகிய தாங்கள் என் மனத்தில் நீங்காமல் இருக்கின்றமையால் யான் வருந்தாமல் பொழுது போக்கியிருக்கிறேன். இனி தாம், தம்மைப் பாதுகாத்துக் கொள்க'' என்று வாசித் தான். புது மணவாளப் பிள்ளை என்று ஊடலுணர்த்தும் சொல்லால் காந்தருவதத்தை எழுதிய திருமுகத்தைப் படித்ததும் வியப்புடன் தலையை அசைத்துக் கொண் டான். 'தம்மைப் போற்றிக் கொள்க' என்று முடிவில் எழுதியிருப்பதைக் கண்டு உள்ளம் பூரித்தான். குண மாலையின் வருத்தத்தை உணர்த்தும் சொற்களைப் படித்து மனம் உருகினான். பின்னர், தன் தோழர் இருக்கும் இடத்தை அடைந்தான்.

"நண்பர்களே! நீங்கள் என் பிறப்பை எவ்வாறு உணர்ந்தீர்கள்?'' என்றான்.

"ஐயனே! தண்டகாரணியத்தில் சச்சந்தன் தேவி விசயையைக் கண்டோம். தேவியார், தவ உருவம் தாங்கி, மனத்தில் 'நீ வாழ வேண்டும்' என்ற ஆசையால் தாபதப் பள்ளியில் அமர்ந்துள்ளார்; அவரைக் கண்டு உன் பிறப்பை அறிந்தோம்; முன்பு, யாங்கள், உன்னைக்

கத்துக்கடன் மகன் என்ற முறையில் பழகிய குற்றத்தைப் பொறுக்க வேண்டும்'' என்று தோழர் கூறினர். அதைக் கேட்ட சீவகன் திடுக்குற்றான். "தாய் உயிரோடு இருக்கிறாள்'' என்று அச்சணந்தியாசிரியன் முன்பு கூறக் கேட்டிருந்ததை அப்பொழுது நினைத்து உள்ளம் உருகினான். பெற்ற தாயை ஒரு முறையேனும் பார்க்காது இன்பம் அனுபவித்திருந்த தன்னை வெறுத்துக் கொண்டான்.

"நண்பர்களே! நீங்கள் என்ன சொன்னீர்கள்? என்ன - என்ன....?'' என்று ஆவலுடன் கேட்டான். தோழர்கள் விசயை கூறியவற்றை யெல்லாம் முறையே சீவகனுக்குக் கூறினர். தோழர்கள் கூறிய வார்த்தைகள் தேவியே நேரில் நின்று கூறுவது போல் இருந்தன சீவகனுக்கு. கண்ணீர் கல கல வென்று முத்தைப்போல் உதிர்ந்தது. மெய்ம்மறந்தான்.

"என்னைப் பெற்ற தீவினையையுடைய தேவியார்க்கு உண்டாகாத துன்பங்கள் இனி இல்லை; அவ்வளவு துன்பங்களையும் அடைந்த தேவியார் இன்னும் என் பொருட்டு உயிரோடு இருக்கின்றாரா?'' என்று கூறிக் கொண்டே பொருமினான்.

"அரசிளங் குமர! நல்வினையாகிய தெய்வமே, நமக்குத் தேவியாரை அருளியது'' என்றார் தோழர்கள். உடனே சீவகன் உள்ளம் குளிர்ந்து, "எங்கே? அவர் இருக்கின்ற திசை எங்கே? எங்கே?'' என்று கூறித் தண்டகாரணியம் இருக்கும் திசைப் பக்கமாக கை குவித்துத் தொழுதான்.

உடனே, சீவகன் தோழருடன் தடமித்தன் இருக்குமிடம் சென்றான். தடமித்தன் அவர்களைக் கண்டு மகிழ்ந்து, சீவகனுடைய குலத்தை அறிய ஆவல் கொண்

டான். உடனே தோழனை நோக்கி, "குமாரர்களே! ஐயன் எக்குலத்தான்?" என்றான். உடனே தோழர் உவகையுடன், "அரசே ஐயன் குலம் குருகுலம்" என்றார்கள்.

"சீவகன் குரு குலத்தான் என்றால் யான் முன்பு கருதிய குலமே" என்று கூறிச் சீவகனை மார்புடன் தழுவிக்கொண்டான் தடமித்தன். சீவகன், தான் தாயைக் கண்டு, பின்னர் நாடுகொள்ளக் கருதியிருப்பதை அரசனுக்குக் கூறினான். அரசனும் மந்திரியருடன் ஆராய்ந்து சீவகனுக்கு வேண்டிய படை, பொருள் முதலியவற்றைக் கொடுத்து விடை தந்தான். உடனே சீவகன், கனகமாலையிடம் சென்று தன் காரியங்களை உணர்த்தினான். சீவகன், பிரிவிற்குக் கனகமாலை வருந்தினாள். சீவகன் அவளைத் தேற்றி விடைபெற்று விசயன் முதலிய மைத்துனர்களைக் கண்டு பேசிவிட்டுத் தோழரிடம் வந்தான். இருபதினாயிரம் குதிரை வீரரும் தடமித்தன் அனுப்பிய படை வீரரும், மங்கை நூற்றுவரும் தண்டகாரணியத்தை நோக்கிப் புறப்பட்டனர். சீவகனும் தோழரும் நந்தட்டனும் தத்தம் குதிரைகள் மீது ஏறி விரைந்து சென்றனர். அப்போது நன்னிமித்த மாகச் சங்கம், பறை முதலிய வாத்தியங்கள் முழங்கின.

## 20

# தாயும் மகனும்

தாயைக் காண வேண்டும் என்ற ஆசையால் சீவகன் உள்ளம் பரபரப்புற்றது. எப்போது தாயின் திருவுருவத்தைக் கண்டு வணங்குவோம் என்று அவன் மனம் ஏங்கியது. தண்டகாரணியத்தை விரைவாகச்

சேர்வதற்குக் குதிரையை அம்புவேகமாகச் செலுத்தினான். தோழர் நால்வரும் கந்தட்டனுடன் சீவகனைப் பின் தொடர்ந்து சென்றனர். வீரர் படையும் மகளிர் குழாமும் பின்னே சென்றன. அரசகுலத்தில் சீவகன் பிறந்தவன் என்பது வெளியாயினமையால், கந்தட்டனுக்கு அவனைப்பற்றிக் கவலை உண்டாயிற்று. தோழர் நால்வருக்கும் சில வார்த்தைகளைச் சொல்ல எண்ணினான். கந்தட்டனுக்குப் பின்னர் தோழர் நால்வரும் குதிரைகள் மீது சென்றுகொண்டிருந்தனர். கந்தட்டன் பதுமுகனைப் பார்த்துக் கூறலானான்:

"பதுமுகா! விலை மதிப்பதற்கரிய பெரிய மணி ஒன்று மாசடைந்து கிடந்தது. அதை நீயும் தோழரும் துடைத்து வெளியாக்கிவிட்டீர்கள். உங்கள் மாலை வாழ்க. ஆனால் முன்பு போலவே சீவகன் விஷயங்களை மறையக் காத்தல் வேண்டும். அவ்வாறு செய்தால் உலகத்தையே கைக்கொள்ளலாம்; தவறினால் செல்வம் நம்மைச் சேராது. வணங்குபவருடைய கையிலும், தலையிலும், கண்ணீரிலும், ஆபரணங்களிலும் பகைவர் படை பதுங்கி இருக்கும். ஆதலால் அக்குற்றங்களை ஆராய்ந்து, கூடா நட்பு உடையவரை அகற்றிவிடல் வேண்டும். யாவரையும் நம்புதல் கூடாது. சீவகன் மகளிரைக் கூட விரும்பினால், முதிய மங்கையரால் அம்மகளிர் ஆபரணங்களை நீக்கி, ஆராய்ந்து, நீராட்டுவித்து, புதிய ஆடைகளை உடுக்கச் செய்த பின்பு சீவகனிடம் அனுப்புக. சீவகன் அணியும் பூமாலையை, அன்னத்தின் கண்களிலும், சக்கரவாகப் பறவையின் முகத்திலும் பொருத்தி, நன்மை தீமையை ஆராய்க; மாலையில் குற்றம் இருக்குமானால், அன்னத்தின் கண்கள் சிவக்கும்; சக்கர

வாகத்தின் முகம் வாடும்; தண்ணீரையும், உணவையும் கருங்குரங்கிற்கு இட்டு ஆராய்க. சிறிய பாம்பு பெரும் யானையைக் கொன்று விடும்; ஆதலால் பகையைச் சிறிது என்று எண்ணாமல், காத்து நடக்க வேண்டும். பல்லியைப் போன்று விடாமல் சீவகனுடன் இருத்தல் வேண்டும். தாயைப் போன்று அவனுக்கு வேண்டியவற்றைச் செய்ய வேண்டும். முனிவரைப் போலச் சீலம் முதலியவற்றை இவன் தப்பாமல் காக்க வேண்டும். ஐம்பொறியையும் அடக்கி ஆமை போன்று இருக்க வேண்டும். பகைவரைப் போல் இருந்து இடித்துக் கூறித் தீமையை அகற்ற வேண்டும். மனைவியைப் போன்று இருந்து, சீவகன் விரும்பும் இனிய உணவுகளைக் கொடுக்க வேண்டும்."

இவ்வாறு நந்தட்டன் கூறியதும் பதுமுகன், மன மகிழ்ச்சியுடன் வணங்கி, "அடியேன் அவ்வாறே காவல் செய்து நடந்து கொள்வேன்" என்று கூறி உடம் பட்டான்.

சீவகனைப்பற்றிப் பேசிக் கொண்டும், வனக் காட்சி களைக் கண்டு மகிழ்ந்தும் விரைந்து சென்று தண்ட காரணியத்தில் புகுந்தனர். முதலில் சென்ற சீவகன், அவ்விடத்துச் சோலையில் குதிரையை விட்டு இறங்கி இளைப்பாறினன். தோழரும், நந்தட்டனுடன் சென்று அவ்விடத்தில் தங்கி இளைப்பாறினர். வீரர் படையும், மகளிர் குழாமும் வந்து தங்கின. மகளிரும் வீரரும், பூக்களைப் பறித்தும், சோலைக் காட்சிகளைக் கண்டும், விளையாடித் திரிந்தனர். மகளிர் கைபடுதலாலும், அவர்கள் கண்கள் நோக்குதலாலும் பூக்கள் மலர்ந்தன; மரங்கள் தளிர்த்தன. மகளிர் பறிப்பதற்கு ஏற்ப மரங் களும் செடி கொடிகளும் தாழ்ந்து கொடுத்தன.

தாபதப்பள்ளி அருகில் இருப்பதை அறிந்த சீவகன், தாயைப் பார்ப்பதற்கு ஆவல் கொண்டான். தன் உயிர்த் தோழனான பதுமுகனைக் கூப்பிட்டு, "நண்ப! அறிவில்லாதவரைத் தேவியிடத்து அனுப்பினால் காரியம் வெளியாகும்; ஆதலால் நீயே சென்று தேவியாரின் நிலையையும் சமயத்தையும் அறிந்து வா" என்று கூறினான். உடனே பதுமுகன் மகிழ்ச்சியுடன் விசயை இருக்குமிடம் சென்றான். பதுமுகன் சென்றதும், சீவகனுக்குத் தாயைக் காணவேண்டுமென்ற அன்பு மிகுதியாயிற்று. உடனே அன்பால் உடல் உருக, மறைந்து, மறைந்து பதுமுகன் பின்னர், அவன் அறியாமல் நடந்து சென்றான்.

"விடியற்காலம், கனவில் என் மகன் சீவகன் வருவதைக் கண்டேன்; இடக்கண்ணும் துடிக்கின்றது; பல்லியும் நன்னிமித்தமாக ஒலிக்கின்றது. ஆதலால், சீவகன் இன்று வருவானோ?" என்று விசயை தன் அருகில் அமர்ந்திருக்கும் தவமகளிருடன் சொல்லிக் கொண்டிருந்தாள். பதுமுகன் அச்சமயம் சென்று விசயையின் பாதங்களை வணங்கி நின்று, "தேவி! ஐயன் வந்தான்" என்று கூறினான். ஐயன் என்றதும் விசயையின் உள்ளம் தளிர்த்தது. உடல் சிலிர்த்தது; "ஆ! என் ஐயன் எங்கு வந்திருக்கிறான்?" என்று ஆவலுடன் கேட்டுக்கொண்டே எழுந்து நின்றாள். உடனே சீவகன் விரைந்து சென்று, "தாயே! அடியேன் நான்தான்" என்று கூறிக்கொண்டே கையைக் குவித்து வணங்கி விசயையின் பாதங்களில் வீழ்ந்தான். கண்களின் நீரால் விசயையின் பாதங்களைக் கழுவினான். மகனைக் கண்ட மகிழ்ச்சியால், விசயையின் கண்களிலிருந்து நீர் சீவகன்

மேனியை நனைத்தது. உடனே, "ஐயனே! வருக" என்று கூறிச் சீவகனை இரு கைகளாலும் அணைத்தெடுத்து மார்பு ஒடுங்கும்படியாகத் தழுவிக்கொண்டாள். தாயும் மகனும் மெய்ம்மறந்து உவகையோடு நின்றனர். அன்புக் கடல் இரண்டும் ஒன்றாகக் கலந்த தன்மைபோல் அவர்கள் உள்ளம் ஒன்றாகியது. 'உதிரம் உறவு அறியும்' என்பதைத் தோழர் கண்டு உள்ளம் பூரித்தனர்.

"ஐயனே! முற்பிறப்பில் நற்றவம் செய்யாத யான் தோள் வருத்தம் நீங்கினேன்; குமர! அரசனைப் போரில் விட்டு, உன்னைச் சுடுகாட்டில் போட்டு வந்த கொடியேனைப் பாதம் வருந்தப் பார்க்க வந்தாய்! உன் அன்பின் மிகுதியை என்ன என்று கூறுவேன்!" என்று கூறிக் கண்ணீர் சொரிந்தாள்.

"அரசன் இறக்கவும், நண்பர் வருந்தவும், தேவியார் வருத்தத்தே சுழலவும் யான் பிறந்தேன்; அல்லாமல், உயிருடன் இருந்து பகையை வெல்லாமலும் உயிரைப் போக்காமலும் இடையன் வெட்டிய ஒடி யெறிமரம்போல் உள்ள யான், தங்களுக்குப் பெருந் துன்பத்தைத் தந்தேன்; துன்பக் கடலில் இனி அழுந்த வேண்டாம்; அதை நீக்கிவிடுக" என்று சீவகன் ஆறுதல் கூறினான். அவன் வார்த்தைகளால் விசையையின் உள்ளம் குளிர்ந்தது.

"ஐயனே! உனக்குத் தாய் சுநந்தையே! யான் அல்லேன். உனக்குத் தந்தை, கந்துக்கடனே. அரசன் அல்லன்; எனக்கு உயிர்போன்ற சிறுவன் நந்தட்டனே! நீ அல்லை; ஆதலால், குமர! நீ இங்கே வா" என்று கூறிப் புன்னகையுடன், நந்தட்டனை அருகே அணைத்துக் கொண்டாள். அவனுக்கு இனிய வார்த்தைகளைக் கூறி, அவன் முடியையும், மாலையையும் திருத்தி மகிழ்வித்

தாள். மயில், தன் குஞ்சுகளை இரண்டு சிறகுகளாலும் தழுவியிருந்ததைப் போல், சீவகனையும் நந்தட்டனையும் இரு கைகளாலும் அணைத்து மகிழ்ந்திருந்தாள். பது முகன் முதலிய தோழர்க்கு இனிய வார்த்தைகளைக் கூறி மகிழ்வித்தாள். உடனிருந்த மகளிரைக் கொண்டு சீவகன் முதலிய எல்லாருக்கும் உணவை அளித்து மகிழ்வித்தாள்.

இவ்வாறு ஆறு நாட்கள் சென்றன. சீவகனும் தோழரும் விசயையுடன் தாபதப்பள்ளியில் இருந்தனர். ஒரு நாள் விசயை சீவகன் முதலிய அறுவரையும் அழைத்துத் தனியே இருத்திச் சில வார்த்தைகளைக் கூறினாள் :

"சீவக! சில வார்த்தைகளைச் சொல்கிறேன்; மனத்தில் அவற்றைப் பதிய வைத்துக்கொள்; குறுநில மன்னர் கன்னியரையும் வலிய அரசர்களுடைய கன்னியரையும் மணந்துகொள்ளுதல் மன்னர் முறைமை என்பர். ஆறில் ஒரு பங்கு அளவே மக்களிடம் திறைப் பொருள் பெறவேண்டும். பழம் பகையை மறத்தல் கூடாது. முள்ளைக் கொண்டு முள்ளை எடுப்பதுபோல், பகைவரைக் கொண்டு பகைவரை மோதச் செய்து வெற்றிகொள்ள வேண்டும். பகைவருடன் சேர்ந்து காரியம் செய்பவரைப் பிரித்துத் தம்பக்கம் சேர்த்துக் கொள்ளவேண்டும். ஒற்றர்களைக் கொண்டு ஒற்றரை ஆராயவேண்டும். மந்திரியரைக் கண்ணைப்போல் கருத வேண்டும். இவை வெற்றியை விரும்பும் அரசர்க்கு உபாயம். ஒருவன் பொருளைப் பெற்றால் வெற்றியைப் பெறலாம்; அழகைப் பெறலாம்; கல்வியைப் பெறலாம்; மதிப்பைப் பெறலாம்; பொருள், குறைந்தவரை உயரச்

செய்யும்; பொருளால் பெரும் படையை உண்டாக்க லாம்; படையால் பூமியைப் பெறலாம்; பூமியைப் பெற்றபின் பெரும் பொருள் பெறலாம்; அதனால் மோட்ச கதியைக்கூட அடையலாம்; ஆதலால், குமர! நாம், நாட்டை இழந்து பொருளும் இல்லாமல் இருக் கிறோம்; நம்மை இந்நிலையினின்றும் நீக்கி, மேல் நிலைக்கு உயர்த்தும் மந்திரியரும் இல்லை; நீ எண்ணிய காரியம் என்ன?" என்றாள்.

"அம்மா! போர்க்களத்தில், கட்டியங்காரன் பாம்பாக இருப்பான்; நந்தட்டன் கருடனாக இருப்பான்; ஆதலால் வருந்தவேண்டாம்" என்று சீவகன்

"நந்தட்டன், கருடனோ?" என்று கூறி நந்தட்ட னுடைய இரு தோள்களையும் பிடித்துக்கொண்டு, "சீவக, இவன் தோள்கள் உனக்குப் பூமியைத் தந்து காக்கும்; காட்டில் ஒரு காக்கை, ஒரு பகலில் பல கோட்டான்களைக் கொன்றது. சிங்கம் இடம் அறியாமல் நரிமேல் பாய்ந்து நரிகளாகிய வலையில் வீழ்ந்து இறந்தது. ஆதலால் காலமும் இடமும் அறிந்து எக்காரியத்தையும் செய்யுங்கள். பெண்களைப் போல் தாம் நினைத்ததே நேர்மை யென்று எண்ணிச் செய்யாதீர்கள்" என்று விசயை மொழிந்தாள்.

"தேவி! எம் வன்மையால் பகையை வென்று பூமியை இப்பொழுதே பெறுவோம்; தாங்கள் கட்டளை செய்வது தான் தாமதம்" என்றான் பதுமுகன். மற்றத் தோழரும் தம் வீரம் புலப்பட மொழிந்தனர். அதற்கு விசயை மகிழ்ந்து, "சீவகா! கார்காலம் தோன்றியவுடன் முல்லை மலரும். சூரியன் தோன்றியவுடன் தாமரை மலரும்.

அது போலவே உன் புகழ் தோன்றியவுடன் உன் மாமன் கோவிந்தன் உள்ளம் மலரும். ஆதலால் அவனிடம் சென்று, அவன் கட்டளைப்படிப் பகையை அழிப்பதற்கு முயற்சி செய்" என்றாள்.

"அம்மா! யானும் அதுவே எண்ணினேன். இனி, நாளைக்கு இராசமாபுரம் சென்று கந்துக்கடன் முதலியவரைப் பார்த்து ஒரு நாள் தங்கிவிட்டு மறுநாள் மாமனிடம் வருகிறேன். நீங்கள் இப்பொழுதே என் மாமனிடம் செல்லுங்கள்" என்று சீவகன் சொன்னான். உடனே விசயை சீவகனைத் தழுவி விடை பெற்றுத் தன்னுடன் இருந்த தவமகளிருடன் கோவிந்தராசன் [விசயையின் சகோதரன்] இருக்கும் விதைய நாட்டை நோக்கிச் சென்றாள். சீவகன் விசயையுடன் சென்று சிறிது தூரம் வழியனுப்பியபின் தோழர்களிடம் வந்து சேர்ந்தான்.

சீவகனும் தோழரும் வீரர் படையுடன், ஏமாங்கத நாட்டிற்குப் புறப்பட்டனர். ஆறுகள், மலைகள், காடுகள் முதலியவற்றைக் கடந்து ஏமாங்கத நாட்டை அடைந்தனர். அந்நாட்டின் புறநகர்ச் சோலையில் யாவரும் தங்கி, பாடி வீடு அமைத்துக் கொண்டனர். உடன் வந்த மகளிர் உணவு சமைத்தனர். யாவரும் உணவு உண்டு மகிழ்ந்து உலாவினர். மகளிர் பாடிய கீதத்தைக் கேட்டு மகிழ்ந்த வண்ணம் அன்றிரவு அங்கேயே சீவகன் உறங்கினான். நந்தட்டன் முதலியவர் தத்தம் இடத்தில் உறங்கினர்.

மறுநாள், காலையில் சீவகன் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு இராசமாபுரத்திற்குத் தனியே போய் வரப் புறப்பட்டான். தோழரிடம் விடை பெற்று நீங்கி, இராசமாபுரத்தில் புகுந்து நகர்க் காட்சிகளைப் பார்த்த

வண்ணம், வீதி வழியே நடந்து சென்றான். அவ் வீதியில் சாகரதத்தன் என்னும் வணிகருடைய மாளி கையில் அவன் பெண் விமலை பந்தாடிக்கொண் டிருந் தாள். அப்பந்து தவறி, வீதியில் போகும் சீவகனுக்கு முன்பு வீழ்ந்தது. பந்தை எடுப்பதற்கு ஓடிய விமலை, சீவகனைக் கண்டு அவன்மீது காதல் கொண்டாள். விமலையைக் கண்ட சீவகனும் காதல் கொண்டான். விமலை மாளிகையின் ஒரு புறத்தில் போய் நின்று சீவகனைப் பார்த்து வருந்தி நின்றாள். சீவகன் விமலை யிடத்துள்ள காதலால் அவளை எண்ணி, அம்மாளி கையில் பண்டங்களை விற்றுக்கொண் டிருந்த சாகரதத்த னுக்கு அருகில் போய் உட்கார்ந்தான். சீவகன் உட் கார்ந்த சிறிது நேரத்திற்கெல்லாம், கடையில் இருந்த பண்டங்களெல்லாவற்றையும் சாகரதத்தன் விற்று விட் டான். எதிர்பாராத அளவு பொற்காசுகள் பெருகின. அதைக் கண்ட சாகரதத்தன் பெரும் மகிழ்ச்சியோடு அருகில் இருந்த சீவகனைத் தழுவிக் கூறலானான்:

"வீரனே! செல்வம் பெருக வந்த செல்வா! என் மனைவி கமலைக்குப் பிறந்தவள் விமலை; அவள் பிறந்த வுடன் சாதகத்தைச் சோதிடர் கணித்தனர்; 'என் கடையில் பண்டங்கள் விரைவில் விலையாகாமைக்குக் காரணம் என்ன?' என்று கேட்டேன். அப்போது ஒரு சோதிடன், 'உன் மகளுக்குக் கணவன் உன் கடைக்கு வருவான். அப்போதே பண்டங்கள் விற்கப்பட்டுப் பொருள் சேரும். அவனே உன் மகளுக்குக் கணவன்' என்றான். அவன் கூறியபடி இன்று பண்டம் விற்றுப் பெரும் பொருள் சேர்ந்தது; ஆதலால் விமலையை நீயே மணம் செய்து கொள்ள வேண்டும்" என்றான். சீவகன்

உடம்பாட்டைத் தெரிவித்தாள். சாகாதத்தன் சீவகனை உள்ளே அழைத்துச் சென்று உபசரித்தான். அந் நிகழ்ச்சியைக் கண்ட விமலை உடல் பூரித்தாள். அன்றே விமலைக்கும் சீவகனுக்கும் சிறப்பாக மணம் நிகழ்ந்தது. சீவகன் விமலையுடன் மகிழ்ந்து அன்று இராப் பொழுதைப் போக்கினான்.

தான் எண்ணிய காரியங்களை முடிப்பதற்கு எண்ணிய சீவகன் மறுநாள் விமலையிடம், "சோலையில் என் தோழர் இருக்கின்றனர். அம்பு போல் சென்று தோழரைக் கண்டு வருகிறேன்" என்றான். சீவகன் பிரிவிற்குச் சிறிது வருந்திப் பின்னர் விடை கொடுத்தாள். விமலையைத் தேற்றி அவ்விடம் விட்டுத் தோழர் இருக்குமிடத்தைச் சீவகன் அடைந்தான்.

## 21

# காம திலகன்

இராசமாபுரத்தில் புறநகர்ச் சோலையில் இருந்த மகளிரும், தோழரும் சீவகனைக் காணாமல் வருந்தியிருந்தனர். அச்சமயம் சீவகன் அங்கே வந்து சேர்ந்தான். சீவகனுடைய கலியாணக் கோலத்தைக் கண்டு தோழர்கள் வியப்பும் மகிழ்ச்சியும் கொண்டனர்.

"ஐயனே, நீ மணம் செய்துகொண்ட மங்கையின் பெயர் என்ன?" என்றனர். "அமுதினும் இனியவள்; அரம்பை போன்றவள்; அவள் பெயர் விமலை" என்றான் சீவகன். அதைக் கேட்டவுடன், "ஐயன் மன்மதனே!" என்று கூறிப் புகழ்ந்தனர் தோழர். அவர்கள் மொழியைக் கேட்ட புத்திசேனன் மறுத்துக் கூறினான்:

"நண்பர்களே, பெற்றோர்கள் தமது பெண்ணை ஒருவனுக்குத் தாமாகவே மணம் செய்விப்பர். கணவனிடத்துக் குறை இருந்தாலும் மனைவி அதைக் கருதாமல் மனம் வருந்தியவளாய், அவனுக்கு அடங்கியே வாழ்வாள். அதற்காக நீங்கள் வியக்க வேண்டாம். பருவம் முதிர்ந்த பெண்ணைப் பாவத்திற்கும் பழிக்கும் அஞ்சி ஒருவனுக்கு மணம் செய்விப்பர். அது போலவே தான், ஐயன் மணம் புரிந்ததும். ஆதலால், ஐயனைப் புகழவேண்டாம்" என்று சொன்னான். சீவகன் அவ்வார்த்தைகளைக் கேட்டுப் புன்னகை செய்தான்.

"ஐயனே, நீ போகின்ற ஊர்களிலெல்லாம் மகளிரைக் கலியாணம் செய்துகொள்கிறாய். ஆனால் நீ, மணம் செய்துகொண்ட இந்நகரத்திலேயே ஓர் இள மங்கை இருக்கிறாள். அழகு நிறைந்தவள். நீ மணம் புரிந்த மகளிரைக் காட்டிலும் சிறந்தவள். ஆனால், ஆடவர் தன் மாளிகைக்கு அருகே சென்றாலும், அவர் பெயரைக் கேட்டாலும் 'உணவு உண்ணேன்; உயிரை விடுவேன்' என்று விரதம் பூண்டு வாழ்கிறாள். மன்மதன் நேரில் சென்றாலும் கண்ணெடுத்துப் பாராள். அவளை நீ மயக்கினால், உனக்குக் காம திலகன் என்று பெயர் கொடுப்போம்" என்று புத்திசேனன் கூறினான்.

"புத்திசேனா, நீ கூறிய இளமங்கையை யான் மயக்குகிறேன். 'அவ்வாறு செய்யேனாயின், சிறிதும் காதலில்லாத கன்னிப் பெண்ணைக் கூடியவன் ஆவேன்; ஆதலால், அந்த மங்கையைக் காமன் கோயிலில் நாளைக்குக் கூடுவேன். காமன் வடிவத்திற்குப் பின், நீ மறைந்து இரு" என்று கூறிச் சீவகன் புறப்பட்டான்.

'வாசனைப்பொடி காரணமாகத் தன்னோடும், குணமாலையோடும் பகைமை கொண்டு விரதம் பூண்ட சுரமஞ்சரியே, புத்திசேனனால் கூறப்பட்டவள்' என்று உணர்ந்தான். சுரமஞ்சரியின் அழகைப்பற்றி முன்பே கூறக் கேட்ட சீவகன் அவளிடம் விருப்பம் கொண்டான். அவள் வடிவத்தைத் தன் மனத்தில் ஒருவாறு கற்பனை செய்து காதல் கொண்டான். 'சுரமஞ்சரியை அடைவதற்கு ஒரு முதிய அந்தணனாய்ச் செல்வேன்' என்று கூறி மாறுவேஷம் கொண்டான். பாம்பின் தோல் போன்ற மேனி. வில்லைப்போல் வளைந்த கூன் உடம்பு. உத்தரீயமும் பூணூலும் பிணங்கியாடும் மார்பு. நரை முடியதும் புள்ளிகள் பொருந்தியதுமான உடம்பின் சாயல். கோணல் பார்வை. கண்டவர் அஞ்சத்தக்க உடல் நடுக்கம். ஒரு கையில் கிழிந்த குடை. மற்றொரு கையில் ஊன்றுகோல்.— இவ்வாறு மூப்பு வடிவத்தோடு புறப்பட்டான். மூப்பு வடிவத்தைக் கூறும் லக்ஷண நூலுக்குச் சீவகன் உதாரணமாக விளங்கினான். தன் மூப்பு வடிவத்தைக் கண்டு தானே மகிழ்ந்தான். ஊன்று கோலை ஊன்றித் தள்ளாத கிழவனாய் அசைந்து நடந்து சுரமஞ்சரியின் மாளிகைக்குச் சென்றான். மாளிகையின் வெளிப்புறத்தில் வாயில் காவலர் காத்திருந்தனர். அவர்களுக்குமுன் நடுங்கிக் கொண்டே சென்று நின்றான் அந்தணன்.

"நீர், யார்? எங்கு வந்தீர்?" என்றனர் வாயில் காவலர். ஊன்றுகோலே பற்றுக்கோடாக, உடல் வளைந்து, நிலை தளர்ந்து இளைத்து நின்ற அந்தணன், தலையை நடுக்கிக்கொண்டே சொன்னான்: "முன்பு, இளமைப் பருவத்தில் பால் கலந்த உணவையே

உண்பேன்; இப்பருவத்தில் மகளிர் கொடுப்பவற்றை எல்லாம் அருந்துவேன்."

அந்தணன் இவ்வாறு சொல்லியதைக் கேட்டு வாயில் காவலர் நகைத்தனர். 'நாம் வினவியதற்கு மறுமொழிகூறுமல், தம் பசியையே இவர் சொல்லுகிறார். ஆதலால் இவர், மிக்க பசி உடையவர் போல் தோன்றுகிறார். நாம் தடை செய்தல் பாவம்' என்று அவர்கள் மனம் இரங்கினர். உடனே கைகுவித்து வணங்கி, "ஐயா, தாங்கள் உள்ளே செல்லுங்கள். உணவு கிடைக்கும்" என்று கூறி வழிவிட்டனர். அந்தணன் தள்ளாடி நடந்து சென்று மகளிர் காவல் செய்யும் வாயிலை அடைந்தான். அந்தணனைக் கண்ட மகளிர் கோபங்கொண்டு ஓடிவந்து, "ஐயா, இவ்விடத்தில் ஆடவர் தலைகூடத் தெரியக் கூடாது. விரைவில் ஓடிவிடுங்கள். இல்லையேல் உம் உயிருக்குத் துன்பம் உண்டாகும்" என்று கூறினர். அதற்கு மறுமொழி சொல்லாமல், அவர்கள் அருகில் சென்று நின்றான் அந்தணன். அவன் செய்கையைக் கண்ட மகளிர் விலகிநின்று மிகக் கோபம் அடைந்தனர். சில மங்கையர், கத்திகளைக் காட்டி அச்சமுறுத்தினர். சில மகளிர், வில்லை வளைத்து அம்பைத் தொடுத்துப் பயமுறுத்தினர். வேலைக்காட்டி, குத்திவிடுவோம் என்று கூறினர் சில மகளிர். அம்மகளிருக்கு நடுவில் அந்தணன் நடுங்கி நின்றான். அந்தணனின் முதுமைத் தன்மையைக் கண்ட சில மகளிர் மனமிரங்கினர். "தோழிகளே, வேண்டாம்; ஒன்றும் செய்யாதீர்கள். முதிய அந்தணனை, வருத்துமாறு பேசாதீர்கள்; பாவம். நாம் தொட்டாலும் இவன் இறந்துவிடுவான். ஆதலால் அருகில் கூடப் போகாதீர். சாமஞ்சரிக்கு இவன்

தன்மையைச் சொல்லி அவள் சொல்லியபடி செய்வோம்” என்றனர். உடனே மங்கையர் சுரமஞ்சரியிடம் சென்று, “தேவி, ஓர் அந்தணர், முதிய மூப்புடையவர், நம் மாளிகை வாயிலில் வந்துள்ளார். தொட்டாலும் இறந்து விடுவார்போல் இருக்கிறார். இனி நாங்கள் செய்யும் காரியத்தைச் சொல்லவேண்டும்'' என்றனர்.

“முதிய மூப்புடையவனாயின் யானே வந்து பார்க்கிறேன். நீங்கள் முன்னே செல்லுங்கள்'' என்று கூறிச் சுரமஞ்சரியும் அவர்கள் பின்னே சென்றாள். ஆடவரிடத்துக் கடுங்கோபம் அடைந்துள்ள சுரமஞ்சரி, அந்த அந்தணரின் முதிய மூப்பைக் கண்டதும் மனம் இளகினாள்.

“ஐயா, நீங்கள் இங்கு வந்த காரியம் யாது?” என்று கேட்டாள். சுரமஞ்சரியின் அழகில் மயங்கிய அந்தணன் அவளை மயக்க உறுதிகொண்டான். 'சிந்தையில் நின்று என்னை வருத்துகின்ற அழகிய தன்மையையுடைய குமாரியாகிய உன்னை அடைய வந்தேன்' என்னும் பொருள் படும்படியாக, “இளமங்கையே, சிந்தை கலிகின்ற திருநீர்க் குமரியாட வந்தேன்'' என்றான் அந்தணன்.

'சித்தத்தில் கலிகின்ற தீர்த்த நீராகிய குமரி ஆற்றில் மூழ்கவந்தேன்' என்று அவன் சொன்னானென்று சுரமஞ்சரி கருதினாள். பின்னும் புன்முறுவலுடன், “ஐயா, குமரியாற்றில் ஆடுவதால் பயன் யாது?'' என்று கேட்டாள்.

'உன்னைச்சேர்ந்தால் மூப்பு நீங்கிவிடும்' என்னும் பொருள் படும்படி, “வரும் காலத்தில் வராமல் வந்து வருத்துகின்ற இம் மூப்பு நீங்கும்” என்றான். சுரமஞ்சரி அதைக்கேட்டுச் சிரித்தாள்; பின்னர், “ஐயா, குமரி

அடி இளமை பெறுபவர் உம்மை ஒழியப் பிறர் யாரேனும் உளரா? இருந்தால் சொல்லும்'' என்று சிரித்துக் கொண்டே கேட்டாள்.

'நீ கொண்டுள்ள விரதத்தைக் கெடுத்துக் கூடும் வழி, இம்மூப்புவடிவால் என்பதை அறிந்து உன்னைக் கூடுபவர் என்னை ஒழிய வேறு எவரும் இலர்' என்னும் பொருள் படும்படி, "துறை அறிந்து சேர்ந்து ஆடுகின்றவர் என்னை ஒழிய வேறு இல்லை'' என்றான்.

"உலகத்தார் அறியும் துறை அல்லாமல், வேறொரு துறையை நீர் அறிவீரோ?'' என்று கூறிச் சிரித்தாள் சுரமஞ்சரி.

அதற்கு, "ஐயம் இலலை'' எனறான அநதணன.

"பட்டுப்போன மரம், பெரும் மழையால் தளிர்க்கும் என்கின்ற இவர், பெரும் பித்தர்; மிகவும் பசி உடையவர்; ஆதலால், இவர் பசியைத் தீர்ப்போம்'' என்று கருதி அந்தணனைத் தன் மாடத்திற்கு அழைத்துச் சென்றாள். தோழியரை, இனிய உணவு ஆக்கிக் கொணரச் செய்தாள். உடனிருந்த மகளிர் அந்தணனுக்கு வேண்டிய பணி விடைகளைச் செய்தனர். அந்தணனை நீராடச் செய்து, புதிய ஆடையை அணிவித்து, இனிய உணவை அளித்து உபசரித்தனர். உணவுண்டபின், வெற்றிலை தின்று, சேடியர் நடுவே வீற்றிருந்தான் அந்தணன். வேதியன் களைப்பு நீங்கினான் என்று அறிந்த சுரமஞ்சரி, "ஐயா, நீர் வல்லது யாது?'' என்றாள். 'மறைந்த வடிவம் கொள்ளுதலில் யான் வல்லவன்' என்னும் பொருள் படும்படி, "யான் மறை வல்லேன்'' என்றான். 'வேதத்தில் வல்லவன்' என்று அவன் கூறினுனென்று அவள் எண்ணினாள். மேலும், "வேதம்

அனந்த சாகை உடையது; நீர், கற்ற எல்லை எவ்வளவு?'' என்றாள் சுரமஞ்சரி. 'யான் நினைத்த காரியத்தைப் பெறும் அளவும்' என்னும் பொருள் படும்படி, "பொருள் எய்தி முடியும் வரையில்'' என்றான். 'வேதம், தத்துவத்தை உணர்த்தி முடியும் அளவும்' என்று அவன் சொன்னதாக அவள் கருதினாள். "ஐயா, இக்கலைகளை எல்லாம் நீர் கற்ற காலத்தைச் சொல்லும்'' என்று மீண்டும் கேட்டாள். சுரமஞ்சரியின் கேள்வி மேன் மேலும் பெருகுதலை எண்ணி, 'அஃது எனக்குக் கருத்து அன்று' என்னும் பொருள் படும்படி, "சிந்தையிலன்'' என்றான். 'நினைத்திருந்திலேன்' என்று அவன் சொன்னதாகக் கருதினாள். "இந்த அந்தணனைப் போன்றவர் இவ்வுலகில் இல்லை'' என்று புகழ்ந்தாள். பின்னர், அந்தணன் மேனியைக் கூர்ந்து பார்த்தாள். 'இனி, இவள், நம்மை வெளியே போகச் சொல்லுவாள்' என்று அந்தணன் எண்ணினான். உடனே தூங்குபவன் போல் நடித்துக் கண்களை மூடித் தலையை ஒரு பக்கமாகச் சிறிது சாய்த்தான். 'அந்தணன் உறங்குகிறான்' என்று சுரமஞ்சரி பரிகசித்தாள். 'உன்மீது காதல் கொண்ட யான், வாடைக் காற்றால் வருந்துகிறேன்; அதனால் வருந்தும் தன்மையை அடைந்தேன்' என்னும் பொருள்படும்படி, "காலும் மிகநோம்; கண்ணும் துயில்குற்றேன்?'' என்றான். 'வழி நடந்த களைப்பால் கால்கள் வலிக்கின்றன; கண்களும் உறங்கும்' என்று அவன் கூறியதாக எண்ணி மனம் இரங்கினாள். "ஐயா, இந்தக் கட்டிலில் உள்ள பூம் படுக்கையில் படுத்து உறங்கும்'' என்றுகூறித் தன் கட்டிலைக் காட்டினாள். அந்தணன் மெள்ளச் சென்று படுக்கையில் படுத்து உறங்குபவன்

போல் கூடித்தான். அப்போது சூரியனும் அஸ்தமன கிரியை அடைந்தான். உடனே வான வீதியில் நிலவை அள்ளித் தெளித்துப் பூரண சந்திரன் தோன்றினன்.

நிலவின் ஒளியால் வெள்ளி மாடம் போல் விளங்கியது அம்மாளிகை. வாசனைப் புகை மாளிகை முழுவதும் நிறைந்து கமழ்ந்தது. மகளிர், பால் அன்னத்தை உண்டு, ஆடையாபரணங்களால் அலங்கரித்துக்கொண்டு, உவகையுடன் வீணை வாசித்தனர்; கட்டிலில் பூம்படுக்கையில் படுத்திருந்த அந்தணன், தான் நினைந்த காரியத்தை முடிக்க எண்ணி, மெள்ள மதுரகீதம் ஒன்றை இனிமையுண்டாகப் பாடினன். அருகில் வீணை வாசித்து இருந்த மகளிர், மெய்ம்மறந்து அந்தணன் பாடிய பாட்டைக் கேட்டனர். மாளிகையில் அங்கங்கே பொழுது போக்கியிருந்த மகளிர், அந்தணன் பாட்டிற்கு மனம் உருகி, அவன் அருகில் வந்து அமர்ந்தனர். மகளிர் தன் வசப்பட்டதை அறிந்த அந்தணன், மேலும் மிக இனிமையுண்டாகுமாறு சாமகீதத்தைப் பாடினன். மகளிர் அறிவிழந்து, அந்தணன் பாட்டில் மனம் ஒன்றி இருந்தனர். தனியே அமர்ந்திருந்த சுரமஞ்சரி, அந்தணன் பாட்டாகிய வலையில் அகப்பட்டாள். "காந்தருவதத்தையை இசைப்போரில் வென்ற சீவகசாமியின் பாட்டைப்போல் இருக்கிறது" என்று சுரமஞ்சரியிடம் தோழியர் கூறினர். பருவமங்கையாகிய சுரமஞ்சரிக்கு அந்தணன் 'சாமகீதத்தால், சீவகனிடத்து வேட்கை பிறந்தது. வேட்கையால் மேனி பொரும, அணிகள் ஒலிக்க, அந்தணனிடம் விரைந்து ஓடிவந்தாள். சுரமஞ்சரியைக் கண்டதும் அந்தணன் பாட்டை நிறுத்தினன்.

"நங்காய், உடல் குலுங்க ஓடிவந்து என்ன செய்வது? யான் மிகவும் மூப்புடையவன்" என்று கூறி நகைத்தான். சுரமஞ்சரி அதைக்கேட்டு வெட்கம் அடைந்தாள். சட்டென்று திரும்பி, தோழியர்களுக்குப் பின்னே பூங்கொம்புபோல் சாய்ந்து நின்றாள்.

"பெண்களே, இங்கு, என்னை அல்லாமல், ஓர் இளைஞனை நீங்கள் கண்டால் என்ன செய்வீர்கள்?" என்றான் அந்தணன்.

"ஐயா, நீர் கூறிய அவர் பெயரும் இவ்விடத்துக் கெடுக" என்று ஒரு தோழி கூறினாள்.

"நீ இவ்வாறு கூறுவதற்குக் காரணம் என்ன? இவளைக் கலியாணம் செய்துகொள்ளப் பேசினரா? அல்லது, இவள் வருந்தும்படி அவர்கள் ஏதேனும் செய்ததுண்டா?" என்றான்.

"சீவகன் எமது மங்கையின் வாசனைப் பொடியைக் குறை கூறினான். அதனால் ஆடவர் எல்லாரையும் இவள் கோபிக்கின்றாள்" என்றாள் ஒரு தோழி.

"ஆம், இவளுக்குப் பகைவனாகிய சீவகன் இறந்திருப்பான்" என்றான் அவன்.

"இல்லை. சீவகன் நூறு ஆண்டுகளும் வாழ்க! ஐயன் பிழைத்தான்; அதை யாங்கள் அறிந்துவிட்டோம்" என்றனர் தோழியர்.

"என்ன? ஐயன் பிழைத்தது எப்படி? நீங்கள் அறிந்தது எவ்வாறு?" என்றான்.

"ஐயனுக்கு வந்த துன்பத்தைக் கேட்டு எம் தலைவி வருந்தினாள். பேசவல்ல ஒரு கிளியை அனுப்பி, காந்தருவதத்தையைக் கண்டு வரும்படி அனுப்பினோம். அவள்

மகிழ்ச்சியோடு இருப்பதைக் கிளி வந்து சொல்லியது. அதனால் வருத்தம் நீங்கினோம்'' என்றனர்.

அதைக் கேட்டு அந்தணன் புன்னகை செய்தான். மகளிர் அவனைச் சூழ்ந்து உட்கார்ந்தனர். "ஐயா, நீர் நன்றாகப் பாடுகிறீர். எம் தலைவி, ஆடவரைக் காணேன் என்ற விரதத்தையும் விட்டு உம்மிடம் அன்பாயிருக்கிறாள். எமக்காக ஓர் பாட்டுப் பாடவேண்டும்; பாட்டைக் கேளாமல், உம்மை விடோம்'' என்றனர். 'சுரமஞ்சரி, தன்னுடைய அழகு முதலியவற்றைப் பந்தயமாக எனக்குத் தந்தால் பாடுவேன்' என்னும் பொருள்படும் படி, "பாவை பொற்பே(ய்) பற்றி எமக்கு நல்கின் பாடுவேன்'' என்றான். 'பொன்னாயிருப்பதொரு பேயைப் பிடித்துத் தந்தால் பாடுவேன்' என்று அவன் சொன்னதாக மகளிர் கருதினர். "பேயைத் தேடிக் காண்பவர் யார்? அன்றியும், பொற்பேய் என்று இவர் கூறுவது உலகில் இல்லாத ஒன்று. ஆதலால், இதற்கு உடம்படலாம்'' என்று மகளிர் தமக்குள் பேசிக் கொண்டனர்.

அந்தணன் சூழ்ச்சியை அறியாத சுரமஞ்சரி, 'உலகில் இல்லாததை, ஒருவனால் காட்ட முடியாது; ஆதலால் இதற்கு உடம்படலாம்' என்று எண்ணி, "அதற்கு ஒப்புக் கொள்கிறேன்'' என்றாள்.

"காமன் பாடிய கீதத்தை உனக்கு இனிப் பாடுவேன்'' என்று கூறிச் சுரமஞ்சரியை நோக்கிய வண்ணம் பாடினான். அந்தணன் பாடிய பாடலைக் கேட்டுச் சோர்ந்து மயங்கிய மயிலைப்போன்றனர் மகளிர். சீவகனை எண்ணிச் சுரமஞ்சரி மனம் உருகினாள். அந்தணனைப் புகழ்ந்து, "நாளைக்குக் காமன் கோயில் சென்று வழி

பட்டு, இப்பாட்டையுடைய சிவகசாமியைத் தரவேண்டு மென்று வரம் கொள்வேன்" என்று மகளிரிடம் கூறிக் கன்னிமாடம் சென்றாள். மகளிர் தத்தம் இடங் களுக்குச் சென்று உறங்கினர். அந்தணன் சுரமஞ்சரியின் நினைவோடு அமர்ந்திருந்தான்.

## 22

# காமனை வரம் வேண்டல்

சூரியன் உதயமானான். காமனை வரம் கேட்க எண்ணிய சுரமஞ்சரி கோயிலுக்குப் புறப்பட்டாள். அலங்காரம் செய்து திரை போடப்பட்ட வண்டியில் அவள் ஏறிக்கொண்டாள். அவ்வண்டியைத் தோழி ஓட்டிச் சென்றாள். அவளுடன், அந்தணனும் கோயிலுக்குச் சென்றான். நூற்றுக் கணக்கான மகளிர் வண்டியைச் சுற்றிலும் காவல் செய்து சென்றனர். வழியில் ஆடவர் இயங்காதவாறு மகளிர் விலக்கிச் சென்றனர். வண்டி, காமன் கோயிலை அடைந்தது. கோயிலுக்கு அருகில் உள்ள காவல் செய்யப்பட்ட மாடத்தில் சுரமஞ்சரி முதலியவர் தங்கி இளைப்பாறினர். தான் வரம்கேட்பதை அந்தணன் அறியக்கூடாது என்று எண்ணினாள். உடனே அந்த மாடத்தில் உள்ள ஓர் அறையில் அந்தணனை இருக்கச் செய்தாள். மாடத்தைச் சுற்றிலும் காவலாகப் பல மகளிரை நிறுத்தினாள். பின்னர், சில தோழியருடன் காமன் கோயிலுக்குச் சென்று வலம் வந்து காமன் வடிவத்தைக் கண்டு வணங் கினாள். மலர்களையும் தீபதூபங்களையும் ஏந்தி நின்று தோழியர் வணங்கினர். பொன்னால் செய்த காமன்

வடிவத்தைக் கண்டு சுரமஞ்சரி உள்ளம் பூரித்தாள். இடது முழந்தாளைப் பூமியில் ஊன்றி, மாலையும் கூந்தலும் வலத்தோளில் வீழ்ந்து புரள, வலத்தே கழுத்தைச் சாய்த்து, பூமியில் தலையைப் பொருத்திப் பணிந்தாள். கைகளைக் குவித்துக் கண்ணீர் பெருகக் காமனை வணங்கி நின்றாள்; "தாமரைக் கண்ணா, பூமலிமார்பா, யான் ஒரு வரம் வேண்டுகின்றேன். எனக்குச் சீவகசாமியைத் தர வேண்டும். தந்தால் உனக்கு மகரக்கொடி தருவேன். மலரம்புகள் அளிப்பேன்; கரும்பு வில் கொடுப்பேன். தேர் முதலியவற்றுடன் ஊர்கள் பல தருவேன்; சீவக சாமியை எனக்குத் தந்து அருள் புரிய வேண்டும்" என்று வேண்டிக் கொண்டு நின்றாள்.

அப்போது உடனே காமன் வடிவத்திலிருந்து சில வார்த்தைகள் கேட்டன. "சுரமஞ்சரி, நீ உன் காதலனைப் பெற்றாய். வருந்தாதே - இடை வருந்தும்படி இங்கு நில்லாது போ" என்று அசரீரிபோல் கேட்டன. காமன் வடிவத்திற்குப்பின் மறைந்திருந்த புத்திசேனன் இவ்வாறு கூறினான் என்று சுரமஞ்சரி அறியாள். அவ்வார்த்தைகளைக் கேட்டதும் சுரமஞ்சரிக்கு மெய் சிலிர்த்தது; அளவில்லாத உவகை எய்தினாள். உடனிருந்த மகளிர் அதிசயித்தனர். 'தனக்கு மனம் இறங்கிக் காமதேவனே வாய் திறந்து கூறினான்' என்று சுரமஞ்சரி உவகை அடைந்தாள். காமனை மீண்டும் மகிழ்வுடன் வணங்கி வலம் வந்தாள். 'சீவகனை அடைவோம்' என்ற உவகையுடன் கோயிலை விட்டுப் புறப்பட்டாள். அந்தணன் தங்கியிருக்கும் மாடத்தை அடைந்து அவனைப் பார்த்தற்குத் தனியே அறைக்குள் சென்றாள். உள்ளே சென்றதும் திடுக்கிட்டு அவன்

நின்றாள். முதிய அந்தணன் வடிவத்தைக் காணவில்லை. அழகில் மிக்க அரசிளங்குமரனாகிய சீவகன் உருவத்தையே கண்டாள்; காதல் மிகுதியால் உடல் வியர்த்துச் சோர்ந்தாள். மூப்புருவத்தை நீக்கிய சீவகன் புன்முறுவலுடன் சுரமஞ்சரியின் அருகில் சென்றான். மனம் தளுக்குற்றுக் கடைக்கண்ணால் நோக்கி மேனி வளைந்து நின்றாள். அவள் கண்கள் நாணத்தால் சிவந்தன. சீவகனிடம் காதல்மிக்கு உள்ளம் உருகி நின்றாள்.

சுரமஞ்சரியின் நிலையைக் கண்டு சீவகன் புன்முறுவலுடன் பேசலானான்: "நங்காய், உன்னை அடையவே நான் இங்கு வந்தேன். உன் பாதங்களைப் புகழ்கிறேன். உன்னை அடையேனாயின் என் உயிர் நீங்கும். அருள் செய்வாய்" என்றான். நாணத்தால் மறுமொழி கூறாதிருந்தாள் அவள். சீவகன் அன்புடன் இரு கைகளாலும் அவளைத் தழுவி மகிழ்ந்தான். இனிய தமிழ் கூறிய இயற்கை இன்பத்தை இருவரும் நுகர்ந்தனர். தன்னுடைய விரதம் பயனெய்தியதை எண்ணிச் சுரமஞ்சரி மகிழ்ந்தாள்.

"சுரமஞ்சரி, நாளைக்கு உன்னை யான் மணம் புரிந்து கொள்கிறேன். நீ வருந்தாதே. அவ்வாறு செய்யேனாயின் யான் கட்டியங்காரன் போல் ஆவேன். உன் மாளிகைக்குச் செல்" என்று சீவகன் கூறினான். 'ஐயன் சொல் தவறான்' என்று ஆறுதல் கொண்டு சீவகனை வணங்கிப் புறப்பட்டாள். தோழியர் சீவகன் சூழ்ச்சியை எண்ணி வியந்து சுரமஞ்சரியுடன் மாளிகைக்குச் சென்றனர்.

சீவகன் மகிழ்ச்சியோடு கோயிலில் மறைந்திருந்த புத்திசேனனிடம் சென்றான். நிகழ்ந்தவற்றை இரு

வரும் ஒருவருக்கொருவர் கூறிச் சிரித்தனர். சீவகன் திறமையைப் புத்திசேனன் புகழ்ந்தான். பின்னர், இருவரும் தோழரிடம் சென்று நிகழ்ந்தவற்றைக் கூறினர். இருவர் திறமையையும் கேட்டுத் தோழர் மகிழ்ந்து புகழ்ந்தனர். "ஐயன் காமதிலகன் என்பதில் ஐயமில்லை" என்று கூறி எல்லோரும் ஆர்த்தனர். காலைக்கு முறைப்படி மணம் புரிந்து கொள்வதாகச் சுரமஞ்சரியிடம் கூறி வந்ததைத் தோழரிடம் சீவகன் சொன்னான்.

தோழர் நால்வரும் மேல் செய்ய வேண்டியவற்றை ஆலோசித்துச் சுரமஞ்சரியின் தந்தை குபேரதத்தனிடம் சென்றனர். குபேரதத்தன், அவர்களை உபசரித்து, "வந்த காரியம், யாது?" என்றான். "எம் தோழன், சீவகசாமி, சுரமஞ்சரியை மணம் செய்து கொள்ள விரும்புகிறான். அதை அறிவிக்க வந்தோம்" என்று கூறிச் சென்றனர் தோழர். அவர்கள் கூறியதைக் கேட்டு குபேரதத்தன் கவலை கொண்டான். என்ன செய்வதென்று மனம் கலங்கினான். 'சுரமஞ்சரியின் விரதத்தை எவ்வாறு கெடுக்க முடியும்? இச் செய்தியைக் கேட்டால் அவள் என்ன நினைப்பாள்? சீவகனுக்குக் கொடுக்க மறுத்தாலும் முடியாத காரியம். பாக்கியம் இல்லாத யான் அபாக்கியவதியான சுரமஞ்சரியின் விஷயத்தில் என்ன செய்வேன்?' என்று எண்ணிக் கவலையுற்றான். பின்னர், தன் மனைவி முதலியவரிடம் நிகழ்ந்தவற்றைக் கூறி ஆலோசித்தான்.

சீவகனை விரைவில் மணம் புரிந்து மகிழ்ந்திருக்கச் சுரமஞ்சரியும் ஆவல் கொண்டாள். தன் விருப்பத்தைப் பெற்றோர்க்கு உணர்த்திவிட எண்ணினாள். தன் உயிர்த்தோழியாகிய கனகபதாகையிடம் விருப்பத்தைப்

புலப்படுத்தினாள். சுரமஞ்சரிக்கும் சீவகனுக்கும் காதல் நிகழ்ந்ததை முன்பே அறிந்த கனகபதாகை அச்செய்தியைச் செவிலித்தாயிடம் சொன்னாள். செவிலித்தாய் தான் எண்ணியபடியே நிகழ்ந்ததை நினைத்து மகிழ்ந்து சுரமஞ்சரியின் தாய் சுமதியிடம் கூறினாள்.

சீவகன் விருப்பத்தை குபேரதத்தன் தன்னிடம் கூறியதையும், சுரமஞ்சரியின் கருத்தைச் செவிலித்தாய் கூறியதையும் எண்ணி, சுமதி மனம் மகிழ்ந்தாள். குபேரதத்தனிடம் சுரமஞ்சரியின் விருப்பத்தை உணர்த்தினாள். "ஐய, நேற்றிரவு ஒரு கனவு கண்டேன். விடியற் காலத்தில் பார்த்தேன். ஆதலால் ஓர் உண்மை புலப்பட்டது" என்று கூறினாள். குபேரதத்தன் வியப்புடன், "என்ன கனவு?" என்றான். "ஒரு பொய்கையில் நீர் வற்றியது" என்றாள் சுமதி. "அதனால், நீ என்ன உண்மை அறிந்து கொண்டாய்?" என்றான் அவன்.

"நம், கன்னிகை சுரமஞ்சரிக்கு, கன்னித் தன்மை (கன்னிப் பருவம்) நீங்கியது" என்றாள். சற்று வியப்புடன் சுமதியை நோக்கினான் அவன்.

"ஐய, இன்னும் ஒரு மகிழ்ச்சி தரும் செய்தி. சீவகசாமியைச் சுரமஞ்சரி விரும்புகிறாள். அவள் விரதமும் இன்றோடு முடிவுற்றது. இந்நிகழ்ச்சி, பாற் கடலில் தேன் மாரி பொழிந்தது போல நமக்கு மகிழ்ச்சி தருகிறது" என்றாள் சுமதி. தன் எண்ணம் பயனெய்தியதை எண்ணி அவன் மகிழ்ந்தான். உடனே கலியாணத்திற்கு ஆவனவற்றைச் செய்தான். உறவினர்க்கு அச்செய்தியைத் தெரிவித்தான். மணச் செய்தியை அறிந்த யாவரும் மகிழ்ந்தனர். இப்படி, சுரமஞ்சரிக்கும், சீவகனுக்கும் மணம் நிகழ்ந்தது. நாற்றெட்டு மகளிரையும்,

ஒன்றரைக்கோடி பொன்னையும், மூன்று ஊர்களையும் சீதனமாக அளித்தான் குபேரதத்தன்.

* * * *

சீவகனும் சுரமஞ்சரியும் மனம் களித்துப் பொழுது போக்கி இருந்தனர். முதிய அந்தணன் வடிவம் கொண்டு, தன்னை ஏமாற்றியதைக் கூறிச் சுரமஞ்சரி பரிகசித்து மகிழ்ந்திருந்தாள். அவள் அழகையும் இன்பத்தையும் பாராட்டிப் புகழ்ந்தான் சீவகன். இவ்வாறு சில நாட்கள் கழிந்தன. பூம்படுக்கையில் இருவரும் பேசிய வண்ணம் இருந்தனர். அவளுக்குச் சிலவற்றைக் கூற எண்ணிய சீவகன், "நங்காய், சில நாட்கள், உன்னைப் பிரிந்திருப்பேன். அதற்கு நீ வருந்தாதே; பிரிவுக்கு மனம் வருந்தினால் மேனி இளைக்கும்; அதனால், உன் அழகும் கெடும்; அவ்வாறு வருந்தாதே. அழகு என்பது பெறுதற்கு அரியது. மிகவும் போற்றற்கு உரியது" என்றான். சீவகன் உள்ளத்தையும், இயல்பையும் அறிந்த சுரமஞ்சரி, அதற்குச் சிறிதும் வருந்தவில்லை. சீவகனை அன்போடு தழுவிக்கொண்டு, "ஐய, யான் விரும்புவது வேறு ஒன்று உண்டோ? நமது மனம் போல் யான் நடந்துகொள்பவள்; ஆதலால் உமது மனம் விரும்புவதையே என் மனமும் விரும்பும்; நும் பிரிவைத் தாங்கிக்கொள்வேன்" என்று கூறினாள்.

"நங்காய், உன் அழகு வருந்தும்படி, நீண்ட நாட்கள் பிரியேன். விரைவில் உன்னைச் சேர்வேன்" என்று கூறினான். பின்னர், அவளைத் தழுவி விடைபெற்றுத் தோழர் இருக்குமிடம் சென்றான். தோழர்களுடன் கந்துக்கடன் மாளிகைக்குப் போனான்.

சீவகன் பிரிவுக்குக் கந்துக்கடன் வருந்தவில்லை. முனிவர் கூறிய மொழியால் கவலையின்றி இருந்தான். அவன் மனைவி, சுநந்தை மனம் பொறுக்காதவளாய்ச் சீவகனை எண்ணி வருந்தியிருந்தாள். சீவகன் இளமைப் பருவத்தில், போர்த்தொழில் பழகிய யானை, குதிரை, தேர் முதலியவற்றைப் பார்த்து, "இவற்றை விட்டு என் மகன் எங்கே சென்றான்? எங்கே இருக்கிறான்?" என்று பிதற்றிப் பொழுது போக்கியிருந்தாள். சீவகன் பிரிவால் அனலில் இட்ட மெழுகுபோல், சுநந்தையின் உள்ளம் உருகியது. இவ்வாறு சுநந்தை வருந்தியிருக்கும் போது, சீவகன் அங்கு வந்தான். கட்டியங்காரனுடைய ஒற்றர்கள், உணராதவாறு, தன் வரவை வாயாலுரைக்காமல் குறிப்பால் அறிவித்தான். சுநந்தை சீவகனைக் கண்டதும் தழுவிக் கவலை நீங்கி ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள். சீவகனை அணைத்து இனிய வார்த்தைகளைக் கூறிக் கந்துக்கடன் மகிழ்ந்தான். சீவகனுடன் பழகிய மற்றவர்கள், கன்றைக் கண்ட தாய்ப்பசுவைப் போல் அவனைக் கண்டு அகமகிழ்ந்து ஆரவாரித்தனர். உவகை மிகுதியால் யாவரும் கண்ணீர் சொரிய அழுதனர். ஒருவரை ஒருவர் மகிழ்ச்சியால் அடித்துக் கொண்டு, "நம்பியோ, நம்பியோ!" என்று கூறிக் கூத்தாடினர். 'சீவகன் வரவைக் கட்டியங்காரன் அறிந்து விடுவான்' என்று கந்துக்கடன் அஞ்சினான். உடனே எல்லோரையும் நோக்கி, "அழுது ஆரவாரம் செய்தால் ரகசியம் வெளிப்படும், பேசாதிர்" என்றான். அழுகையும் ஆரவாரமும் உடனே அடங்கியது. நடந்ததை மறைத்தற்கு எண்ணி, "எம் தந்தையார் இறந்த நாள் இன்று வந்தது" என்று கூறி அழுதனர். பின்பு, அழுகையை நிறுத்திச் சீவகனோடு அளவளாவியிருந்தனர்.

சீவகன், எல்லாருடனும் பேசியபின், காந்தருவ தத்தையிடம் சென்று அவளோடு மகிழ்ந்திருந்தான். காந்தருவதத்தை சீவகனைக் கண்டு உள்ளம் குளிர்ந்தாள்; "ஐய, என் தங்கை, குணமாலை நும் பிரிவால் வருந்தி யிருக்கிறாள். அவளைக் கண்டு மகிழ்விக்கவேண்டும்" என்று விருப்பத்துடன் கூறினாள். குணமாலையிடம் அவளுக் குள்ள அன்பையும் இரக்கத்தையும் கண்டு சீவகன் மகிழ்ந்தான். உடனே குணமாலையின் மாளிகைக்குச் சென்றான். குணமாலை சீவகனைக் கண்டதும் மகிழ்ந்து வணங்கினாள். தான் தொணர்ந்த பூமாலை முதலியவற்றை அவளுக்கு அணிந்தான் சீவகன்; குணமாலையைத் தழுவ அருகில் சென்றதும் அவள் கோபங்கொண்டு அகன்று நின்றாள்.

"ஐயனே, நீவிர் உடைய என்னைத் தொடவேண் டாம்; யான் மிகவும் பாவம் செய்தவள்" என்று கூறி அழுதாள். தன்னைத் தீண்டியமையால் சீவகன் கொலை யுண்டான் என்று உலகம் கூறுவதை எண்ணி உள்ளம் நொந்தாள்; கண்ணீர் பெருக விம்மி நின்றாள். "நங்காய், வருந்தாதே; உன்னுடைய நல்வினைப்பயனால்தான் எல்லாத் துன்பங்களிலிருந்தும் யான் தப்பினேன். உன்னைப் பிரிந்திருந்த காலமெல்லாம் உன் உருவத்தை என் மனத்தில் நிறுத்தியிருந்தேன். உன்னைத் தழுவாமல் ஒவ்வொரு நாளும் ஓர் ஊழிக்காலமாயிருந்தது. இன்னும் என்னை வருத்தாதே" என்று அவளைச் சீவகன் தழுவினான். கோபம் நீங்கிக் குணமாலையும் மகிழ்ந்திருந் தாள். அன்று குணமாலையுடன் இருந்தான்.

மறுநாள், மேல்செய்ய வேண்டிய காரியங்களை எல்லோரிடமும் கூறிவிட்டுத் தோழருடன் புறப்பட்

டான். பிறர் அறியாமல் இருத்தற்குக் குதிரை வாங்கும் வாணிகனாக வேஷம்கொண்டான். தோழர்களும் வீரரும் சூழத் தன் மாமன், கோவிந்தராசனுடைய விதைய தேசத்தை நோக்கிச் சென்றான்.

## 23

# திரிபன்றி யந்திரம்

சீவகன் முதலியவர்கள் விதைய நாட்டை நோக்கிக் குதிரைகளை விரைவாகச் செலுத்தினர். எருமைகள் சொரிந்த பாலை அன்னமும் நாரையும் பருகி வளரும் மருதநிலக் காட்சிகளைக் கண்டு நடந்தனர். சங்குகளும் வலம்புரிகளும் சலஞ்சலம் என்ற முத்துக்களும் நிறைந்த நெய்தல் நிலக்காட்சிகளையும், முல்லை மணம் கமழும் முல்லை நிலக் காட்சிகளையும் கண்டு சென்றனர். அருவி ஒழுகும் மலைகள் சூழ்ந்த குறிஞ்சி நிலத்தையும் கடந்து சென்றனர். அவற்றிற்கு அப்பால் உள்ள தீயைக் கக்குகின்ற பாலைவனத்தையும் கடந்து ஒரு நதிக்கரையில் தங்கி இளைப்பாறினர்.

அருகில் இருப்பது விதைய தேசமே என்று வழிப் போக்கரால் அறிந்தனர். உடனே அவ்விடத்தை நோக்கி விரைந்து போனார்கள். விதைய தேசத்தின் எல்லையை அடைந்ததும் ஒரு சோலையில் தங்கினர். சீவகன் வந்திருப்பதைக் கோவிந்தராசனுக்கு உணர்த்தி வருமாறு ஒரு வீரனைத் தோழர் அனுப்பினர். கோவிந்தராசனிடம் அவ்வீரன் சென்று, 'சீவகன் சோலையில் தங்கி யிருப்பதை' அறிவித்தான். வீரன் மொழியைக் கேட்டுக்

கோவிந்தராசன் முதலியவர் சீவகனைக் காண ஆவல் கொண்டனர்.

"தேசம் முழுவதும் அலங்காரம் செய்க. இடங்கள் தோறும் வில்லைப்பிடித்த விரல்கள்போல் நெருங்கி நின்று சீவகசாமியை எதிர்கொள்க" என்று கூறி ஓலையில் எழுதிக் கையெழுத்திட்டுக் காரியப் பெயரை (காரியஸ்தர்) ஏவினான். உடனே அவர்கள் சென்று நாட்டினர்க்கு அரசன் கட்டளையை அறியச் செய்து ஆவனவற்றைப் பார்த்தனர். நகர மக்கள் சீவகனை வரவேற்பதற்கு மாளிகைகள் எங்கும் அலங்கரித்தனர். வாழையும் கமுகும் நட்டனர். பச்சைத் தோரணங்களும் பூமாலைகளும் தொங்கவிட்டனர். அரசன் பரிவாரத்தினர் பல்வகைச் சிறப்புக்களுடனும் யானை முதலிய படை வரிசைகளுடனும் சீவகனிருக்கும் சோலையை அடைந்து அவனை எதிர்கொண்டு அழைத்தனர்.

அரசன் அனுப்பிய பெண்யானையின் மீது சீவகன் ஏறிக் கொண்டான். இருபுறமும் மகளிர் நின்று சாமரை வீசினர்; பனிநீரும் சந்தனமும் தெளித்தனர். யானை மீது செல்லும் தேவகுமாரன்போல் சீவகன் சென்றான். அவன் பின்னே தோழர் முதலியவர் சென்றனர். வீதி வழியே செல்லும் சீவகனைக் கண்டு ஆரவாரித்து நகர மாந்தர் வரவேற்றனர். "திருவே வருக, திருமால் வருக" என்றனர். "காமன் வருக, காளை வருக" என்றனர். "வித்தியாதர குமரன் வருக, வரை பிளந்த முருகன் வருக" என்றனர். "அருகன் வருக, வீரன் வருக" என்றனர். இவ்வாறு நகரமக்கள் வாழ்த்தி வணங்கினர். சீவகன் மேனி அழகைக் கண்டு மகளிர் மயங்கிச் சென்றனர். சீவகனைச் சுமந்து செல்லும்

பெண் யானையைக் கண்டு, "பெண் யானையே, சீவக சாமியின் அழகை நாங்கள் கண்களால் காணும்படி மெல்ல நடந்து செல். விரைந்து செல்லாதே. 'பெண்மைக்கு அழகு மென்னடை' என்பதை அறியாமல் விரைந்து போகின்றாய்; நீ உன் கணவனை இழப்பாய்" என்று கூறிப் பிதற்றினர். சீவகன் பரிவாரம் சூழ, வீதியைக் கடந்து அரண்மனைக்குள் சென்றான். அரண்மனையிலுள்ள பட்டத்துத் தேவியர் சீவகனைக் கண்டு, "இத்தகைய மகனை யாம் பெற்றோமே" என்று கூறிப் புகழ்ந்தனர். அப்போது கோவிந்தராசன் மகள் இலக்கணை தன் தோழியுடன் சீவகன் அழகைக் காதலோடு நோக்கி நின்றாள். தன்னை நோக்கும் இலக்கணையை யானையின்மீது இருந்த சீவகனும் நோக்கினான்.

யானையினின்றும் இறங்கி, அரண்மனைக்குள் புகுந்தான். தன் மாமன் கோவிந்தராசனை வணங்கி நின்றான். மன்னன் தன் மருமானை அன்போடு நோக்கி, தழுவிக் கொண்டான். அன்பு மிகுதியால் மனம் பொருமிக் கண்ணீர் பெருக அழுதான். சீவகனை அணைத்துக் கொண்டு, வேந்தன் அழுவதைப் பார்த்து மற்ற மகளிரும் ஆடவரும் அழுதனர். சச்சந்தனை நினைத்து எல்லோரும் வாய்விட்டுப் புலம்பினர். அதைக் கண்ட விசயை அங்கே வந்து அவர்கள் அழுகையை மாற்றினாள். அரசன் மனம் அமைதியுற்றுப் பேசாதிருந்தான். தாயையும், மற்றப் பட்டத்துத் தேவியரையும் சீவகன் வணங்கினான். பின்னர், அரசனுடன் அளவளாவி இருந்தான்.

தனியாக இருந்து ஆலோசனை செய்வதற்கு எண்ணி, சித்திர கூடத்திற்குச் சென்று கோவிந்தராசன்

அமர்ந்தான். அரசனுடன் ஆலோசனை செய்வதற்கு மந்திரியருடன் சீவகனும் சென்று அமர்ந்தான். கட்டியங்காரனோடு போர் செய்து மடிய எண்ணிய கோவிந்தராசன் தன் மகன் ஸ்ரீதத்தன் என்பவனிடம் அரசாட்சியைத் தந்து முடி புனைவித்தான்.

பின்னர், சீவகனுக்கு அரசனுக்குரிய ஆடையாபரணங்களை அளித்துச் சிறப்பு செய்தான். அவன் தோழர்களுக்கும் தக்க சிறப்புகளைச் செய்தான். நந்தட்டனுக்கும் சீவகனுக்குச் செய்தது போன்ற சிறப்புகளைச் செய்தான். கட்டியங்காரன் தனக்கு விடுத்த ஓலையைச் சீவகனுக்குப் படித்துக் காட்ட எண்ணி, தன் அந்தரங்க ஊழியன் விரிசிகனிடம், "கட்டியங்காரன் நம் கருத்தை அறிய எண்ணி வஞ்சமாக விடுத்த ஓலையை நீ வாசிப்பாயாக" என்றான். உடனே, விரிசிகன், ஓலையை உறையினின்றும் எடுத்துப் படிக்கலானான்: "கட்டியங்காரன் ஓலையை விதையத்தார் வேந்தன் காண்பானாக. சச்சந்தனை நான் கொன்றதாக உலகில் செய்தி பரவியுள்ளது. என் மீது கிடக்கின்ற பழியைத் தாமும் உண்மையென்று கொண்டீர். இனி என் உயிர் போகும்படி, என் நெஞ்சைப் பிளந்து காட்டினாலும், நம்புவார் இல்லை. ஆனாலும் யானாகவே சொல்கிறேன். அதாவது, என் பட்டத்து யானை, அசனிவேகம் யானைக் கூட்டம் அஞ்சும்படிப் பாய்ந்தது; தேர்களை அழித்தது; தந்தத்தால் குதிரைத் தொகுதிகளைக் குத்தியது; வீரர் மடியும்படிக் கோபித்துத் துன்பம் செய்தது; அதைக் கண்டு பொறாமல், சச்சந்தன், நூற்றவர் பாகர்களை ஏவினான். அசனிவேகம் அந்தப் பாகர்கள் நூற்றுவரையும் கொன்றது. பின்பு, அரசன் கோபம் மிக்குத் தானே

சென்று, அசனிவேகத்தை அடக்கினன். அடக்கிய பின் அதைக் கட்டுத்தறியில் கட்டப் போகையில், அசனிவேகம் யமனைப்போல் முழங்கித் தள்ளி, அரசனைக் கொன்றது. வேந்தன் இறந்த தன்மை இதுவே. இனி, கோவிந்தராசன் உலகம் கூறும் பழியை நம்பாமல் யான் சொல்லியதையே நம்பி, இங்கு வந்து யாவற்றையும் அறிந்தால், எனக்குப் பழியும் நீங்கும். தங்களுக்கு யான் என் உயிரையும் தருவேன். இனி, தாங்களே, எனக்கு இறைவன்; ஆதலால், இந் நாட்டின் உரிமையை விரும்பி விரைந்து வருக."

இவ்வாறு விரிசிகன் வாசித்தான். அதைக் கேட்ட சீவகன், இடியின் முழக்கத்தைப்போல் வாய் திறந்து நகைத்தான். கோவிந்தராசனை நோக்கி, "மாமா, கட்டியங்காரன், யமனைத் தானே கையால் அழைக்கின்றான். கட்டியங்காரனைக் கொல்வதற்குக் காரணமான உபாயம் இதுபோல் வேறு ஒன்று இல்லை" என்றான்.

கோவிந்தராசனும் நகைத்து, "சீவக, கட்டியங்காரன் நம்மை, வஞ்சனையால் கொல்லக் கருதினன். ஆதலால், நாமும் அவனை, வஞ்சனையால் கொல்லக் கருதினோம். ஆதலால், இக்கட்டை முதலில் கூறி, பின்பு படை கூடும்படி முரசறைவிக்க வேண்டும்" என்று சொன்னான். உடனே மந்திரியர் முரசறைபவனிடம் கூறினர். முரசறைவோன் அரசன் கூறிய செய்தியை நாட்டினர்க்குக் கூறலானான்:

"நம் வேந்தன், பகையை விட்டுக் கட்டியங்காரனோடு உறவானான். ஆதலால், நெல்லும் பொன்னும் இரண்டு நாட்டினும் வழங்குவீராக" என்று முதலில் கூறிப் பின்பு, "வீரர்கள், யானை, குதிரை, தேர் முதலிய

வற்றுடன் நகரில் பொதுவிடத்தில் நாளைக்குள் கூடுக" என்று கூறி முரசறைந்தான்.

அரசன் கட்டளைப்படி, மறுநாள் காலையில், ஆங்காங்கு உள்ள சேனைகள், நகரில் ஒன்றாகக் கூடின. சங்குகளும், மத்தளமும், முரசமும் இடைவிடாமல் முழங்கிக்கொண்டிருந்தன. நால்வகைச் சேனைகளும் வரிசை வரிசையாக அணிவகுத்து நின்றன. பதினாயிரத்து அறுநூறு யானைகள் ஒருபுறம் நின்றன. தீங்கு அஞ்சாத யானை வீரர்கள், ஈட்டி, வேல் முதலியவற்றுடன் வரிசையாக நின்றனர். மாளவம், சிந்து, பாரசூரவம், பல்லவம், மாரட்டம் முதலிய இடங்களிலிருந்து பல வகைக் குதிரைகள் வந்திருந்தன. இருபதினாயிரத்து அறுநூறு குதிரைகள் பூண்ட தேர்கள், ஒருபுறம் நின்றன. நான்கு நூறாயிரம் வீரர்கள் வில், வாள் முதலியவற்றுடன் ஒருபுறம் நின்றனர்.

சேனைகள் வந்து சேர்ந்தமையை அறிந்த அரசன் அவற்றைக் காண்பதற்கு எண்ணி, அரண்மனை மேல் மாடத்து உச்சியில் ஏறிக் குடை நிழலில் நின்று பார்த்தான். சேனாதிபதி அருகில் நின்ற படைகளின் வகையையும் எண்ணிக்கையையும் அவற்றின் வன்மையையும் கூறிக் காட்டினான். கோவிந்தராசன் படைகளைக் கண்டு ஊக்கத்துடன் கீழ் இறங்கினான். சீவகன் முதலியவர்க்கு வேண்டியவற்றைக் கூறிவிட்டுத் தன் யானையாகிய ஐராவதத்தின்மேல் ஏறிக் கொண்டான். உடனே எல்லோரும், "வெல்க, வெல்க" என்று வாழ்த்தினர். சீவகன் முதலியவர்கள் அவரவர்கள் ஊர்திகளில் ஏறிக் கொண்டனர். கோவிந்தராசன் சீவகன் முதலியவர்களுடன் படைகள் சூழ, விதையநாட்டை விட்டுப் புறப்

பட்டான். சங்குகள் முழங்கின. முரசங்கள் ஆர்த்தன. வழியில் பறவைகளும் நிமித்தமும் நன்மையை அறிவித்தன. கோவிந்தராசனுடைய வலக்கண் துடித்தது. ஏமாங்கத நாட்டை நோக்கிப் படைகள் மிக விரைவுடன் சென்றன. படைகளின் தொகுதியையும் ஆரவாரத்தையும் கண்டு காட்டிலுள்ள விலங்குகளெல்லாம் அஞ்சி ஓடின. மயில்கள் ஓடுதலாலும் மான்கள் ஓடுதலாலும் படைக்கு அஞ்சிக் காடும் மலையும் வேறிடம் குடிபோவன போன்றன. படைகள் காடுகளையும் மலைகளையும் கடந்து ஏமாங்கத நாட்டை அடைந்தன. உடனே கோவிந்தராசன் படைகளுடன், இராசமாபுர நகரின் மதிலின் புறத்தே தங்கினான்.

கட்டியங்காரனுடைய அரண்மனையில் தீய சகுனங்கள் தோன்றின. அவன் மனைவியர்களின் வலக்கண்கள் துடித்தன. தீய கனவுகளைக் கண்டு அவர்கள் மனங் கலங்கினர். கட்டியங்காரனுடைய மேனி ஒளி மாறுபட்டது. நடுப்பகலில் அரண்மனையில் கோட்டான்களும் ஆந்தைகளும் குழறின.

கோவிந்தராசன் தன் நாட்டிற்கு வந்திருப்பதை அறிந்த கட்டியங்காரன் உவகை கொண்டான். 'கோவிந்தராசனை வஞ்சகத்தால் கொன்று அவன் நாட்டையும் கைப்பற்றலாம்' என்று அகமகிழ்ந்தான். உடனே, கோவிந்தராசனுக்குச் சிறப்புச் செய்பவன் போல் கடித்து யானைகள் இருநூறும், தேர்கள் நூறும், குதிரைகள் ஆயிரமும் வீரர் வசம் அவனுக்கு அனுப்பினான். கட்டியங்காரன் வஞ்சனையோடு அனுப்பித்த வரிசையைக் கண்டு கோவிந்தராசனும் அவனுக்குச் சிறப்புச் செய்ய நினைத்தான். கட்டியங்காரன் அனுப்பியதற்குச் சம

மாகத் தன் யானைகளில், 'வாரி மணாளன்' என்னும் யானையையும், தேர்களில் 'விசயம்' என்னும் தேரையும், குதிரைகளில் 'பவனவேகம்' என்னும் குதிரையையும் அவனுக்கு அனுப்பினான். கட்டியங்காரனுடைய பெரும் படை தன்னுடைய சிறுபடைக்கு ஒப்பாகும் என்பது தோன்ற, கோவிந்தராசன் சிறப்புச் செய்தான். அதை அறியாத கட்டியங்காரன், 'யான் அனுப்பியவற்றைக் காட்டினும் இரட்டித்த சிறப்புடையனவற்றைக் கோவிந்தன் அளித்தான்' என்று மகிழ்ந்தான்.

கோவிந்தராசன், கட்டியங்காரனோடு நட்புடையவன் போல் இருந்து அன்பு (சீவகன்) என்னும் கத்தியால் அவன் உயிரை வாங்குதற்கு, வஞ்சனையால் ஓர் உபாயம் செய்தான். ஒரு சக்கரத்தின் உள்ளே, மூன்று பன்றிகள் திரிகின்றதாகிய திரிபன்றி யந்திரம் ஒன்றைச் செய்வித்தான். பின்னர், "சக்கரத்தில் திரிகின்ற மூன்று பன்றிகளையும் எய்தவன், என் மகள் இலக்கணைக்குக் கணவன் ஆவான்" என்று கூறி முரசறைவித்தான். அயல் நாடுகளுக்கும் அச் செய்தியை வீரர்களைக்கொண்டு அறிவித்தான். சில நாட்களுக்குள், அரசரும் வீரரும் படைகளுடன் இராசமாபுரத்தின் மதிற்புரத்தே வந்து கூடினர். பதுமையின், ஸகோதரன், உலோக பாலனும், கனகமாலையின் ஸகோதரர்களாகிய விசயன் முதலியவர்களும் வந்து சேர்ந்தனர். வில்லையும், அம்பையும் தாங்கி, அரசரும் சக்கரத்தினுள்ளே திரியும் பன்றிகளைப் பார்த்துத் திகைத்து நின்றனர். திரிபன்றி யந்திரத்தின் தன்மையைப்பற்றி பலவாறு தமக்குள் பேசிக்கொண்டனர். சிலர், அம்பால் எய்யத் தொடங்கினர். சிலர் வில்லைக் கையில் பிடித்து அழகுபார்த்தனர்.

வினிதை நாட்டு மன்னன் முதலில் அம்பை எய்தான்; அம்பு, பன்றிமீது படாமல் கீழே வீழ்ந்தது. அத்தினபுரத்தரசன் வன்மையுடன் ஓர் அம்பை எய்தான். அவ்வம்பு, பன்றிமீது தைக்காமல் வேறிடம் சென்றது. காம்பிலி நாட்டு மன்னன், மிக்க வீரத்துடன், பன்றியை வீழ்த்துவதற்குச் சக்கரத்தில் ஏறினன்; உடனே அதன் வேகம் தாங்காமல் தலைகீழாகப் பூமியில் விழுந்தான். கோசல நாட்டரசன் எய்த அம்பு ஆகாயத்தில் சென்று மறைந்தது. அவந்தி மன்னன் வில்லை எடுத்து வளைத்ததும் வில் முறிந்தது. கலிங்க மன்னன் எய்த அம்பை ஒரு பன்றி விழுங்கியது. வாரணவாசி மன்னன் எய்த அம்பு, பன்றிமீது பட்டும் படாமலும் வீழ்ந்தது. போதன புரத்து மன்னன் சக்கரத்தில் ஏறியதும் கண் சுழன்று வீழ்ந்தான். பாண்டியன் எய்த அம்பு பன்றிமீது பட்டு முறிந்தது. விசயன், வில்லை வளைத்ததும் அது முறிந்தது; வேறு வில்லை எடுத்து வளைத்ததும் நாண் அறுந்தது.

இவ்வாறு பல மன்னரும் வீரரும் மிக முயன்றும் பன்றியை வீழ்த்த இயலாதவராயினர். ஆறு நாட்கள் இவ்வாறு கழிந்தன.

## 24

# கட்டியங்காரன் வீழ்ச்சி

ஆறு நாட்களாக இடை விடாமல் முயன்றும் திரி பன்றியை எய்து வீழ்த்த முடியவில்லை. 'இது முடியாத காரியம்' என்று யாவரும் ஊக்கம் இழந்தனர். ஏழாம் நாள் பன்றியை எய்வதற்குச் சீவகன் புறப்பட்டான்.

அன்று, கட்டியங்காரன், மதனனுடன் படை சூழ அங்கு வந்திருந்தான். அரசர்கள் யானைகளின் மேல் இருந்து திரிபன்றி யந்திரத்தை எய்யும் ஒவ்வொரு வரையும் பார்த்து வியந்தனர். ஒரு யானை மீது ஏறி வில்லையும் அம்பையும் தாங்கியவண்ணம் அங்கே சீவகன் தோன்றினான். சீவகனைக் கண்டதும், புலியைக் கண்ட மான்போல் கட்டியங்காரன் மனம் கலங்கினான். சீவகன் இறந்தானென்று எண்ணியிருந்த கட்டியங்காரன் அவனைக் கண்டதும் உள்ளம் கலங்கி இருந்தான். 'அநங்க மாலை நாட்டியத்தில் அகப்பட்ட புலியைச் சிறைப்பிடித்த யான் அதனை வாளுருவிவிட்டேன். அத்தவறு என்னை இப்பொழுது வருத்துகிறது. மதனனைத் தப்பி இவன் ஓடிய தப்பும் என்னை வருத்துகிறது' என்று சிந்தை கலங்கித் தான் ஏறியிருந்த யானையின் தலையில் கையால் தட்டிக் கோபத்துடன் இருந்தான்.

யானையில் ஏறிச் சென்ற சீவகன், திரிபன்றி இருக்கு மிடம் சென்றதும் கீழே இறங்கினான். தன் வில்லின் நாணைத் தெரித்தான். பன்றிகள் மூன்றும் ஒன்றாகச் சேரும் சமயத்தை நோக்கிச் சிறிது நின்றான். 'சீவகன், திரிபன்றியை வீழ்த்துவனோ?' என்று மன்னர் மனம் கலங்கி இருந்தனர். அப்போது சீவகன் சட்டென்று சக்கரத்தில் குதித்தான். வில்லை வளைத்து ஓர் அம்பைத் தொடுத்துப்பன்றிமீது குறி வைத்து எய்தான். உடனே மூன்று பன்றிகளோடு கட்டியங்காரனுடைய வாழ்நாளும் அற்று வீழ்ந்தன. அதைக் கண்டு எல்லாரும் ஆரவாரம் செய்தனர். சிலர் சீவகனைப் போற்றினர். சிலர் கோபித்தனர். சிலர் மனம் புழுங்கினர். கட்டியங் காரன் அறிவு கலங்கினான். உடனே கோவிந்தராசன், .

கட்டியங்காரனுக்கு முன் சென்று, "நம் சீவகசாமி, ஏமாங்கத நாட்டின் அரசன் சச்சந்தனுடைய குமரன் — என் மருமான் — இப்போது, திரிபன்றிகளை வீழ்த்தி என் மகள் இலக்கணைக்குக் கணவன் ஆனான். இனி, பகைவரை வென்று, தன் நாட்டையும் பெறுவான்" என்றான். பின்னர், அச்செய்தியை எல்லா அரசர்களுக்கும் கூறினான். சீவகன் வரலாற்றைக் கேட்டு யாவரும் வியந்தனர். 'மேல் என்ன நிகழுமோ?' என்று அஞ்சினர். அப்போது ஆகாயத்தில், ஒரு யக்ஷன் தோன்றி, "சீவகன் என்னும் சிங்கம் வேலாகிய சோலையில் நிற்கும் கட்டியங்காரன் என்ற யானையின் உயிரை விழுங்கும்" என்று கூறி மறைந்தான். அதைக் கேட்டுக் கட்டியங்காரன் மனம் புழுங்கினான்; "அடா, சீவகா, மாமன் படை கொண்டு வந்தாயென்று, யான் அஞ்சுவேனோ? என் வன்மையை உன் தந்தை அறிவான்; நீ அறியாய். போரில் உன்னையும், வஞ்சனையால் என்னைக் கொல்ல எண்ணிய உன் மாமன் கோவிந்தனையும் கொல்கிறேன்" என்று வஞ்சினம் கூறினான். சூரியகாந்தம் சூரியனைக் கண்டதும் தீயைக் கக்குவது போல் சீவகன் வெற்றியைக் கேட்டதும் மதனன் மனம் புழுங்கினான். கட்டியங்காரன் சில விநாடிகளில் நால் வகைப் படைகளையும் தொகுத்தான். வேல் வீரராகிய கட்டியங்காரனுடைய பிள்ளைகள் நூற்றுவரும் கூடினர்.

சீவகன் பக்கத்தில், படையும், யானையும், தேரும் நான்கரைக் கச்சம்; குதிரைகள் எழு நூறாயிரம்; காலாட் படை எழு தேவகோடி. கட்டியங்காரன் பக்கத்தில் படையும், யானையும், தேரும் ஐந்தரைக் கச்சம்; குதிரைகள் எழு நூறாயிரம்; காலாட்படை எழு தேவகோடி.

இருவர் படைகளும் அணிவகுத்து நின்றன. முரசம் முழங்கின; சங்கமும், பறையும் ஆர்த்தன. பம்பையும் சிறு சின்னமும் ஒலித்தன. இவ்வோசைகளின் மிகுதியால் எவ்விடத்து ஒலியும் கடல் முழக்கத்தை ஒத்தன. வாளும் வாளும் மின்ன, வேலும் வேலும் மாறுபட, இருவர் படைகளும் மோதிப் பொருதன. யானைகள் பல வேறு துண்டங்களாயின. குதிரைகள் உருத் தெரியாமல் வெட்டுப்பட்டன. வீரர்கள் ரத்தத்தைக் கக்கினர். யானையைத் தலையணையாகவும், குதிரையைக் காலணையாகவும் கொண்டு வீரர் வீழ்ந்து கிடந்தனர். வீரர்களது மார்பிலும், வயிற்றிலும், முகத்திலும் ரத்த ஊற்றுக்கள் குமிழிவிட்டுக் கிளம்பின. வீரர்களது குடலைப்பற்றி இழுக்கும் நரிகள், சங்கிலிகளை இழுக்கும் நாய்களைப் போன்றன.

மதனன் இடிபோல் முழங்கிச் சென்று விசயன் ஏறியிருந்த யானையின் நெற்றியில் பாய்ந்தான். உடனே தன் கைவாளால் அவனை வெட்டி வீழ்த்தினான் விசயன். அதைக் கண்ட மதனன் தம்பி, மன்மதன், விசயனை எதிர்த்தான். உடனே விசயன் யானை அவனைத் தூக்கியது. அப்போது மன்மதனை வெட்டித் தள்ளினான் விசயன். புத்திசேனன் உருவிய வாளுடன் காற்றாடி போல் திரிந்து கட்டியங்காரனுடைய படையைக் கலக்கி அழித்தான். குதிரையில் ஏறிப் பாய்ந்து சென்ற நபுலன் மகதை அரசன் ஏறிய யானைமீது தன் குதிரையைப் பாய்வித்தான். மகதை மன்னன் நடுங்கிக் கண்களை இமைத்தான். அதைக் கண்டு, "போரில் கண் இமைக்கும் உன்னைக் கொல்லேன்" என்று கூறி வேறொரு யானையின்மீது பாய்ந்தான்; யானையிலிருந்த வீரன்,

ஆயுதம் இல்லாதவனாய் இருப்பதைக் கண்டு அவனோடு போர்செய்யாமல் குதிரைப்படையோடு பொருதான். கட்டியங்காரன் துணைவனான காமுகன், பதுமுகனோடு பொருது மாண்டான். காமுகன் தம்பி கோமுகன் அதுகண் பொறானாய்ப் பதுமுகனோடு போர் செய்தான். பதுமுகன் அவனோடு வேலால் சண்டை செய்து முடிவில் அவனை வீழ்த்தினான். தேவதத்தன் மகத மன்னனோடு பொருது வென்றான். உலோகபாலன் காம்பிலி மன்னனைத் தோல்வியுறச் செய்தான். விபுலன் வாளை வீசி போர்க்களமெங்கும் திரிந்து தன்னோடு எதிர் பொருவார் உளரோ என்று கூவிச் சென்றான். அப்போது ஒரு வீரன் வாளுடன் அவன் முன் தோன்றி, "வீர, நீ எனக்கு நிகரானவன்; என்னை வெட்டுவாயாக" என்றான். அதைக் கேட்டு விபுலன் இடிபொலிபோல் சிரித்து, அவனுடன் பொருதான். இருவரும் வெற்றி, தோல்வி இல்லாமல் நீண்டநேரம் எதிர்த்து நின்றனர். முடிவில் வன்மையோடு விபுலன் எறிந்த வேலால் அவ்வீரன் மாய்ந்தான்.

கட்டியங்காரனுடைய படைத் தலைவன், பூரண சேனன், "ஊழியளவும் கட்டியங்காரன் வாழ்க" என்று கூறிச் சீவகன் படையைத் தாக்கினான். "கோவிந்தன் வாழ்க" என்று கூறி கோவிந்தராசன் படைத்தலைவன், சிங்கநாதன் அவனை எதிர்த்தான். சிங்கநாதன் பூரண சேனனை வெட்டிக்கொன்றான். "நந்தட்டன் வாழ்க" என்று கூறி அவன் வீரன், கட்டியங்காரனுடைய வீரனோடு பொருதான். கட்டியங்காரன் வீரன், நந்தட்டன் வீரனால் வீரசுவர்க்கம் அடைந்தான். சீவகனுடைய தோழனான சலதிதி என்னும் வீரன் "சீவகன் பாதம்

வாழ்க” என்று கூறிக் கட்டியங்காரன் யானைப் படையோடு போர் செய்தான். சலதிதியின் வீரத்தைக் கண்டு அஞ்சி, யானைக் குழாத்துடன் பகைவர் ஓடினர். “இனி, நமக்குப் போர் இல்லை” என்று கூறிச் சலதிதி திரும்பினன்.

பல குதிரைகள் பூட்டப் பெற்ற தேரில் இருந்து சீவகன் போர் செய்தான். சீவகனுக்கு உதவியாக, ஆயிரக்கணக்கான வீரர்கள் ஆயுதங்களுடன் நின்று பகைவரைத் தாக்கினர். கட்டியங்காரனும் அவன் பிள்ளைகளும் பல ஆயிரம் வீரர்களுடன் எதிர்த்து நின்று தாக்கினர். இருவர் படைகளிலும் அளவில்லாத வீரர்கள் மாண்டனர். யானைகளும் குதிரைகளும் மாய்ந்தன. அம்புகள் எல்லாப் பக்கங்களிலும் மொய்த்தன. தேவாசுர யுத்தமோ, ராமாயண யுத்தமோ, பாரத யுத்தமோ என்று கூறி யாவரும் திகைத்தனர். அழகையும் அழகின்மையையும் எடுத்துக் காட்டும் கண்ணாடிபோல் வீரர்களது ஆண்மையையும் ஆண்மையின்மையையும் காட்டும் கண்ணாடியாகிய போர்க்களத்தில் கட்டியங்காரன் வீரர் அஞ்சி ஓடினர்; சீவகன் அம்புகளுக்கு அஞ்சி ஓடி ஒளிந்தனர். கட்டியங்காரனுடைய மந்திரி அரிச்சந்தன் ஓடுபவரை நோக்கி, “வீரர்களே, ஓடாதீர்கள். மகளிரிடத்தல்லாமல் போரிலும் நீர் ஆடவராகவேண்டும். வீரர் இவ்வாறு ஓடினால் ஆண்மை என்பது யாரிடம் உள்ளது? கலைமான் தன் கொம்பு ஆடிய காலத்தில் அதை அசைத்து நழுவவிடுதல் போல், நீங்களும் உடம்பைக் காக்கும் விருப்பத்தை கைவிட்டு உறுதியுடன் போர் செய்வீராக! வீராயுள்ளவர்கள் தம்மை நம்பிய தலைவனுக்காகப் போரில் பொருது புகழைப் பரப்பப்

பொன்னுலகு சேர்வர்; புலவர்களால் பாமாலை சூட்டப் பெறுவர்; அவர்கள் புகழ் என்றும் அழியாதபடி, கல் நாட்டப்பெறுவர். ஆதலால் நீங்களும், அவற்றைப் பெறுவீர்கள்; உறுதியுடன் போர் செய்யுங்கள்" என்றான். அவன் வார்த்தைகளைக் கேட்ட வீரர் ஊக்கம்கொண்டு சீவகன் சேனையுடன் போர் செய்தனர். வேந்தர் கிரீடங்கள் சிதறின; குடைகள் கவிழ்ந்தன; கேடயங்கள் பிளவுபட்டன; வாளும், வேலும் முறிபட்டுச் சிதறின; வீரசுவர்க்கம் புக்கனர் வீரர்கள். பேய்க் கூட்டங்கள் ஆடின; நரிகள் பிணங்களை உண்டு ஊளை யிட்டன; யானைகளும் குதிரைகளும் அங்கங்கள் முறிந்து வீழ்ந்தன; சீவகனுடைய கண்கள் சிவந்தன. புருவங்கள் வில்லைப்போல் வளைந்தன; அவன் கை வில் பிறைச் சந்திரனைப்போல் வளைந்தது.

**போர்**க்களமாகிய பொய்கையில் கட்டியங்காரன் பதும வியூகம் வகுத்து நின்றான். வாட்படைகள் தாமரை யின் புற இதழ்கள்போன்று இருந்தன. அதைச் சுற்றிய யானைகள், புல்லிதழ்களைப் போன்று இருந்தன. அதைச் சுற்றிய அரசர்கள் சிறிய இதழ்களைப் போன்று இருந்தனர். அதைச் சுற்றிய கட்டியங்காரன் பிள்ளைகள் அக இதழ்களைப் போன்று விளங்கினர். கட்டியங்காரன், நடுவில் இருக்கும் தாமரைக் கொட்டையைப் போன்று நின்றான். தாமரை வியூகத்தை நெருங்குகின்ற சீவகன், பவித்ரமான வண்டைப் போன்று விளங்கினான். வியூகத்தின் புறத்தில் இருக்கும் சேனைகளைக் கொன்று குவித்தான். பின்னர், வியூகத்தின் ஒவ்வொரு வரிசையை யும் பிளந்து அழித்தான். அம்புகளைப் பொழிந்து சா கூடம் செய்தான். பதும வியூகம் சிதறி அழிந்தது.

கட்டியங்காரனுடைய பிள்ளைகள் நூற்றுவரும் அழிந்தனர். தனியாக நின்ற கட்டியங்காரன் சீவகனைப் பார்த்துக் கோபமுடன் கூறலானான்:

"சீவக, நல்வினை செய்தவர், விஷத்தை உண்டாலும் அது அமுதமாகி விடும். தீவினை செய்தவர் அமுதத்தை உண்டாலும் விஷம்போல் கொன்றுவிடும். ஆதலால் அறிவுடையவர் 'இவன் என்னைக் கொல்லுவன்' என்றும் 'இவனை யான் கொல்லுவேன்' என்றும் நினையார். அது விதியின் செயலன்றி உன் செயல் அன்று. உன் கையில் அகப்படும் தீவினையாளரைக் காப்பவர் யார்?

"தீவினை செய்தவரைக் கொல்லுகின்ற நல்வினையுடையவரை அழிக்க வல்லவர் யார்? உன் கையால் என் பிள்ளைகள் நூற்றுவரும் இறந்தனர். அதனால் சூரியனும் மாறுபட்டுக் குளிர்ச்சியடைவான் போலும்! நீ அவரைக் கொன்றமையால், சந்திரனும் தன் நிலை கெட்டு வெம்மை அடைவான் போலும். நெய்யும் திரியும் கெட்டபோதே விளக்கு அவிந்துவிடும். அது போல நல்வினை முடிந்தால் செல்வமும் அழியும்; அதைப் பிடித்து வைத்துக்கொள்ள முடியாது" என்றான்.

கட்டியங்காரன் மொழியைக் கேட்டு, சீவகன் வியப்படைந்தான். 'கட்டியங்காரன், மிகவும் தாழ்ந்து பேசுகிறான். இவ்வாறு பேசுகையில் எப்படிக் கொல்வது' என்று ஆலோசித்தான் சீவகன். உடனே, அவனுக்குக் கோபம் உண்டாகும்படிச் சிரித்து, "கட்டியங்கார, நீ மிகவும் போருக்குப் பயந்தவன்; இவ்வாறு அஞ்சலாமா?" என்றான். கட்டியங்காரன் அம் மொழியைக் கேட்டுக் கடுங்கோபம் கொண்டான்; "சீவக, வெற்றி

கிடைப்பது விதியின் செயல்; அது யான் கூறேன். உன் கையிலுள்ள வேல் என்மீது வந்தபோது, யான் அஞ்சிக் கண் இமைத்தால் நீ அஞ்சினாய் என்று கூறிச் சிரிப்பாயாக. யான் அவ்வாறு வீரம் இழந்தால், மனைவிக்கு அஞ்சி விருந்தினரை உபசரிக்காத அற்பனாவேன்'' என்று கூறிக் கையில் வில்லையும் அம்பையும் எடுத்தான். உடனே சீவகன் மகிழ்ந்து, அம்பை எய்து, கட்டியங்காரன் எடுத்த வில்லையும் அம்பையும் அறுத்து வீழ்த்தினான். கட்டியங்காரன் கோபத்துடன் சீவகன் தேர்மீது பாய்ந்தான். அவன் பாய்ந்தவுடன், சீவகன் அம்பு அவன் மார்பில் பாய்ந்து உயிரை உண்டது. சூரியனுக்குமுன், ஒளி கெட்டுச் சந்திரன் வீழ்வது போல் பார்ப்பவர் அஞ்சும்படி கண் விழித்து, வாய் மடித்துக் கட்டியங்காரன் சீவகன் முன்னர் வீழ்ந்தான். "கட்டியங்காரன் என்னும் கலியரசு மடிந்தது" என்று யாவரும் ஆரவாரித்தனர். 'இனிப் போர்த் தொழில் ஒழிக' என்று வெற்றி முரசு கொட்டினர். வீரர்கள் ஜயகோஷம் செய்தனர். அரசர்களும் வீரர்களும் சூழ்ந்து சீவகனை வாழ்த்தினர். நூற்றுக் கணக்கான விளக்குகள் விளங்கின. நகர மக்கள் உவகையால் ஆர்த்தனர். சீவகன் கட்டியங்காரனுடைய புதல்வரை முதலில் கொன்று, பின்னர் அவனைக் கொன்ற முறைமையைக் கேட்டு விசயை மனமகிழ்ந்தாள். அரசர்கள், போர்க்களப் பாவம் நீங்கும்படி, சீவகனுக்கு நீராட்டி மலர் தூவினர்.

*

அரசர்கள் சூழ இராசமாபுரத்து அரண்மனையில் சீவகன் புகுந்தான். வீரர்கள் உள்ளே சென்று கட்டி

யங்காரனுடைய மனைவியரை வெளியேற்றினர். அவர்கள் கண்ணீர் பெருக, வெறு நிலத்தில் நடந்து சென்றனர். "கட்டியங்காரனுடைய பட்டத்துத் தேவி யார்?" என்றான் சீவகன். "கட்டியங்காரனும் அவன் பிள்ளைகளும் இறந்ததைக் கேட்டு அவள் இறந்தாள்" என்று அருகிலிருந்தவர்கள் கூறினர். கட்டியங்காரன் மனைவியாருக்கு அவன் அளித்த சீவிதங்களைத் தானும் அளித்து அவர்கள் விருப்பப்படி அவரவர் மாளிகையில் சென்று வாழும்படி கட்டளையிட்டான். அவர்கள் தம் மாளிகைகளுக்குச் சென்று வாழ்ந்தனர். வீரர்களைக் கொண்டு பொன்னறை முதலியவற்றைச் சோதித்துக் காவல் அமைத்தான். அரசரும் மக்களும் புகழும்படிப் போர்க்கோலத்தை நீக்கி, புதிய ஆடைகளை அணிந்து கோவிந்தராசனையும் தாயையும் வணங்கினான். போரில் புண்பட்ட வீரர்கள் புண்ணைக் காத்துக்கொள்க என்று கூறிக் கோவிந்தராசனும் அவனும் இளைப்பாறச் சென்றனர். புண்பட்ட வீரர்களும் இளைப்பாறியிருந்தனர்.

## 25

# சீவகன மகுடாபிஷேகம்

பூவணையில் அமர்ந்த சிங்கம் போல் சீவகன் வீற்றிருந்தான். அவனைச் சுற்றிலும் அரசர்கள் அமர்ந்திருந்தனர். கோவிந்தனும், நந்தட்டனும், சீவகன் அருகில் இருந்தனர். தோழரும் நந்தட்டன், நபுலன், விபுலன் என்பவரும் ஒருபுறம் அமர்ந்திருந்தனர். சுதஞ்சணன் தன் மனைவியருடன் சீவகனுக்கு முன்பு

அமர்ந்திருந்தான். வேதண்ட மலையிலிருந்து வித்தியா தரர்கள் யாவரும் வந்து ஒருபுறம் இருந்தனர். மண்டபத்தின் வெளிப் புறத்தில் நகரமக்கள் கூடியிருந்தனர். எல்லோரும் ஒருங்கே எழுந்து, "சீவகசாமிக்கு முடி சூட்டுக" என்று கூறி ஆரவாரம் செய்தனர். உடனே மந்திரியர் புரோகிதரையும், மங்கலப் பாடகரையும் அழைத்து அதற்கு வேண்டியவற்றைச் செய்தனர்.

சுதஞ்சணன் தன் மனைவியருடன் எழுந்து புண்ணிய தீர்த்தங்கள் நிறைந்த நூற்றெட்டுக் குடங்களால் சீவகனை நீராட்டினான். பொன் மழையும் பூ மழையும் சொரிந்தான். நவமணிகள் பதித்த மகுடத்தைச் சீவகனுக்குச் சூட்டினான். மகளிரும் மன்னரும் வாழ்த்தி வணங்கினர். மங்கலப்பாடகர் மங்கலம் பாடி வாழ்த்தினர். ஏத்தாளிகள் புகழ்ந்து ஏத்தினர். அஷ்டவாத்தியங்களும் ஆர்த்தன. சீவகன், வெண் கொற்றக் குடை நிழலில் நடந்து சென்று சித்திர மண்டபத்தில் புகுந்து சிங்காதனத்தில் வீற்றிருந்தான். தன் மகன் அரசிளங் குமரனாய் அரசு கட்டிலில் ஏறி அமர்ந்த காட்சியைக் கண்டு களித்தாள் விசயை. சுநந்தையும் கந்துக்கடனும் உள்ளம் குளிர்ந்தனர். தோழர்கள் களிப்பால் உடல் பூரித்தனர். அப்போது சுதஞ்சணன், சீவகனிடம் விடை பெற்றுச் சென்றான்.

"நாம், பதினாறு வருஷங்கள், நாட்டைக் காக்காமல் இருந்தோம். அதனால், சிறைச்சாலைகளை இடிப்பித்து, சிறைப்பட்டவர்களை விடுதலை செய்க" என்று நந்தட்டனுக்குக் கட்டளையிட்டான். பின்னர், மந்திரியரை நோக்கிக் கூறினான்:

"தருமத்திற்காக விட்ட நிலங்களை, முன்பு போலவே தருமநிலங்களாக விடுங்கள். மற்றத் தருமங் களையும் குறைவில்லாமல் நடத்தச் செய்யுங்கள்" என்று ஏவினான். அவர்கள், சென்று ஆவனவற்றைச் செய் தனர்.

முரசறைபவன், யானைமீது முரசை வைத்து வீதி வழியே சென்று, "பசியும், நோயும் பகையும் நீங்குக. இன்றுள்ள நீங்கள் என்றும் இன்பமுடன் வாழ்வீராக. அரசன் இந் நாட்டில் பதினாறு வருஷங்களுக்குக் கடமை கொள்ளான். கண் கெட்டவர், பிணியுடையோர், அங்கம் குறைந்தவர் முதலியோருக்கு வீடு முதலியன கொடுப் பான். வருத்தமின்றி வாழ்க" என்று கூறி முரசு கொட்டிச் சென்றான்.

* * * *

தான் மணம் செய்த மனைவியரை அழைத்து வரு மாறு சீவகன் சிலரை ஏவினான். அவர்கள் சென்று அம் மகளிரை அழைத்து வந்தனர். சிவிகைகளினின்றும் அம் மகளிர் இறங்கி, மாடத்தின் உள்ளே புகுந்து சீவகனை வணங்கினர். சீவகன் அவர்களைத் தழுவி அருகில் இருக்கச் செய்தான். கோவிந்தராசன், தன் மகள் இலக் கணையை சீவகனுக்கு விதிப்படி மணம் புரிவிக்க எண்ணி அச் செய்தியை நகர மக்களுக்கு அறிவிக்கச் செய்தான்.

முரசறைவார் சென்று, "நகர் வாழ்க; அரசன் கூறிய மொழியைக் கேட்பீராக. நம் மன்னன், சீவக சாமிக்கும் இலக்கணைக்கும் மணம் செய்யும் ஏழு நாட் களிலும் நகரமெங்கும் அலங்காரம் செய்க. பாலன்னம் உண்டு பட்டாடை அணிக. மாலைகளைத் தொங்க விடுக. அரங்குதோறும் ஆடலையும் பாடலையும் செய்க" என்று கூறி, முரசறைவித்தான்.

இராசமாபுரம் முழுவதும் அலங்கரிக்கப்பெற்றது. யாழின் ஒலியும் குழலின் ஒலியும் எங்கும் நிறைந்தன. முரசமும் சங்கமும் முழங்கின. ஆடவரும் மகளிரும் பாலன்னம் உண்டு பட்டாடை அணிந்து மனம் மகிழ்ந்தனர். வீதிதோறும் விளக்குகள் விளங்கின. வாசனைப் புகைகள் கமழ்ந்தன.

சோதிடன் கூறிய நன்முகூர்த்தத்தில் சிவகனையும் இலக்கணையையும் மங்கலநீரால் மூழ்குவித்தனர். இருவரும் புதிய ஆடைகள் அணிந்து மணப்பந்தரில் அமர்ந்தனர். மங்கையர் கவரிவீசிப் பனிநீர் தெளித்தனர். அஷ்டமங்கலங்களையும் ஏந்தி நின்று வாழ்த்துக் கூறினர். சிவகனுக்கும் இலக்கணைக்கும் மணம் நிகழ்ந்தது. மணமக்கள் இருவரும் மனம் ஒத்து மகிழ்ந்திருந்தனர்.

* * * *

ஒரு நாள் சிவகனும் இலக்கணையும் அளவளாவியிருந்தபோது இலக்கணை, சிறிது ஊடல் கொண்டாள். அங்கே உலவிய வண்டுகளைப் பார்த்து, "நங்கையின் ஊடலை நீங்கள் நீக்குவீராக" என்று கூறிச் சிவகன் நகைத்தான். ஊடல் நீங்காமையைக் கண்டு சிவகன் இரந்து நின்றான்; அருகில் கூட்டில் அடைபட்டு இருந்த நாகணவாய்ப் பறவையும், கிளியும் சிவகனுக்காக, மனம் வருந்தின. கூட்டின் வாயிலே முகத்தை வைத்துப் பார்த்து, "நம் சேவல், நம்மை ஊடல் தீர்த்தற்கு இவ்வாறு இரந்து கூறினால், இது தகாதென்று கூறி யாம் மனம் உருகி இறப்போம்; இவ்வாறு சிவகன் வேண்டியும் ஊடல் தணியாத இலக்கணையின் மனம், கல்லோ, இரும்போ?" என்று கூறிக்கொண்டன. அப்போது, கிளி, இலக்கணையை நோக்கி, "நங்காய், சிவகன் சிறிதும்

குற்றம் செய்திலன். நீ அவனுக்கு இன்பம் அளிப்பாயாக" என்றது. அதைக் கேட்ட நாகணவாய்ப் பறவை, கிளியை நோக்கி, "பேதாய், இலக்கணை கொடுக்கும் சோற்றை உண்டு நாம் கூட்டில் வருந்தியிருக்கிறோம். இத்தன்மையை உடைய நாம் புத்தி சொன்னால், இலக்கணை, மூன்று நாட்கள் நமக்குச் சோறு காட்டாள்; ஆதலால், கிளியாரே, தம் வாயைப் பொத்திக் கொள்ளும்" என்று கூறியது. அதைக் கேட்டு, கிளி, கோபம் அடைந்தது.

"சீவகன் வருத்தத்தைக் கண்டு யான் உயிர் வாழேன்; நான்றுகொண்டு சாவேன்" என்று கூறி நூலால் தன் கழுத்தைச் சுற்றிக்கொண்டது. கிளியின் கோபத்தைக் கண்டு இலக்கணை விடாமல் நகைத்தாள். இலக்கணைக்கு உடல் தளிர்த்ததைக் கண்டு அவளைத் தழுவி மகிழ்ந்தான் சீவகன். இலக்கணையோடு இன்பமுடன் பொழுது போக்கி யிருந்தான். ஆறு நாட்கள் கழிந்தன.

ஏழாம் நாள் காலையில், சீவகன், நகர்வலம் செய்து அருகனை வணங்கி வருவதற்குப் புறப்பட்டான். குணாமணி என்னும் தன் பட்டத்து யானையின்மேல் ஏறிக்கொண்டான். நால்வகைப் படைகளுடன் தோழர்களும் அவன் பின் சென்றனர். முன்பு சக்கைந மகன் என்று கூறப்பட்டவன் இப்போது அரசிளங் குமாரனாய், கவரி வீச சங்கு முழங்க, முரசம் ஆர்ப்ப, படை வெள்ளத்துடன் ராஜவீதியிலே ஊர்வலம் செய்தான். "சச்சந்தன் மகன் வாழ்க" என்று வாயார வாழ்த்தினர் யாவரும். சீவகனைப் பார்த்தற்குக் கூட்டம் கூட்டமாய் மாந்தரும் மகளிரும் சூழ்ந்தனர். "உப்பும் உலகும் உள்ள அளவும்

வாழ்க" என்றனர். மாடங்களிலிருந்து வாசனைப் பொடிகளைத் தூவினர். பூமாலைகளை வீசினர். சந்தனத்தையும் பனிநீரையும் தெளித்தனர். பூம்பந்துகளை எறிந்தனர். மெய்ம்மறந்து யாவரும் ஆர்த்துச் சென்றனர். மக்களிடத்துள்ள அன்பு மிகுதியால் எல்லாவற்றையும் பொறுத்துப் புன்னகையுடன் சென்றான் சிவகன்.

"ஐயன் முருகனே" என்றனர். "காமனே மீண்டும் பிறந்தான்" என்றனர். "ஐயனைக் காணப் பாக்கியம் பெற்றோம்" என்றனர். "ஐயனுக்கு அமைந்த மனைவியர் பெரும் பாக்கியம் செய்தனர்" என்றனர். "விசயை, ஐயனைப் பெறுதற்கு எத்தவம் செய்தனளோ"! என்றனர். "இல்லை, சுநந்தையே தவம் செய்தவள்" என்றனர். "சுடுகாட்டில் பிறந்து, வணிகன் வீட்டில் வளர்ந்த இவன் அரசர் வணங்கப் போகின்றமையைப் பார்த்தால், அறிவுடையோர் தவம் செய்யாதிருப்பது என்ன காரணம்?" என்றனர். "ஒருவனுக்கு நல்வினையில்லையேல், அவன் கடலையும், மலைகளையும் கடந்து வருந்தினும் பொருள் சேராது" என்றனர். "நல்வினை, உடையவர் ஒரு முழுதூரம் நடக்க வலி இல்லாதவராயினும் பொருள் தானே, வழிகேட்டு அவரைச் சேரும்" என்றனர். "தவம் இருந்தால் விஷத்தைக் குடித்தாலும் தீங்கில்லை. தவம் இல்லையாயின் அஞ்சி மறைந்தாலும் காப்பு இல்லை" என்றனர். "தவம் உடையவர் யானைக் கொம்பில் அகப்பட்டாலும் பிழைப்பர்" என்றனர். "தவம் உடையார்க்குத் துன்பம் வந்தால், தருமம் அதை அகற்றும்; ஆதலால், துன்பத்திற்குத் தவமுடையார் அஞ்சார்" என்றனர். இவ்வாறு மகளிரும் மாந்தரும் கூறிச் சிவகனை வாழ்த்தினர். பூக்களைத் தூவிப் புகழ்ந்தனர்.

சீவகன் புன்னையுடன், நகரை வலம் செய்து சென்று சோலையில் போய்த் தங்கினான். படைகளையும் மற்றப் பரிவாரங்களையும் சோலையில் நிறுத்திவிட்டு, அரசருடனும் தோழருடன் அருகன் கோயிலுக்குச் சென்றான். கோயில் கதவுகள் திறக்கப்பெற்றன. அகிற் புகையின் மணம் எங்கும் பரவியது. ரத்தின தீபங்கள் எங்கும் விளங்கின. சீவகன் கோயிலை வலம் வந்து உள்ளே சென்று அருகனை வணங்கித் துதித்தான். பின்னர், அருகனுக்கு விளக்குக்காக, நூறு ஊர்களையும், பூசனைக்காக நான்கு கோடி பொன்னையும், நூறு யானைகளையும், நூறு தேர்களையும் கொடுத்தான். அருகனுடைய அலங்காரத்திற்கு, வாடாத மாலை, மணிமாலை, பொன் மாலை, முத்து மாலை, சந்தன மாலை, பவள மாலை என்னும் இவற்றையும் அளித்தான். பின்பு சோலை சென்று படைகளுடன் அரண்மனை புகுந்தான்.

* * * *

சித்திர மண்டபத்தில் சிங்காதனத்தில் சீவகன் வீற்றிருந்தான். வீரமகளையும் திருமகளையும் பெற்று, காமகன் புகழ்கூறப் பூமகளுக்குக் காவலனாய் விளங்கினான். சபை நிரம்பியிருந்தது. பொன்னுலகத்து இந்திரசபைபோல் தோன்றியது சித்திரமண்டபம்.

தனக்கு உதவி செய்த எல்லாருக்கும் சீவகன் சிறப்புச் செய்ய நினைத்தான். கந்துக்கடனுக்கு அரசுரிமையையும் ஒரு நாட்டையும் அளித்தான். 'தன்னை வருந்தி வளர்த்த சுநந்தைக்குத் தேவி என்னும் பட்டத்தைத் தந்தான். மன்னவர் யாவரும் இளவுடையான் என்று கூறும்படி நந்தட்டனை இளவரசாக்கினான். நபுலனுக்கும் விபுலனுக்கும், குறுநில மன்னராது மகளிரையும்

சில ஊர்களையும் அளித்தான். பதுமுகன் முதலிய தோழர்க்குப் பழைய அரசையும், சேனுபதிப் பட்டத்தையும் அதற்குரிய ஏனுதி மோதிரத்தையும் தந்தான். பொற்பட்டம், மாலை, நிதி முதலியவற்றையும் அளித்து மகிழ்வித்தான். தனக்காக உழைத்த வீரர்களுக்கு அமைச்சரைக்கொண்டு நிதிகளை வழங்கினுன். தன்னுடைய செவிலித்தாயருக்கு ஐந்து ஊர்களைக் கொடுத்தான். மைத்துன மன்னர்களாகிய விசயன் முதலியவர்க்கு நிதிகளை அளித்தான். தன் மாமனுகிய கோவிந்தராசனுக்குக் கட்டியங்காரனுடைய பொருள்களையெல்லாம் தந்தான். மன்னர்களுக்குத் தக்கவாறு பொன்னை அளித்தான். தன் பெருந் துன்பங்களை நீக்கிக் காத்த சுதஞ்சணன் வடிவைப் பொன்னுல் செய்து, புதியதாக இயற்றிய கோயிலில் அவன் வடிவைப் பிரதிஷ்டை செய்தான். சுதஞ்சணன் பிரதிமைக்குப் பூசனைக்காக ஓர் ஊரையும் இறையிலியாகக் (வரியில்லாத இடம்) கொடுத்தான். சுதஞ்சணன் சரிதத்தை ஒரு நாடகமாகச் செய்து திருவிழாக் காலங்களில் நடத்தும்படி செய்தான். தான் சிறு வயதில் விளையாடியிருந்த ஓர் ஆலமரத்திற்குப் பீடம் செய்வித்து மாலைகளை அணிவித்தான். அம்மரத்தின் நிழலில் பசுக்கள் மேய்ந்த பின் தங்கும்படி ஐந்து ஊர்களை இறையிலியாக விட்டான். காந்தருவதத்தை முதலிய மனைவியர் எண்மருக்கும் தேவிப்பட்டம் தந்தான்.

சீவகன் அரசாட்சியில் நாடு செழிப்புற்றது. தருமம் தழைத்து ஓங்கியது. மாந்தரும் மகளிரும் மனக்குறையின்றி மகிழ்வுடன் வாழ்ந்தனர்.

* * * *

தன்னைச் சார்ந்தவர்களுக்கெல்லாம் சிறப்புச் செய்தோம் என்று எண்ணியிருந்த சீவகன், பல்லவ தேசத்தில் சந்திராப நகரில் சண்பகச் சோலையில் நடனம் செய்த தேசிகப் பாவையை 'மறந்தோமே' என்று எண்ணியிருந்தான்.

தன்னைச் சீவகன் மறந்து விட்டான், என்று எண்ணிய தேசிகப்பாவை, அநங்கமாலையின் தோழியாகத் தன்னைக் கூறிக் கொண்டு போர்வையால் மறைத்துக் கொண்டு அரண்மனை வாசலை அப்போது அடைந்தாள். வாயில் காவலனை நோக்கி, "அனங்கமாலையின் தோழி, ஓலை கொண்டு வந்திருக்கிறாள் என்று அரசனிடம் சொல்" என்றாள் அவள். அரசனிடம் சென்று அவன் தெரிவித்தான். வந்தவள் தேசிகப்பாவையே என்று எண்ணிய சீவகன் அவளை அழைத்துவரச் செய்தான்.

போர்வையால் மறைத்த வடிவத்துடன் தேசிகப் பாவை சென்று, சீவகனை வணங்கி ஓர் ஓலையை நீட்டினாள். சீவகன் அதை வாங்கிப் படிக்கலானான்: "அனங்கமாலை வணக்கத்தை அரசன் ஏற்றுக்கொள்க. கட்டியங்காரன் என்னைச் சிறை வைத்தபின் யான் தம்மையே கூறி ஆற்றினேன். அவன் என்னைப் போக விட்டான். யான் சேரியில் சென்று தம்மையே நினைந்திருந்தேன். எம் கண்கள் 'உறங்காவாய் நீரைப் பெருக்குகின்றன; கைவளைகள் கழன்றன. இவ்வாறு யான் வருந்துவதற்கு, நம்முடைய நிழலில் இல்லாத அயலிடத்தேன் அல்லேன் ஆதலால், அரசனே, இவ்வோலை கொண்டுவரும் என் தோழி வாமலேகை வருந்தாமல் மறுமொழி கூறி விடுத்தருள்க."

அனங்கமாலையிடத்துக் காதல்கொண் டிருப்பா னென்று கருதித் தேசிகப்பாவையே இவ்வாறு வருந்தி எழுதித் தோழியாக நடிக்கின்றாள் என்று அறிந்தான் சீவகன். உடனே அவள் திறமையைப் பாராட்டிக் கூறிப் பாடச்செய்து கேட்டு மகிழ்ந்து தழுவினான். அப் போது அவள், "அனங்கமாலையின் தோழியாகிய என்னை இவ்வாறு செய்வது என்ன காரணம்?" என்று கூறி நகைத்தாள். "தேசிகப்பாவை, யான், செல்வத்தால் மயங்கி, உன்னை மறந்தேன் என்று இவ்வாறு கூறுகிறாய். அவ்வாறு யான் மறப்பேனோ? சொன்ன சொல் தவறு வேனோ? இப்போதும் உன் நடனத் திறமையை யான் காண வேண்டும்" என்றான் சீவகன். தேசிகப் பாவை அவனை வணங்கி, சிறிது நடனம் ஆடி அவனை மகிழ்வித் தாள். சீவகன் அவளுக்குச் சிறப்புச் செய்து தன்னோடு இருக்கச் செய்தான்.

## 26

# விசயமாதேவியார் துறவு

மனைவியர் எண்மருடன் மனம் மகிழ்ந்து வாழ்ந் திருந்தான் சீவகன். குடிமக்கள் குறைவின்றி அரசன் ஆணைக்கு அடங்கி வாழ்ந்தனர். நாள்தோறும் பல தருமங்களைச் செய்து வந்தமையால் தருமக் கடவுள் என்று சீவகன் புகழ் பெற்றான். இரவலர்க்கு இல்லை என்று கூறாமல் தியாகமுரசு முழங்கப் பொன்னை அளித்துப் புகழுற்றான். எல்லாவற்றிற்கும் மேலாக அருகதேவனுக்குப் பெருங்கோயில் ஒன்றை எழுப் பிக்க வேண்டும் என்று எண்ணினான்.

அரண்மனையின் புறத்தில் உள்ள அசோக வனத்தின் நடுவில் அருகதேவனுக்கு அழகுமிக்க கோயிலை எடுப்பித்தான். கோயிலுக்கு நிலங்கள் பல வற்றைத் தருமமாக விட்டான். திருவிழா முதலிய வற்றைச் செய்து சிறப்பித்தான்.

சீவகன் தாயாகிய விசயமாதேவியார், தனக்குத் துன்பம் வந்த காலத்துத் துணை செய்தவர்க்கு நன்றி பாராட்டிச் சிறப்பிக்க எண்ணினாள். தாபதப்பள்ளியி லிருந்து தனக்கு உதவியாக உடன்வந்த தவமகளிர்க்கு பழம், கிழங்கு, காய் முதலியவற்றை அளித்து உபசரித் தாள். தவமகளிர், பொருளாசை இல்லாதவர் என்பதை உணர்ந்து அருகனுக்குச் செய்த பூசனையின் பயனை அம் மகளிர்க்கு நீர்பெய்து கொடுத்தாள். மயானத்திலிருந்து தன்னைக் காத்துத் தாபதப்பள்ளியில் சேர்த்த தெய்வத் திற்கு அம்மயானத்தில் கோயில் கட்டுவித்துப் பூசனை நடக்குமாறு நிலங்களையும் கொடுப்பித்தாள். சுடுகாட்டில் மெள்ளப்பறந்து மெள்ள வீழ்ந்த மயிற்பொறியைத் தான் எப்பொழுதும் கண்களால் பார்த்திருக்குமாறு தன் மாளிகையில் அதன் வடிவத்தை எழுதுவித்தாள். சீவகன் பிறந்த இடத்தைச் சுடுகாடாகக் கிடவாதபடி அழித்துப் புதுப்பித்துச் சாலையாக்கினாள். அந்தச் சாலையில் சீவகனுக்கும் அவன் தோழருக்குமாக ஐந்நூற் றுப்பிறந்த பிள்ளைகளுக்கு நாள்தோறும் அன்னம் அளித்து வரச் செய்தாள். விசயை கட்டளையிட்ட தருமங்களை யெல்லாம் கந்தகோனாகிய கோவிந்தன் குறைவாச் செய்து வந்தான்.

கந்துக்கடன் மனைவியாகிய சுநந்தை விசயையைக் காண்பதற்கு அவள் மாளிகைக்குச் சென்றாள். விசயை

யைக் கண்டு வணங்கி நின்றாள். விசயை அன்புடன் அவளைத் தழுவி உபசரித்து அனுப்பினாள். பின்னர், சீவகன் மனைவியர் எண்மரும் அடைந்து விசயையின் பாதங்களை வணங்கினர். "நங்கையரே, உலகாளும் சிறுவரைப் பெற்று மகிழ்ந்து இறைவனை அறிவீராக. நீங்கள் எண்மரும், யான் கண்ட கனவில் ஒரு முடியில் எட்டுப் பூமாலைகளாய்த் தோன்றினீர். நீங்கள் எவ்விடத்தும் என்னைப் பிரியாமல் தங்குவீராக" என்று கூறித் தழுவி உபசரித்தாள். பின்னர், சீவகனை வருமாறு அழைத்தாள். சீவகன் விரைந்து வந்து விசயையின் பாதங்களை வணங்கி, அங்கிருந்த ஆசனத்தில் அமர்ந்

"சீவக, உன் தந்தைக்கு வந்த துன்பத்தைப் பிறர் கூற நீ அறிந்தாயாயினும் யான் சொல்லவும் கேட்பாயாக" என்று நடந்தவாறு மொழிந்தாள். அதைக் கேட்டுச் சீவகன் மனம் பொருமிப் பின் ஆறுதலுற்றான். மீண்டும் சீவகனை நோக்கி, "குமர, காமத்தால் உண்டாகும் தீமையை உணர்ந்து அதனைக் காப்பாற்றிக் கொள். இனி யான் துறத்தற்குப் போவேன்" என்று கூறினாள்.

அதைக் கேட்டதும் சீவகன் மயங்கி வீழ்ந்தான். உடனிருந்த மகளிர் பனி நீர் முதலியவற்றைத் தெளித்து மூர்ச்சை தெளிவித்தனர். சீவகன் சோர்வுடன் எழுந்து வணங்கி, "தாயே, முன்பு, தாங்கள் எனக்குக் கூறியது என்ன? அதை இப்பொழுது கூற வேண்டும்" என்றான்.

"சீவக, நாம், வாழ்வோம் என்னும் ஆசையினுள் அழுந்துகின்றோம். அத்தன்மையையுடைய நாம், வாழ்நாளின் முடிவு, இவ்வளவு என்பதை அறியோம். யமன்

உயிரை உண்ணும்போது, 'ஐயோ, இப்பிறப்பினைத் தப்புதற்குத் தவம் செய்திலமே' என்று வருந்துவ தல்லது, வினைக் கழிந்த வாழ்நாட்களை மீட்கவல்லார் இல்லை. செய்தற்குரிய காலத்தில் தவத்தைச் செய்யாமல் உறவினரிடத்து அன்பு வைத்தல் குற்றம். காற்றால் அடிக்கப்பட்ட மேகக் கூட்டம்போல், தீவினையால் தாக்கப்பட்டு உறவினர் வெவ்வேறாய்ப் போய்த் தங்குவர், சேர்ந்து தங்கார். ஆதலால் நீயும் என்னிடத்து அன்பை நீக்குவாயாக'' என்றாள் விசயை. சீவகன் அதற்கு மறு மொழி கூறாமல் வருந்தி இருந்தான். மேலும், பொது வான தரும வார்த்தைகள் பலவற்றை விசயை கூற லானாள் :

"குமர, மகளிரைச் சேர்ந்து, இளமையாகிய கள்ளைப் பருகி முதுமை அடைவதன்முன் தவமும் தானமும் செய்யவேண்டும். உயிரைச் சோறாகவும், உணர்வை நெய்யாகவும் கூட்டி, வன்மையைத் துவையலாகச் சேர்த்து உயிரை உண்ணுகின்ற யமன் உடம்பை அழிப் பதற்குமுன் தானமும் தவமும் செய்து நற்குணத்தை அடைய வேண்டும். உயிராகிய அச்சையுடைய உடம் பாகிய தேருக்கு நாம், பாகர் போன்றவர்கள். உடம் பாகிய தேர் பழுதடைந்தால், புதியதொரு உயிராகிய அச்சைச் சொருகி அத்தேரைச் செலுத்த முடியாது. ஆதலால் அது செல்லும் அளவும் செலுத்திப் பின்னர் இழந்தவர் பலர். அவ்வாறல்லாமல், நடுவிலும் தீவினை யால் உண்டாகும் துன்பமாகிய சேறையுடைய ஆற்றில் அந்தத் தேர் அழுந்திவிடும். உயிராகிய அச்சு, முறி வதற்குமுன் உடம்பாகிய தேரால் பெறுதற்குரிய சீலத்தைப் பெற வேண்டும். பிறந்தவர்களெல்லாரும்

ஆசை மிக்கவராய்ப் புகழை விரும்பாதவராய், இரவலர்க்குக் கொடுக்காதவராய்த் தருமத்தின் தன்மையை அறியாதவராயின் அந்த ஆசை பயனற்றது. ஆதலால் ஆசையை அகற்றுங்கள். இனிய உணவை நாள்தோறும் உண்டவர்கள், தீவினையால், பின்னர் இரந்து உண்பார். அத்தன்மையை நாம் காண்கின்றோமாதலால் செல்வத்தை விரும்புதல் கூடாது. தவம் செய்தல் வேண்டும். அரசன் தேவியாக இருந்தவள், தீவினையால் பிச்சை வாங்கி உண்ணும் நிலையை அடைவாள். ஆதலால் செல்வத்தை விரும்ப வேண்டாம். தருமத்தையே விரும்புங்கள். வருந்துகின்ற இடையில் கிழிந்த ஆடையை ஒருபுறம் உடுத்து ஒருபுறத்தை ஒரு கையால் மறைத்து மேலே நோக்கி, ஒரு கையால் இலையை உருவி அதனை இடுவதற்கு மண்கலம் இல்லாமையால் 'ஐயோ, வினையே, என் செய்தாய்' என்று கூறி வருந்தும் மங்கையரைக் காண்கின்றோம். ஆதலால் செல்வத்தை விரும்பாதீர். அழகுள்ள மகளிர் விரும்பும்படி காமன்போல் நடந்தவர்கள் முதுமை எய்தி இருமலுடன், தண்டை ஊன்றி நிற்பர். ஆதலால் இளமை நிலையாது'' என்று கூறி முடித்தாள்.

விசயையின் அறிவுரையைக் கேட்ட சுநந்தை மகிழ்ந்து, ''ஐயனே, தேவி கருதியது நன்மையாயினும் ஆக, தீமையாயினும் ஆக, அதனை யானும் செய்யத் துணிந்தேன்'' என்று சீவகனிடம் கூறினாள். அம்மொழியைக் கேட்டுச் சீவகன் மனம் கலங்கினான். எரி தவழ்ந்த வெண்ணெய்க் குன்றுபோல் உள்ளம் உருகினான். மறுத்துக் கூற இயலாமல் வருந்தியிருந்தான்.

விசயமாதேவியும், சுநந்தையும் துறத்தற்குத் துணிந்து இரண்டு சிவிகைகளில் ஏறிக் கொண்டனர்.

அவர்களுடன் துறப்பதற்குத் துணிந்த ஆயிரம் மகளிரும் தத்தம் சிவிகைகளில் ஏறிச் சென்றனர். சீவகனும் அவன் மனைவியரும் அதைக் கண்டு கண்ணீர் சொரிந்து அழுதனர். விசயையின் துறவுக்கு ஆற்றாது நகர மக்கள் யாவரும் வருந்திப் புலம்பினர். பம்மை என்னும் தபசி, தாபத மகளிருக்குத் தருமோபதேசம் செய்கின்ற பள்ளிக்கு விசயை முதலியவர் சென்றனர். அங்கே சென்றதும் சிவிகைகளிலிருந்து யாவரும் இறங்கிப் பம்மையை அடி வணங்கினர்.

"அடிகளே, எம்மைப் பிறவிக்கடலிலிருந்து கரை யேற்றவேண்டும்" என்று விசயை கூறினாள். அதைக் கேட்ட பம்மை, விசயையின் மேன்மைத் தன்மைக்குத் துறவு பூணுதல் தகாது என்று மனம் இரங்கினாள்.

"நங்காய், தாமரையிடத்துத் தீயைப்போல் தவம் மிகக் கொடியது. ஆதலால் அதை உன்னால் மேற் கொள்ளுதல் முடியாது. ஐம்பொறியையும் வெல்ல வேண்டும். அவ்வாவற்ற இடத்தில் தானமாகிய விதையை விதைத்து அது முளைக்கும்படி எப்பொழுதும் சீலமாகிய நீரைப் பெய்ய வேண்டும். அவ்வாறு பெய்தால் அந்த உத்தரகுருவில் முளைத்துப் புகழை நன்று தேவர் இன்பத்தை அளிக்கும்" என்று பம்மை மொழிந்தாள்.

"அடிகளே, தருமோபதேசத்தைப் பின்பு கேட் டோம். இப்போது எமக்கு உறுதியாகத் துறவைத் தந்தருள வேண்டும்" என்றாள் விசயை.

பம்மை அதற்கு உடம்பட்டு அருகிலிருந்த தவமகளி ரிடம் துறவுக்கு ஆவனவற்றைச் செய்யும்படி ஏவினாள். உடனே அவர்கள் வேண்டியவற்றைச் செய்தனர். விசயை முதலிய யாவரும் தம்மீது அணிந்திருந்த

ஆபரணங்களைக் கழற்றி எறிந்தனர். மயிர் உகுத்தற்கு இருந்த மயில் கூட்டத்தைப் போன்று விளங்கினர் அவர்கள். பம்மையின் ஏவலால், அங்கிருந்த தவமகளிர் விசயை முதலியவரது தலைமயிரைப் பறித்தனர். மயிரை உகுத்த மயில்கள் போல் மகிழ்வுடன் இருந்தனர். விருப்பு வெறுப்பின்றி அருகனை நினைந்து அமர்ந்திருந்தனர். அவர்கள் யாவருக்கும் பம்மை தருமோபதேசம் செய்துகொண்டிருந்தாள்.

சீவகன் தன் மனைவியருடன் அங்கே சென்று விசையின் பாதங்களில் பூக்களைத் தூவி வணங்கி வாழ்த்தினான்.

"தாயே, இளமைப்பருவத்தில் உங்களைப் பார்த்து மகிழ்ந்திருப்பதற்கு யான் தவம் செய்யவில்லை. இனியேனும் எப்போதும் யான் கண்களால் பார்த்திருக்குமாறு இவ்விடமே தாங்கள் இருத்தல் வேண்டும்" என்று சீவகன் வேண்டினான். சீவகன் வார்த்தைகளுக்குச் செவி கொடாமலும் மறுமொழி கூறாமலும் இருந்தாள் விசயை. அத் தன்மையைக் கண்ட பம்மை சீவகனை நோக்கி, "அரசே, 'நீயும் எங்களால் அன்பு செய்யப் படுபவன் அல்லை. நாங்களும் உனக்கு உறவினரல்லோம்' என்றுதான் விசயை மறுமொழி சொல்லாமல் இருக்கின்றாள்" என்று கூறினாள். பம்மை கூறியதைக் கேட்ட மன்னனும் மனைவியரும் மனம் வருந்தி அழுதனர்.

"அடிகளே, யான் தேவிக்கு உறவுடையேன் அல்லேனாயினும் அவர் துறவைக் கண்டிருக்கும் விருப்பம் உடையேன்" என்று சீவகன் கூறினான். சீவகன் மொழிந்ததைக் கேட்டுத் தவமகளிரெல்லாரும் மனம் இரங்கினர். உடனே விசயையை நோக்கி, "தேவி, மறு

மொழி கொடுத்தலால் குற்றம் இல்லை. அரசனுடன் பேசுங்கள்" என்றனர். அதற்கு விசயையும் மனமிரங்கி, "குமர, நீ விரும்பியதையே யாரும் விரும்புவோம்" என்று கூறினள். விசயை அன்போடு கூறியதற்குச் சீவகனும் அவன் மனைவியரும் மகிழ்ந்தனர். அப்போது சீவகன் சுநந்தையின் தன்மைக்கு மனம் ஆற்றாமல், "சுநந்தையே, தேவி என்னிடத்து ஒன்றும் வருத்தமுற வில்லை. ஆதலால் துறந்தனர். என்னை வருந்தி வளர்த் தமையால் நீயே எனக்குத் தாய். இதற்குமுன் நீ எனக்குத் துன்பம் செய்யவில்லையாயினும் இப்போது கடுதுயர் செய்தாய். மிகவும் நீ கொடியை" என்று கூறினன். சீவகனுக்குள்ள அன்பைக்கண்டு சுநந்தையின் மனம் இளகியது. உடனே சீவகனைப் பார்த்து, "குமர, 'கணவனை இழந்த பின்பும் புதல்வனுடைய அரசை உவந்து வாழ்ந்திருந்தாள்' என்று இதற்குமுன் உலகம் கூறிய பழிமொழி நிகழ்ந்தேபோக, தேவி, இன்று துறக் கவும், யான் உன் அரசை உவந்து இருப்பேனாயின் எனக்குப் பிறக்கும் பழி என்றுதான் போவது? இதை நீயே அறிவாய்; ஆதலால் அரண்மனை சென்று வாழ்ந்து உலகத்தை இனிது காத்துவா" என்று கூறினள். சீவகன் சிறிது ஆறுதல் பெற்றான்.

பின்னர், விசயை நந்தட்டனை நோக்கி, "குமர, உன்னை யான் துறந்திலேன். நீ வருந்தி மனம் வெறுக்க வேண்டாம்; சீவகனுடன் இன்புற்றிரு" என்று கூறினள். அதற்கு மகிழ்ந்து, நந்தட்டன் விசயையை வணங்கினன்.

சீவகன் தாயார் இருவரையும் வணங்கி வாழ்த்தி னன். அவர்களைக் குறைவில்லாமல் காத்து வருதற்குப் பல தவமகளிரை உடனிருக்கச் செய்துவிட்டு நந்தட்ட

னுடன் அரண்மனைக்குச் சென்றான். மனைவியர் எண்மரும் தேவியர் இருவரையும் வணங்கி, ஆசிபெற்றுச் சிவிகைகளில் ஏறி அரண்மனையை அடைந்தனர்.

தவப்பள்ளியில், பம்மை கூறும் அறிவுரைகளைக் கேட்டு விசயை முதலியவர் தவம் செய்திருந்தனர்.

## 27

# நீர் விளையாட்டு

விசயமா தேவியார் துறந்தது முதல் சீவகனுக்கு மன அமைதி இல்லை. இன்பமான பொழுதுபோக்கு இல்லை. மனைவியர் எண்மருடனும் மனம் குளிரப் பேசுவதில்லை. இன்பங்கள் ஒவ்வொன்றிலும் ஆசையை அகற்றலானான். 'அரச வாழ்க்கையில் அமைதி ஏற்படாது' என்பதை அறிந்தான். 'அரசவாழ்வில் பெறுகின்ற இன்பம் அற்பமே. துறவால் பெறக்கூடியது பேரின்பம். அதனை நாமும் பெற்று மகிழ்வோம்' என்று துணிந்தான். அன்று முதல் அவன் வாழ்க்கை, ஒரு துறவியின் தவ வாழ்க்கையைப் போன்று மாறியது.

'அரசன் துறக்க எண்ணுகின்றான்' என்பதை மந்திரியர் உணர்ந்தனர். மன்னவன் தன்மைக்கு மனம் கலங்கினர். 'இம்மாறுதலுக்குக் காரணம் தாயின் பிரிவே தான்' என்று எண்ணி அதை மாற்ற முயன்றனர். மந்திரியரைப் போலவே மன்னவன் மனைவியரும் மனம் வருந்தியிருந்தனர். 'மன்னவன் மனத்தை இன்பத்தால் மயக்குவோம்' என்று அவன் மனைவியர் மந்திரியருடன் சூழ்ச்சி செய்தனர். மன்னவன் மனத்தை மயக்க நீர் விளையாட்டே தக்க கருவி என்று எண்ணி அதற்கு ஆவனவற்றைச் செய்தனர்.

மாடத்தையுடைய நீரணி வாவியில் நீரை முற்றும் நிரப்பினர். வாசனைச் சாந்தை நீரில் கலந்தனர். பல நிறப் பூக்களை உதிர்த்தனர். மெல்லிய தெப்பங்களை மிதக்க விட்டனர். மன்னவனும் மனைவியரும் போர் செய்தற்கு, மாலை, நீர் வீசு கருவிகள், துருத்தி முதலிய வற்றை அமைத்தனர். வாசனைப் பொடிகளை நிரப்பி வைத்தனர். பின்னர், அரசனிடம் சென்று வணங்கி, "ஐயனே, நீரணி வாவியைப் பார்த்தருள வேண்டும்" என்று மந்திரியர் வேண்டிக்கொண்டனர். மந்திரியர் சூழ்ச்சியை அறியாத மன்னவனாகிய சீவகன் மனைவியருடன் நீரணி வாவிக்குச் சென்று அக்காட்சிகளைக் கண்டான். நீர் விளையாட அவாக் கொண்டு மனைவியரை அழைத்தான். தம் வலையில் மன்னவன் அகப்பட்டதை உணர்ந்து மனைவியர் மகிழ்ந்து நீர் விளையாட்டிற்கு இறங்கினர்.

காந்தருவதத்தை கட்டியங்காரனாகவும் மற்ற மனைவியர் சீவகன் படையினராகவும் நின்று படை வகுத்துப் போர் செய்தனர். நீர் விளையாட்டிற்குரிய கருவிகளை அவரவர் ஏந்திப் பொருதனர். பூமாலைகள் சூடிய தெப்பத்தில் இருதிறத்தாரும் ஏறி நீந்திப் பொருதனர். மூழ்குவதும், எழுவதும், பாய்வதும், நீர் வீசுவதுமாக வாவியில் விளையாடினர். மங்கையரது மோக வலையில் மன்னவன் மதிமிழந்து மயங்கினான். பூமாலைகளை வாள்களாக வீசினர், சதங்கை மாலைகளைப் பாரா வளையமாக எறிந்தனர். பூங்கண்ணிகளைக் கணையமாக மிதக்கவிட்டனர். தொங்கும் மாலைகளைத் தண்டாகச் சிதறினர். காந்தருவ தத்தையின் அங்கங்களில் சீவகன் நீரை வீசினான். அவள் நீர் வீசு கருவியால் தாரை

தாரையாக சிவகன் மீதும் அவனைச் சார்ந்த மனைவியர் மீதும் சொரிந்தாள். அதற்கு எதிர் நிற்க மாட்டாத மகளிர், நீரில் மூழ்கி மறைந்து எழுந்து நீராணி மாடத்தில் ஏறிக்கொண்டனர். சில மகளிர் எதிர்த்துப் பொருதனர். அப்போது காந்தருவதத்தை, சாந்தையும் சுண்ணத்தையும் தூவி, மாலைகளை எறிந்து அவர்களை மூழ்கச் செய்தாள். காந்தருவதத்தையோடு பொரமுடியாத மகளிர், கூந்தலை ஒரு கையிலும் ஆடையை ஒரு கையிலும் ஏந்திச் சிவகனுக்குப் பின்னே மறைந்து நாணி நின்றனர். சிவகன் காந்தருவதத்தையின் வன்மையை அடக்க எண்ணி, நீர் வீசு கருவியால், அவள்மீது நீரை மழை போல் சொரிந்தான். காந்தருவதத்தை இளைப் புற்றதைக் கண்ட மற்ற மகளிர் அவளுக்கு உதவியாக நின்று மாலை, சாந்தம், சுண்ணம் முதலியவற்றால் சிவகனை எதிர்த்தனர்.

சிவகன், மேலும் மிகவன்மையுடன் எல்லா மகளிர் மீதும் தாரை தாரையாக நீரைச் சொரிந்து இளைப்புறச் செய்தான். மகளிரது முகத்திலும், மார்பிலும், கூந்தலிலும் சொரிந்து வருத்தினான். மகளிர் களைப்புற்று உடல் சோர்ந்தனர். சிவகனுக்கு முன் நிற்கமாட்டாமலும் கூறமுடியாமலும் பொருமினர். மார்பு விம்ம, பெருமூச் செறிந்து நீரில் சாய்ந்தனர். அன்னங்களைப் போல் அல்லிப் பூக்களில் சில மகளிர் மறைந்துகொண்டனர். மயில்களைப்போல் கூந்தலைப் போர்த்துக் கவிழ்ந்து நின்றனர் சில மகளிர். சில மகளிர் தாமரைப் பூக்களோடு தம் முகத்தைப் பொருந்த வைத்து நின்றனர். ஆடை இழந்தனர் சில மகளிர். சிலர், பூ மாலைகளையும், பொன்னரி மாலைகளையும் இழந்தனர். மனைவியரின்

தன்மையைக் கண்டு சீவகன் சிரித்து நின்றான். மகளிர் அதற்கு நாணித் தலைகுனிந்து நின்றனர். பின்னர், விரைவாகக் கரையேறி ஆடையாபரணங்களை அணிந்து கொண்டு அனிச்சப் பூவைத் தலையிற் சூடிக்கொண்டனர். கூந்தலுக்கு அகிற் புகையை ஊட்டி உலர்த்தினர். சீவகனும் கரையை அடைந்து ஆடையாபரணங்களை அணிந்து மனைவியருடன் மகிழ்ந்து மாளிகைக்குச் சென்றான்.

* * * *

மனைவியருடன் நீர் விளையாடியமையால் சீவகனுடைய உள்ளம் வேட்கையால் வெம்பியது. மனைவியரது மேனியழகிலே மன்னன் மயங்கினான். மனைவியரோடு இடைவிடாமல் மகிழ்ந்திருக்க நினைவு கொண்டான். மன்னவன் மயக்கம் கண்டு மனைவியர் மகிழ்ந்தனர். முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில் ஆகிய ஆறு காலங்களிலும் மனைவியருடன் அந்தப்புரத்தில் அவ்வக்காலங்களில் நுகர்வனவற்றை நுகர்ந்து மகிழ்ந்திருந்தான். சீவகனும் தேவியரும் மனம் கலந்து மகிழ்ந்து அரச இன்பத்தை அநுபவித்தனர். மனைவியர் எண்மரும் சிலநாட்களில் கருப்பம் தாங்கினர்.

* * * *

ஓர் ஆண்டு சென்றது. காந்தருவதத்தை முதலிய மனைவியர் எண்மருக்கும் புதல்வர் எண்மர் பிறந்தனர். சீவகன் மகிழ்ந்து, புதல்வர்க்குப் பிறந்தநாள் விழாவைக் கொண்டாடினான். இரவலர்க்குப் பொன்மழை சொரிந்தான். கலுழவேகன் முதலிய மாமன்மாருக்கும் மற்றையோருக்கும் தனக்குப் புதல்வர் பிறந்த மகிழ்ச்சியை அறிவித்தான்.

அக்காலில், சங்க வெண்மலையிலிருந்து சுதஞ்சனன் வந்து சேர்ந்தான். 'சீவக சரிதை' என்ற நாடகத்தை ஆடச் செய்து கண்டு மகிழ்ந்தான். சீவகனுடைய புதல்வர் எண்மரையும் பார்த்துக் களித்து விடை பெற்றுத் தன் இருப்பிடம் சென்றான். புதல்வர்களுக்குச் சோதிடன், சாதகத்தைக் கணித்தான். சச்சந்தன், சுதஞ்சணன், கோவிந்தன், கந்துக்கடன் என்பவாது பெயர்களை முதல் நான்கு குமரர்களுக்கும் இட்டான். உலோகபாலன் இயற் பெயராகிய தரணி என்ற பெயரையும் விசயன் என்ற பெயரையும், விசயையின் தந்தை பெயராகிய தத்தன் என்ற பெயரையும், அச்சணந்தியாசிரியன் இயற் பெயராகிய பரதன் என்ற பெயரையும் மற்ற நான்கு குமரர்களுக்கும் இட்டான். குமரர் எண்மரும் வளர்பிறைபோல் வளர்ந்தனர்.

* * * *

அந்தப்புரத்தில் பூவணைமீது அரசனும் தேவியரும் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தனர். பூக்கள் கொய்துவரும் வேலைக்காரி, மல்லிகை மாலை என்பவள் அச்சமயம் அங்கு வந்தாள். சீவகனைக் கண்டு வணங்கி, "ஐயனே, நம், பூஞ்சோலை முழுவதும் மலர்கள் மலர்ந்தன. மனத்திற்கு இன்பத்தை அளிக்கும் மலர்கள். மணமும் அழகும் மலிந்த பூக்கள். பார்ப்பதற்கு இன்பம் அளிப்பன; தொடுதற்கு இன்பம் கொடுப்பன; உயிர்த்தற்கு இன்பம் தருவன; மன்மதன், மலர்களாகிய கையுறை ஏந்தி வந்தாற்போல் விளங்குகிறது. அவற்றைத் தாம் பார்த்தருள வேண்டும்" என்று கூறினாள்.

உடனே சீவகன் சோலையைப் பார்ப்பதற்கு ஆவல் கொண்டு மனைவியருடன் அவ்விடத்தைவிட்டு நீங்கினான்.

ஆடையாபரணங்களை அணிந்து மன்னவனும் தேவியரும் சோலைக்குள் புகுந்தனர். செடி, கொடி, மரம் முதலியவற்றில் பூத்த பூக்களைக் கண் குளிரக் கண்டு உவகையுற்றனர். பூக்களைக் கோதிக் குடைகின்ற குயில்களையும், பூக்கள் தோறும் தேனை உண்டு பறக்கின்ற வண்டுகளையும், உதிர்ந்த பூக்கள்மீது உறங்கும் மயில்களையும் கண்டு மனம் களித்தனர். மரங்களின் இயல்புகளைக் காட்டிக் கூறி மனைவியரை மகிழ்வித்தான் சீவகன். சில மரங்களைக் காட்டி, "நங்கையீர், இம்மரங்கள், முதலாம் தீர்த்தங்கரராகிய ரிஷப தீர்த்தங்கரர் காலத்தில் தாமே தோன்றி தாமே வளர்ந்தவை. இவைபோன்ற மரங்களையும் மற்ற இடங்களையும் சென்று பாருங்கள்" என்று கூறினான். தேவியர் எண்மரும் சோலையிடமெங்கும் சுற்றித் திரிந்தனர். கமுக மரங்களிற் கட்டிய ஊஞ்சலில் இருந்து ஆடி மகிழ்ந்தனர். பூக்களைக் கொய்து விளையாடினர். மலையோடு எதிர் கூவி நகைத்தனர்.

பின்னர், சீவகனை, அவ்விடத்துத் தழுவி மகிழ எண்ணி இனிய பாடல்களைப் பாடி, வீணையை வாசித்தனர். தேவியர் பாடிய கானத்திலும் வீணை ஒலியிலும் மனமயங்கி அவர்களிருக்கும் இடத்தைச் சீவகன் அடைந்தான். தேவியர் சீவகனைத் தழுவி மகிழ்ந்தனர். சீவகன் அவருடன் பலா மரத்தின் கீழ்நிழலில் அமர்ந்து இளைப்பாறியிருந்தான். அப்போது பக்கத்திலுள்ள பலா மரத்தின் கீழ் ஆண் குரங்கு ஒன்றும் பெண் குரங்கு ஒன்றும் உட்கார்ந்திருந்தன. அவற்றுள் ஆண் குரங்கு, வேறொரு பலா மரத்திலுள்ள பெண் குரங்கொன்றைக் கண்டு காதல் கொண்டு அங்கே சென்றது.

அந்தப் பெண் குரங்கை அழைத்து மறைவிடம் சென்று அதனுடன் மகிழ்ந்தது ஆண் குரங்கு. பின்னர், அந்தப் பெண் குரங்கை அனுப்பிவிட்டுத் தனக்குரிய பெண் குரங்கு இருக்குமிடம் வந்தது. ஆண் குரங்கின் செய்கையைக் கண்டமையால் பெண் குரங்கு கோபம் கொண்டது. ஆண் குரங்கைப் பார்த்து விலகி நின்று சில வார்த்தைகள் கூறியது.

"பரத்தையரைச் சேர்ந்த மார்பு குற்றமுடையது. பத்தினி மகளிர், அம் மார்பைத் தீண்டார். நீங்கள், வாவி சென்று நீரில் மூழ்கி வாரும்" என்றது. அம்மொழியைக் கேட்ட ஆண் குரங்கு தன் செய்கைக்கு மனம் வருந்தி, "அன்பே, நீ சொல்லியதை யான் மனத்தாலும் நினைத்ததில்லை. அல்லாமல், உயர்ந்த மலைத் தேனை உண்பவர்கள் காஞ்சிரத்தையும் வேம்பையும் உண்பார்களா? நீயே சொல்வாயாக" என்று கூறியது. அதற்கு மறுமொழி கூறாமல் பெண் குரங்கு ஆண் குரங்கைக் கோபத்துடன் நோக்கியது. கோபத்தால் பெண்ணின் கண்கள் இருட்டில் விளக்கேற்றினாற் போன்று தோன்றியது. பெண் குரங்கின் கோபத்தைக் கண்டு ஆண் குரங்கு அஞ்சியது. பின்னர், பெண் குரங்கை வணங்கிக் கூறியது.

"இன்பமே, நீ இவ்வாறு என்னைப் பார்த்து என்ன செய்வாய்? உன் பார்வையால் என் உயிர் சென்று விடும். இன்னும் சிறிது பொழுதில் அத் தன்மையைக் காண்பாயாக" என்று கூறியது.

உடனே பெண் குரங்கு மனம் இரங்கித் தான் கோபித்ததற்கு வருந்தியது. ஆண் குரங்கை வருத்தம் தீர இரு கைகளாலும் தழுவிக்கொண்டு, "அடியேன்

செய்த துன்பத்தை மறக்க வேண்டும். இனி வருத்தம் நீங்குக" என்று கூறியது. உடனே ஆண் குரங்கு பெண் குரங்கைத் தழுவி மகிழ்ந்தது. தன் குற்றத்தைக் கண்டும் அதைப் பாராட்டாமல் பெண் குரங்கு மனம் இரங்கி அருள் செய்ததற்கு மகிழ்ந்தது. உடனே, அருகில் இருந்த பலா மரத்திலிருந்து ஒரு பழத்தைப் பறித்துக் கீறி குற்றங்களை நீக்கி நல்ல சுளைகளை எடுத்துப் பெண் குரங்கிற்குக் கொடுத்தது. ஆண் குரங்கு ஒவ்வொரு சுளையாகக் கொடுக்கப் பெண் குரங்கு வாங்கித் தின்றுகொண் டிருந்தது. அப்போது, அச் சோலையைக் காக்கும் சிலதன் (ஏவல் செய்பவன்) அந்த இரண்டு குரங்குகளையும் அடித்துத் துரத்தினான். பலாச் சுளைகளைப் போட்டு விட்டு இரண்டு குரங்குகளும் ஓடி விட்டன. சிலதன் சென்று அந்தச் சுளைகளை எடுத்து உண்டான்.

சீவகன் அந்தக் காட்சியைப் பொறுமையுடன் பார்த்திருந்தான். குரங்குகளின் தன்மையையும் சிலதன் தன்மையையும் சீவகன் கண்டு ஆலோசித்தான் மனைவியர் இன்பத்தே மயங்கி யிருந்த தனக்குக் குரங்கு களும் சிலதனும் புத்தி கூறினாற்போன்று எண்ணினான். அஞ்ஞான இருளில் ஞான சூரியன் தோன்றினான். அவன் மனம் பலவாறு எண்ணியது. தன்னைத் தழுவிய அன்புடைய மனைவி பிறனைத் தழுவக் கண்டு வெறுத்த தன்மையை ஒத்து ஆர்வத்தையும் மேல் வருகின்ற மூப்பையும் வெறுத்தான். 'கையிலிருந்த பலாப்பழத்தை இழந்த பெண் குரங்கு, கட்டியங்காரன் போன்றது. கட்டியங்காரனைக் கொன்று அரசை எய்திய என்னைப் போன்றான் சிலதன். இன்னும் இவனைக்

காட்டினும் வன்மையுடையான் ஒருவன் வாங்கி நுகர்தற்குரிய இப்பழத்தை இவன் உண்டு அடையும் இன்பம், இன்றியாள் நுகர்கின்ற போகத்தை ஒக்கும். மெலிந்தவர் செல்வத்தை வலியவர் முறையை கடந்து பெறுகின்ற கலியின் பிறவியைக்கண்டோம். ஆதலால் இச்செல்வத்தை விட்டுத் துறந்து, தவம் செய்து அழிவில்லாத பேரின்பத்தைப் பெறுதலே நல்லது. நல்வினை என்கிற கற்பக மரம் பரிசிலராகிய வண்டுகளுக்கு உண்ணும்படிப் பூத்து, மகளிர் என்கிற, பழங்கள் தாங்கிய கொம்புகளை நன்று, புதல்வர் என்கின்ற மாலைகளைக் கொண்டு விளங்குவது. இத்தகைய கற்பகக் கொம்பு தீவினையாகிய காற்று அடித்தலால் நிலையின்றிச் சாய்ந்து விழுந்து கெட்டுப் போகின்றது. இவ்வாறு இது வீழ்வதன் முன் இல்லற வாழ்க்கை நம்மை விட்டு நீங்குவதாக. வேட்கை என்கின்ற காலால், காமம் என்னும் கள்ளை உண்டு, மோட்சத்தைத் தரும் செய்கை இல்லாமல் இன்பத்தில் மயங்கினேன். எனக்கு இவ்விருள் நீங்கும் படி, கை விளக்காகிய துறவுள்ளத்தைக் காட்டிய குரங்குகளும் சிலதனும் நல்வினையால் தேவராவர்' என்று தனக்குள் கூறிக் கொண்டான். பின்னர், அவ்விடத்தை நீங்கி, மனைவியருடன், பூக்கள் பரப்பிய கட்டிலில் அமர்ந்தான். அரச வாழ்க்கையில் வெறுப்புற்றவனாய் ஆலோசித்திருந்தான்.

அவன் மனம் மாறுபட்டிருப்பதை உணர்ந்த மனைவியர் சீவகனைப் பலவகையாலும் இன்புறுத்தினர். பூக்களை அவன்மேல் எறிந்து நகைத்தனர். பனிநீரைத் தெளித்தும் சந்தனத்தைப் பூசியும் மயக்கினர். புருவங்களை வளைத்துக் கண்களை மாறுபடப் பார்த்துப்

புன்முறுவல் செய்தனர். அங்கங்களால் தீண்டி இன்புறுத்தினர். காமக் குறிப்புகளைக் கருவிகளாகக் கொண்டு மயக்கமுயன்றனர். சீவகன் சித்தம் அவற்றை நோக்காமல் துறத்தற்கு மனம் துணிந்தான். மனைவியரது மாயவலையில் அகப்படாமல் வைராக்கியம் கொண்டான். பின்னர், அவ்விடம் நீங்கி, மனைவியருடன் மாளிகைக்குச் சென்றான்.

# 28

# இரத்தினப்பிரபை உபதேசம்

அருகதேவன் கோயிலுக்குச் சீவகனும் அவன் மனைவியரும் சென்றனர். கோயிலை வலம் வந்து அருகனை வணங்கினர். சீவகன் அருகதேவனை வணங்கித் துதித்து மலர்களால் அருச்சித்தான். அப்போது, ஆகாயத்தில் வந்து அருகன் கோயிலை வலம் செய்த சாரணர் இருவர் கீழே இறங்கி அங்குள்ள அசோக மரத்தின் நிழலில் பளிங்குக் கல்லில் அமர்ந்தனர். சீவகனும் தேவியரும் அவர்களைக் கண்டு வணங்கி வாழ்த்தினர். சாரணர் இருவரும் சீவகனுக்கு ஆசி கூறி, "வேந்தே, அரசாளுதல் உனக்கு இன்பம் அளிக்காதே" என்றனர். தன் மனக் கருத்தை உணர்ந்து அவர்கள் கூறியதற்குச் சீவகன் வியந்தான்; "அடிகளே, பிறவிகளை நீக்கும் வழியறியாதேன்; பல பிறவிகளிலும் செய்த தீவினை யென்னும் இருள் கெடும்படி தவம் செய்து ஞானத்தை அடையுமாறு எனக்கு அருள் செய்ய வேண்டும்" என்று வேண்டினான்.

அதற்குச் சாரணர் மனமிரங்கினர். அவ்விருவருள் மூத்தவனான இரத்தினப் பிரபை என்பவன் சீவகனுக்கு உபதேசம் செய்ய எண்ணினன். சந்திரன் தனது கிரணங்களைப் பாற் கடலில் சொரிவதுபோல் இரத்தினப் பிரபை தருமத்தைச் சீவகனுக்கு உபதேசிக்கலானன்:

"வேந்தே, தவத்தால் பெறுவது மக்கள் உடம்பு. அவ்வுடம்பு தனக்குரிய நூறு வருஷங்களும் நில்லாமல் கருப்பம் முதலாக அழிகின்ற அழிவு - நரகர், விலங்கு, மக்கள், தேவர் என்கின்ற நாற்கதியின் துன்பம் - தருமத்தால் துணியப்படும் பொருள் - அதைத் துணியும் துணிவு - சீலத்தின் நிலை - தானம் - தானத்தாலும் சீலத்தாலும் காட்சியாலும் பெறும் பயன் - மோட்ச லக்ஷணம் முதலியவற்றை முறையே யான் சொல்லுவேன். முதலில் பெறுதற்கருமை என்பதைக்கேள்" என்று கூறலானன். சீவகன் மனைவியருடன் அமர்ந்து கேட்கலானன்:

பெறுதற்கு அருமை

"அரச, இழிவான, பிற யாக்கைகளைப் பெருமல், மக்கள் யாக்கையைப் பெறுதல் அரிது. மக்களுடம்பு பெற்றாலும் நீர் வளம் நிறைந்த நாட்டில் பிறத்தல் அரிது. அவ்வாறு பிறப்பினும், விலங்குகளைக் கொன்று தின்னும் வேட்டுவர், வலைஞர் முதலிய இழிந்த குலத்தில் பிறவாமல் நற்குலத்தில் பிறத்தல் அரிது. அவ்வாறு பிறந்தாலும் அங்கம் குறைவின்றி அழகு மிக்கதொரு உடம்பைப் பெறுதல் அரிது. அவ்விதம் பெறினும் குற்றத்தை தரும் பரசமயங்களைக் கைவிட்டு அருக சமயத்தைத் தழுவி ஒழுகுதல் அரிது.

### நிலையாமை

“இனி நிலையாமையைக் கேள்; மக்களுக்கு விதித்த ஆயுள் முழுவதும் நிலை பெறுதல் அரிது. வெள்ளியும் பொன்னும் சேர்ந்தாற்போல் சுக்கிலமும் இரத்தமும் வயிற்றில் பொருந்தும்; உடனே தோன்றி மறையும் மின்னலையும் கொப்புளத்தையும்போல் அது கெட்டு விடுதலும் உண்டு. அவ்வாறு கெடாமல் வெண்ணெய் போலத் திரண்ட பின்பு அழிதலும் உண்டு. அவ்வாறு கெடாமல், ஆமைபோலும் தன்மையைப் பெற்ற பின்னர் அழிதலும் உண்டு. பிறந்த பின்னர் அழிதலும் உண்டு. பெயரிடும் பொழுதும் இறத்தல் உண்டு. கல்வி கற்கச் செல்கையில் அழிதலும் உண்டு. அவ்வாறின்றிக் கற்ற பின்பு அழிதலும் உண்டு. மகளிரோடு இன்புற்று இருக்கும் காலத்து அழிதலும் உண்டு. புதல்வரைப் பெற்று மகிழும் காலத்தும் அழிவுண்டாகும். அக்காலங்களிலெல்லாம் அழிவில்லையாயினும் முதுமை எய்திய பின் திண்ணமாக அழிவுறும். ஆதலால் இதற்கு வேறான நிலையானபொருளை நீ அறிந்து கொள். அரசனே இம்மக்கட் கதி அல்லாமல், தேவருலகம் சென்று தேவரை வென்ற சக்கரவர்த்திகளும் இவ்வுலகில் நிலைபெறவில்லை.

### நரக கதித்துன்பம்

“இனி, நரக கதித்துன்பத்தைக் கேள். நரகத்தில் நரகர் படும் துன்பத்தை இத்தன்மைய என்று கூற நினைத்தாலும் உள்ளம் நடுங்கும். எதிர் நின்று போர் செய்யாமல் வஞ்சகமாக எளியவரைக் கொன்ற தீயவர், பெருங்காற்றால் பனங்கனிகள் உதிர்வபோல் நரகத்தில்

வீழ்ந்து துன்புறுவர். அவருக்கு உணவு விஷம். விஷத்தை உண்ட பின்பும் தீவினையால் அவர் இறந்து போகாது வருந்துவர். ஐம்பொறிகளையும் அடக்காத தீயவர். சட்டி, வேல், வாள் முதலியன நடப்பட்ட பூமியில் கிடப்பர். தசைகளைத் தின்றவர் எரியும் தீயில் வீழ்ந்து துடித்துக் கிடப்பர். உயிரை வருத்திய மாந்தரை பலவாறு தண்டிப்பர். வைர முட்களில் ஏற்றுவர். கீழே தீயைக் கொளுத்துவர். கழுவில் ஏற்றுவர். அவர் கொன்ற விலங்கு முதலியவற்றின் ஒரு மயிருக்கு, ஒரு தசையாக அவர் உடலை அறுப்பர். உடும்புகளைக் கொன்றவரைச் செந்நாய் கௌவி உதறும். தருமத்தை விட்டுப் புலாலை உண்டவரை, நரகத்துக் காவலர் அழைத்து அவர் வாயில், உருக்கிய செப்புப் பாளத்தைப் புகுத்துவர். அதற்குப் பொறுக்காமல் ஓடுகின்றவரைத் தடுப்பதற்குப் பூமியில் ஊசிகளைப் பதித்திருப்பர். அதில் காலை வைத்து அழுந்தப் பெற்று வலி பொறுக்காமல் கதறுவர். பிறன் மனைவியைத் தழுவியவனை உருக்கிய செப்புப் பிரதிமையைப் பன்முறை தழுவச் செய்வர். விலங்குகளையும் மீன்களையும் தின்றவர்களை தீயில் அழுத்துவர். நரக காவலர் பலரும் தீயவரைப் பிளந்தும், பொரித்தும், குத்தியும் கொல்வர். தீயவர் நீரை விரும்பி வறட்சி கொண்ட நாவுடன் தடாகங்களை நோக்கி ஓடுவர். அத்தடாகம் சீயால் நிறைந்த குழம்பு என்பதைக் கண்டதும் "ஐயோ" என்று கூவி அழுவர். செம்மை உருக்கிய குழம்பிலே அழுத்தப்பெறுவர். செக்கிலிட்டு ஆட்டப் பெறுவர். பொடிப் பொடியாக அரைக்கப் படுவர். இவ்வாறு துன்புறுபவர் யாவர் என்றால் கொலைஞரும், உள்ளம் கொடியவரும், கொடுந்தொழில்

செய்பவரும், நல்வினை, தீவினை, தானம் என்பவற்றிற்குப் பயனில்லை என்பவரும், மறுபிறப்பில்லை என்பவரும், கடவுள் இல்லை என்பவரும் ஆவர்.

விலங்கு கதித்துன்பம்

"நரகம் எப்பொழுதும் தீயின் தன்மை உடையது. நரகர் துன்பமும் விலங்குகளின் துன்பமும் ஒன்றே. உன் பகைவேந்தரது துன்பம், புலி முழக்கத்தைக் கேட்டு நடுங்கும் மான்களின் துன்பம் போன்றது. ஆட்டிற்கு மஞ்சளைப் பூசிப் பூவைச் சூட்டி அறுத்துக் கொன்று அதன் இரத்தத்தைத் தெளித்து, "தேவர்களே, உண்ணுங்கள்" என்று கூறும் இவ்வுலகத்தாரின் கொடுமை நரகத்தைக் காட்டிலும் நான்கு மடங்கு கொடியது. உடும்பு, வரால், வாளை முதலியவற்றை அறுக்கையில் அழுத தீவினை, யாரிடம் செல்லும்? அறுப்பவரையும், ஏவினவரையும் அடையும். தீவினை வருத்துதலால் எத்தகைய காவல் உள்ளவராயினும் வருத்தப் பெறுவர். முழு மூடர்கள், எருதுகளை ஏரில் பூட்டித் தாற்றுக் கோலால் குத்தி ஓட்டி உழுவர். அவ்வெருது எழுந்து நடக்க முடியாமல் கீழே வீழ்ந்து இறக்கும்.

வண்டியிழுத்துச் செல்லும் எருதுகள், வண்டி, நீரில் அழுந்தினால் தம் மூக்கை நிலத்தில் ஊன்றி முழந்தாளிட்டு இழுத்துப் பின்னர் வலிகெட்டு அங்கம் அழுகி இறக்கும். பாகர்களின் துன்பத்தால் சில யானைகள் இறக்கும். சிங்கத்தால் சில யானைகள் இறக்கும். தீயினால் வளைக்கப்பட்டுச் சில விலங்குகள் இறக்கும். உயிருள்ள சங்குகளை வளைகள் செய்வதற்கு மாந்தர் கொல்வர். முத்துக்கள் எடுப்பதற்குச் சிப்பிகளைக் கொல்வர். மயிர்க்காகக் கவரி

மானைக் கொல்வர். பரசமயத்தார் யானையின் தோலைப் போர்த்துக் கேடுற்றார். நன்மையைத் தருமென்றெண்ணி வேள்விகளிலும், விருந்திலும் விலங்குகளைக் கொன்றனர். மகளிர் பலரும், பேசவல்ல கிளி, நாகணவாய்ப் பறவை முதலியவற்றைக் கூட்டில் அடைத்து வருத்துவர். அவை பெரும் பாவம். முனிவரை இகழ்பவரும், பிறர்க்கு இட்டு உண்ணுதவரும், பரத்தையரும் விலங்காய்ப் பிறப்பர்.

மக்கட்கதித் துன்பம்

"இனி மக்கட்கதித் துன்பத்தைக் கேள். இளைஞர் தமது மார்பில் வாசனைப் பொருளைப் பூசித் தம் அழகைக் கண்ணுடியில் பார்ப்பர். தன் அழகு மிகுதியைக் கண்டு மகிழ்வர். இளமைச் செவ்வியில் இள நங்கையரைப் புணரும் இளைஞரது துன்பத்தை என்னென்று சொல்வேன். புழுவும் புனலும் மலமும் நாற்றமும் நிறைந்த வயிற்றிலிருந்து தாம் தோன்றிய தன்மையை நினையாமலன்றோ தம்மை அவர் வியக்கின்றார். மகளிர் மீது கொண்ட மயக்கத்தால் இளைஞர் அவர் பொருட்டு மார்பில் வேலையும் ஏற்றுக்கொள்வர். மகளிர்க்குப் பொருள் கொடுத்தற்காகக் களவு செய்து கழுவேற்றப்படுவர். யானையின் காலால் இடறப்பெறுவர். அத்துன்பத்தை நீ எண்ணிப் பார். கடலில் கப்பல் கவிழும் காலத்து மக்கள்படும் துன்பம், நரகத்தைக் காட்டிலும் கொடிது. உன் பகைவர் நாட்டில் குடியிருக்கும் செல்வரைப் பார்த்து, 'நீர் தேடிய பொருளை அரசனுக்குத் தாருங்கள்' என்று சொல்ல, அவர் தாராவிடின், பலவாறு தண்டிக்கப்படுவர். கையில் விலங்கிடப்பெறுவர். சேற்றில் கிடத்தப் பெறுவர். முழங்கைகள் தேய்க்கப் பெறுவர். உடம்பென்னும் சோலையில்

சேர்ந்த வியாதி என்னும் தீ, அழுகென்னும் பூவாடும்படி, அச்சோலையைச் சுட்டுக் கொளுத்திவிட்டுப் போம். கூனர், குறளர், சித்தர், கோயாளர் முதலியோர் படும் துன்பம் நம்மால் சொல்லும் தகுதியுடைய தன்று. மக்களுக்கு, விரும்பிய பொருளைப் பெறுவிடின் துன்பம். அன்புடையவரைப் பிரிதல் துன்பம். மூப்பு வருதல் துன்பம். கல்வி கற்காமையால் இகழப் பெறுதல் முதலிய பலவும் துன்பம்.

தேவகதித் துன்பம்

"இனி தேவகதித் துன்பத்தைக் கேள்: தேவர் கருவில் பிறவார். அவரது கால்கள் பூமியில் படியா. அவர் சூடிய மாலை வாடா. அவர்கள் மனத்தால் நுகர்வ தல்லாமல் கையால் நுகரார். காமத்தால் வருந்துவர். தம் வாழ்வும் இல்லாது என்று அவர் உணர்ந்து, "இப்பிறவியை வேண்டேம்" என்று அருகனை வணங்குவர். அந்திம காலத்தில், 'உயிர் போவதற்கு இன்னும் பதினைந்து நாட்கள் உள்ளன' என்று அறிவித்தற்கு அவர்கள் கண்கள் இமைக்கும்; மாலை வாடும். தாம் நுகர்ந்த இன்பத்தை வெறுத்துப் பின் வருந்துவர். தாம் தேவராயிருந்தும் பிறதேவர்க்குக் கீழ் ஏவல் செய்து கோபிக்கப் பெறுதல் பெருந் துன்பம். அவர் பூமியில் வந்து மக்களாயும், விலங்குகளாயும் பிறத்தலும் துன்பம். ஆதலால் எத்தகைய உடம்புகளை எடுத்தாலும் அவை துன்பத்தையே தரும்.

நற்காட்சி

"இனி, நற்காட்சியைக் கூறுவேன் கேள். அரசனே, அசோகமரத்தின் கீழ், சிம்மாசனத்தில் தேவர் சிறப்புச் செய்ய விளங்கும் எம்பெருமானாகிய அருகதேவனது.

பாதங்கள் என் தலையிடத்தன. உதயதாம், பிரீதிதாம், கலியாணதாம் என்னும் மூன்று மதில்களை உடையவர் அவரே. சக்கிராதித்தியம், நித்திய விநோதம், சகல பாசனம் என்னும் முக்குடைகளையும் உடையவர் அவரே, நாகம், சுவர்க்கம், பூமி என்னும் மூவுலகும் உடையவர் அவரே. நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் என்னும் இரத்தினத்திரயத்தை உடையவரும் அவரே. சகசாதிசயம், கர்ம க்ஷயாதிசயம், தெய்வீகாதிசயம் என்னும் மூன்று அதிசயங்களையும் உடையவர் அவரே. அங்காகமம், பூர்வாகமம், பகுசுருதியாகமம் என்னும் மூன்று ஆகமங்களையும் உடையவர் அவரே. அனந்த குணங்களை உடையவர். அனந்த ஞானங்களை உடையவர். எல்லாவற்றையும் ஒருங்கே தனக்கு உரிமையாக உடைய அருக தேவனே நம்மை அடிமையாக உடையார். அவர் பாதங்களைத் துதித்துத் தெளியத் தக்க பொருள் களாவன: சீவம், புற்கலம், தருமம், அதருமம், ஆகாசம் என்பன ஐந்து. காலத்துடன் ஆறு. சீவம், அசீவம், புண் ணியம், பாவம், ஆஸ்ரவம், சம்வரை, நிர்ச்சரை, பந்தம், மோக்ஷம் என்னும் ஒன்பது முதலியன. தமக்குரிய செய லின் பயனாகிய இருவினைகளின் பயனை இந்திரனும் குரங் கும் வேறுபாடில்லாமல் நுகர்வர். அதை உணர்ந்து இந்தி ரனை மகிழ்தலும், குரங்கை இகழ்தலும் கூடாது. இரு வினைகளின் தன்மை உணர்ந்தவர் அவ்வாறு செய்யார். அத்தகையவர் அங்காகமம் பன்னிரண்டையும், பூர்வா கமம் பதினான்கையும், பகுசுருதியாகமம் பதினாறினையும் தெளிந்தவராவர். அறிவு மிக்கோரை விரும்புதல், வெறுப்பில்லாமை, மோட்சத்தில் கருத்துக் கொள்ளல், முனிவர்க்குச் செய்யும் பூசைக்கு எதிர் கொள்ளல்,

அழிந்தோரை ஆக்குதல், அறத்தைச் சொல்லுதல், அறிவிலாரைச் சேராதிருத்தல், கோபத்தை நீக்குதல், செருக்கை நீக்குதல், எல்லாச் சமயத்தார்க்கும் இனியராதல் - இத்தன்மையை உடையவர், பரமாகமமாகிய அங்காகமப் பொருளை உணர்ந்தவர். அத்தகையவர் விலங்கிற் சேரார், பெண்ணாய்ப் பிறவார், ஏழு நரகங்களையும் சேரார். இழிந்தவரான பவணர், வியந்தார், ஜ்யோதிஷ்கர் என்னும் தேவரைத் தீண்டார். ஏழு நரகம் என்று அறியாமற் கூறினேன். தீய நரகம் ஆறு மட்டுமே அதற்குக் காரணம். ஒருவகையினர், கல்வியை நிறைந்த போக பூமியில் விலங்காய்ப் பிறப்பர்.

**சீலம்**

"இனி சீலத்தைச் சொல்வேன் கேள்: எண் பத்து நான்கு நூறாயிரம் குண விரதங்களும், பதினெண்ணாயிரம் சீலாசாரமும் பண்ணவரால் காக்கப்பட்டவை. அவற்றன் சீலம் என்று கூறப்படுவன, வீரர் தரிக்கும் கவசம் போன்றவை. உள்ளே மயக்கத்தைத் தரும் ஐம்பொறிகளின் செருக்கையும் புறத்தே துன்பத்தைச் செய்யும் தீவினையையும் குறைப்பன. தலைமயிரைத் தம் கையால் பறித்து வலியைப் பொறுக்கும் சக்தி, பூமியை இரண்டு கூறாக்கி ஒரு கூற்றைத் தாங்கும் வன்மை போன்றது. பிறன் மனைவியைக் கூடும் மாந்தர், பழிக்கப் பெறுவர். ஒருவர் தம்பலத்தை ஒருவர் உமிழ்ந்து நின்று மயங்குவர். இத்தகையவர் ஆண்மையுடையவர் அல்லர். தருமம் உடையவர்க்குச் சீலம் எவை யென்றால் தீய ஒழுக்கத்தைக் கெடுக்க வேண்டும். உணர்வைக் கெடுக்கும் கள், தசை, தேன் முதலியவற்றை நீக்க வேண்டும்.

**தானம்**

"இனி தானத்தைச் சொல்வேன் கேள்: நல்ல நிலத்தில் வித்திய விதைபோல் விளைந்து பின்பு செல்வத்தைப் பெருகக் கொடுப்பது தலையான தானம். பொல்லாத நிலத்தில் வித்திய விதைபோல் கெட்டு, விளைந்து செல்வம் நிலைநில்லாது தோன்றி அழிவது இடையான தானம். ஒரு மயிர்க்கு ஒரு செத்தாகச் செத்தினாலும், வணங்கினாலும், ஊழ்வினை என்று உணர்ந்து அவரை ஆக்கலும் அழித்தலும் நினையாதவர் முனிவர். அவரை எதிர் கொள்ளல், இடம் காட்டல், கால் கழுவல், அருச்சனை செய்தல், அவர் பாதங்களை வணங்கல், இனிய மொழி கூறுதல், மனம், வாக்கு, காயம் தூய்மை உடையவராய் இருத்தல், பாவம் அகலுமாறு வேண்டுதல், உணவளித்தல் என்ற ஒன்பது வகையாய் உபசரித்துத் தானம் செய்தல் வேண்டும். யாவருக்கும் சோற்றை அள்ளிக் கொடுத்தல் இடையான தானம். இவ்வாறல்லாமல், விலங்கைக் கொன்று விருந்திட்டவர்க்கும் விருந்து உண்டவர்க்கும் விளையும் தீவினைப் பயன் இத்தன்மைய என்று கூறுதல் இயலா.

**தானப்பயன்**

"இனி தானப்பயனைக் கூறுவேன் கேள்: மனைவியும் கணவனும் உள்ளம் ஒன்றிப் புண்ணியர்க்குச் செய்யும் தானத்தின் பயன் சிறந்தது. அவ்வாறு தானம் செய்த இருவருமது உயிரும், தீவினை நீங்கிப் போக பூமியில் ஒரு வயிற்றிலே சேரும். பின்னர், பத்து மாதங்கள் கழிந்த பின் ஆண், பெண்ணாகிய இரட்டைக் குழந்தைகளாய்ப் பிறக்கும். பிறர் காக்காமலேயே வளர்ந்து, நாற்பத்தொன்பது நாட்களில் உறப்புக்களும், குணமும், கலையும்

நிறைவு பெறும். இருவரும் தக்க பருவம் அடைவர். மழலை மொழியாளாகிய அப்பெண், பகலும் இரவும் இல்லாத கற்பக மரத்தின் கீழில் சென்று காட்சிகளைக் கண்டு நிற்பாள். சிங்கம் போன்ற இளைஞனும் ஊழ் வினையால், கற்பக மரத்தை அடைந்து அவளைக் காண்பான். இருவர் உள்ளமும் காதலால் கலக்கும். உடனே இருவரும் மனமொன்றிக் கூடுவர். இன்பம் நுகர்ந்த பின் அந் நங்கை ஊடல் கொள்வாள். இளைஞன் அவளை வணங்கி ஊடலைத் தணிப்பான். பின்பு இருவரும் மகிழ்ந்து மாடத்தை அடைவர். காந்தருவமாகிய மணத்தைப் பெற்றும் மகிழ்வர். சோலையிற் சென்றும், வீணை வாசித்தும், நீர் விளையாடியும், இன்பம் நுகர்வர். அவனும் அவளும் தலைமையான தானத்தை முற்பிறவியில் செய்தமையால், தாம் விரும்பியவற்றைக் கற்பகம் அள்ளிக் கொடுப்ப நுகர்ந்து மகிழ்ந்து காலம் கழிப்பர். இடையாய தானம் செய்தவர், கரும பூமியில் பிறந்து செல்வத்தில் மயங்கிக் காலம் கழிப்பர். தீயவர்க்குத் தானம் செய்தவர், தீவுகளில் பிறந்து மக்களுடம்பையும், விலங்கின் முகத்தையும் பெற்றுக் கனியை உண்டு வாழ்வர்.

### சீலப்பயன், காட்சிப்பயன்

"இனி சீலப்பயனையும், காட்சிப் பயனையும் கேள்: சீலத்தை உடையவர் கற்பத்தில் தேவராவர். காட்சிப் பயனை அடைந்தவர் சக்கரவர்த்திகளாவர்.

### மோட்சப்பயன்

"இனி மோட்சப் பயனைக் கேள்: அருகன் அருளிய ஆகமப் பொருளில் மோட்சப் பயன் கூறப்பட்டுள்ளது. உண்மைப் பொருள் இது என உணர்தல் ஞானம்.

உணர்ந்த பொருளின் தன்மை இதுவெனத் தெளிதல் காட்சி. தெளிந்த பொருள் இரண்டையும் மனத்தில் நிலைபெறுத்திக் கொள்ளல் ஒழுக்கம். இம்மூன்று தன்மைகளாகிய தீயால் இருவினைகளாகிய மரம் எரிக்கப் படும். இருவினைகளும் உயிர்க்கிழுக்கை (அத்தமானவை) விட்டு நீங்கினால் மோட்சம் எனப்படும். அதனால் பெறும் பயன், அனந்த ஞானம், அனந்த தரிசனம், அனந்த வீரியம், அனந்த சுகம் என்ற அனந்த சதுஷ்ட யங்கள் தாம். அறிவும், காட்சியும், வீரியமும், இன்பமும், அல்லாதனவும் வந்து சேர்தலால் மோட்ச உலகம் என்பது ஒன்று உண்டு. அது எல்லாராலும் அறியப் பட்டதே" என்று கூறி முடித்தான்.

## 29

# அசோதரனும் அன்னக்குஞ்சும்

இரத்தினப்பிரபையின் தரும உபதேசத்தால் சீவகன் மனம் தூய்மை பெற்றது. ஆசை என்ற வேர் அவன் உள்ளத்திலிருந்து அறுந்தது. மீண்டும் இரத்தினப்பிரபையை நோக்கி, "அடிகளே, எம்முடைய முற்பிறப்பையும் அப்பிறப்பில் நாங்கள் செய்த பாவங்களையும் சொல்லவேண்டும்" என்று சீவகன் கேட்டான். புன்முறுவலுடன் இரத்தினப்பிரபை சொல்லலானான்: "மன்னவ, நாகலோகத்தின் ஒரு பகுதியில் தாதகி என்ற ஒரு நாடு உள்ளது. அந்நாட்டில் பூமிமா திலகம் என்னும் நகரம் உள்ளது. அந்நகருக்கு

மன்னன் பவணமாதேவன் என்பான். அவன் மனைவி பெயர் சயமதி. அவர்களுக்குப் புதல்வன் அசோதரன் என்பவன். அவன் தக்க பருவத்தில் பருவ மங்கையர் எண்மரை மணந்து இன்புற்றிருந்தான். ஒரு நாள் அசோதரன் தன் மனைவியருடன் நீர் விளையாட்டிற்குத் தாமரைத் தடாகத்தை அடைந்தான். மனைவியருடன் நீர் விளையாடினான். பின்னர், தடாகத்தின் நடுவில் உள்ள நீராவி மண்டபத்தில் அமர்ந்து மனைவியருடன் விளையாடிக்கொண்டிருந்தான். அப்போது தடாகத்தில் உள்ள தாமரைப் பூக்களில் விளையாடிக்கொண்டிருந்த அன்னப் பறவைகள், அசோதரனையும் அவன் மனைவியரையும் கண்டு அஞ்சி மேலே பறந்து ஓடின. பறக்க முடியாத அன்னக்குஞ்சுகள் தடாகத்திலுள்ள தாமரைப் பூக்களில் மறைந்துகொண்டன. பொன் தட்டுகளில் வெள்ளிக் கிண்ணங்களை வைத்தாற்போன்று அவை தோன்றின.

அசோதரன் மனைவியர், அன்னக் குஞ்சுகளின் மீது அன்பு கொண்டனர். குஞ்சுகளைப் பிடித்துப்போக வேண்டும் என்று எண்ணியவராய், அசோதரனை நோக்கி, "ஐயனே, அந்தக் குஞ்சுகளில் ஒன்றைப் பிடித்துத் தாரும்" என்று கூறினர். அசோதரன் ஏவலாளனை ஏவி ஒரு குஞ்சைப் பிடித்துவரச் செய்து மனைவியரிடம் கொடுத்தான். மனைவியர் அவ்வன்னக் குஞ்சை அன்புடன் அணைத்து முத்தமிட்டனர். மார்போடு தழுவிக்கொண்டு மகிழ்ந்தனர். பின்னர், அசோதரன் மனைவியருடன் அரண்மனை சென்றான். மனைவியர் அன்னக் குஞ்சையும் எடுத்துச் சென்றனர்.

அசோதரன் மனைவியர், அன்னக் குஞ்சை அன்புடன் பாலமுது ஊட்டிப் பாதுகாத்து வந்தனர். சிறு குஞ்சு என்ற பரிவால், கூட்டில் அடைக்காமல் தம் மார்பில் வைத்து வளர்த்து வந்தனர். ஒரு நாள் அசோதரன் தந்தையாகிய, பவணமாதேவன் என்பவன் மகளிர் மார்பில் வைத்து வளர்க்கும் அன்னக் குஞ்சைக் கண்டு திடுக்கிடுகிறான். உடனே கோபம் கொண்டு மந்திரியரை நோக்கி, "அன்னக் குஞ்சைப் பிடித்தவர் யார்?" என்று கேட்டான். "அசோதரன் பிடித்துத் தந்தான்" என்று அவர் மறுமொழி கூறினர். "அசோதரனை அழைத்து வாருங்கள்" என்று அரசன் கட்டளையிட்டான். உடனே மந்திரியர் சென்று அசோதரனிடம் கூறினர். அசோதரன் விரைந்து சென்று தந்தையை வணங்கி வாய்புதைத்து நின்றான்.

பவணமாதேவன் அவனை நோக்கி, "குமர, அன்னப் பார்ப்பைத் தாய் தந்தையிடமிருந்து பிரித்ததற்கும் அது தான் நினைத்தபடி இயங்காமல் சிறை செய்ததற்கும் தக்க பயனை விளைத்துக் கொண்டாய். பெரிய தீவினை நெஞ்சு வழியாகப் புகுந்து, தம்மைச் செய்த உயிரோடு கூடிக் கொல்லும். கொல்லுகையில் அவ்வுயிர் பெரிதும் துன்புறும். ஆதலால் தீவினைக்குக் காரணமான உயிர்க் கொலையை நீ செய்யாதே. கொல்லாமை யென்பது தருமங்களில் பெரிய தருமம். உண்மை பேசினால் இம்மையிற் புகழும், மறுமையில் மேலுலகத்து இன்பமும் பெறலாம். பொய் கூறினால் இம்மையில் பழியும், மறுமையில் நரகமும் பெறலாம். களவு செய்தவரை மன்னர், யானையால் கொல்லச் செய்வர். நரகத்தில் அரிய துன்பங்களை அடைவர்.

பிறர் மனைவியரைச் சேரின் பெருந்துன்பம் அடைவர். தீய வழியில்லாமல், நல்ல வழியில் தேடிய பொருள் இம்மையில் புகழை விளைக்கும். மறுமையில் சுவர்க்கம் போவதற்கு ஏணி போன்று உதவும். இன்பத்திற்கு இருப்பிடமாயினும் துன்பத்தைத் தருதலால் பரத்தையரின் உறவு கூடாது. வஞ்சனை மிக்க சூதாடுதலையும் கைவிடுதல் வேண்டும். காமமுடையவரும், கோபமுடையவரும், மாலையையும் சந்தனத்தையும் பூசுபவரும், பிச்சையேற்பவரும் நம்மை ஆட்கொள்ளும் கடவுளர் அல்லர். அருகதேவன் ஒருவனே நம் கடவுள். விலங்கையும், பறவையையும் தம் சேர்க்கையினின்றும் பிரித்துச் சிறை செய்தவர், மறுமையில் தாமும் அவ்வாறு பிரிக்கப்பெற்றுச் சிறைப்படுவர். ஆதலால் நீ செய்தது தவறு. அல்லின் தண்டு அறந்தபொழுதும் நூல் அறுபடாமல் தொடர்ந்து நிற்றல்போல் தம் உடம்பு அழிந்த பின்பும், தீவினையாகிய தீ அவ்வுயிரை நீங்காது தொடர்ந்து உயிர் புகுந்த உடம்பில், தானும் புகுந்து அவ்வுயிரை வருத்தும். தருமமுடையவராய் எல்லா உயிர்க்கும் அருள் செய்வாராயின் அந்நல்வினை, அவ்வுயிரைத் தொடர்ந்து வேண்டிய இன்பங்களை அளிக்கும். யாகத்தூணில் கட்டிய ஆமை, தான் கிடந்த தடாகத்தையும், துணை ஆமையையும் நினைப்பதுபோல் அறிவில்லாதவர், காமத்தையும், பொருளையும் நினைந்து உயிர் விடுவர். தவமிக்கவர், பிறந்தால், மகளிரையும் பொருளையும் நீக்கித் தருமத்தைச்செய்ய எண்ணுவர்" என்று கூறினான்.

தந்தையின் மொழி கேட்ட அசோதரன், அஞ்சிப் பதைபதைத்தான். உடல் நடுங்க ஓடினான். ஆடையில்

பற்றிய தீயை அணைப்பவன்போல் கலவரத்துடன் ஓடி, மனைவியரிடமிருந்த அன்னக்குஞ்சை வாங்கித் தாமரை தடாகத்தில் போக விட்டான். மகளிர் வாயிடத்துக் கொண்ட அமுதைப்போல் அவர் வசப்பட்டிருந்த அசோதரன் உண்மை அறிவு பெற்றான். உடம்பி லுண்டாகிய புண்ணை நீக்க முயலும் முயற்சிபோலக் காமத்தை வெறுத்தான். பாவத்திற்கு அஞ்சினான். தான் செய்த தீவினையை எண்ணி உருகினான். உடனே அரசனிடம் சென்று, "தந்தையே, தீவினை நீங்கத் துறந்து தவம் செய்வேன்" என்றான். அரசன் அதற்கு மனம் வருந்தி, "மகனே அரசுரிமையைப் பெற்றுக் காவல் செய்து, பின்னர், புதல்வர்க்குத் தந்து துறப்பாயாக" என்றான். "தந்தையே, சிறையிலிருந்து தப்பிப் போகின்றவனை, சிறையில் அழுத்துகின்றவர் உறவினரோ, பகைவரோ?" என்றான் அசோதரன். விலை மதிப்பிடற்கரிய மணியை கடல் கடலில் நழுவ விட்டவன் போல் மன்னன் மனம் கலங்கினான். "முற்பிறவிகளில் யாம் இவனுக்கு உறவினரல்லோம். இனிப் பிறக்கும் பிறவிகளிலும் இவனுக்கு உறவினராகோம். ஆதலால் உறவென்பது இல்லை" என்று நினைந்து அன்பாகிய கட்டை அரசன் அறுத்தான். அசோதரனின் துறவுக்கு அனுமதி தந்தான். அரசன், பற்றுவிட்டுக் கூறிய சொற்களால் அசோதரன் துறத்தற்குச் சென்றான். அரசிளங்குமரர் பலர் சூழ அசோதரன் தவப்பள்ளி சென்று துறவு பூண்டான். வாலைப் பிடித்து இழுத்த காலத்தும் தான் பற்றிய இடத்தை விடாத உடும்பு போல்வாரை இல்லறத்திலிருந்து நீக்கல் அரிது. அசோதரன், தந்தை கூறிய ஒரு சொல்லால் துறவு

பூண்டு தவம் செய்து முனிவனுயினன். பின்னர், அவன் தந்தையும் தாயும் மனைவியரும் துறவு பூண்டு தவம் செய்து முக்தி பெற்றனர். சீவக, பவணமாதேவனுக்கும் சயமதிக்கும் மகனாய்த் தோன்றி துறவு பூண்டு முனிவனுகிய அசோதரன் நீதான். தவம்செய்த பின்னர் சாசாரன் என்னும் இந்திரனாய் அதன் பின் இப் பிறவியை அடைந்தாய். முற்பிறப்பில் உன் மனைவியராய் இருந்தவரே இம்மனைவியர் எண்மரும். நீ முற்பிறப்பில் அசோதரனாய் அன்னப் பார்ப்பைப் பிரித்தாய். அத் தீவினையால் இப்பிறப்பில் நீயும் பிரிவுற்றாய். அதனைக் காவல் செய்து வைத்த தீவினையால் நீயும் சிறைப் பட்டாய்" என்று இரத்தினப்பிரபை மொழிந்தார்.

சீவகனும், தேவியரும் தம் முற்பிறப்பைக் கேட்டு வியந்தனர். உடனே, சாரணர் இருவரையும் வணங்கி வலம் செய்தனர். அவர்கள் இருவரும் விடைபெற்று ஆகாயத்தே சென்று மறைந்தனர். சீவகனும் மனைவியரும் அரண்மனை சென்றார்கள்.

ஆலோசனை மண்டபத்தில் சீவகன் வீற்றிருந்தான். அருகில் மந்திரியரும் ஏவலாளரும் நின்றனர். "நந்தட்டனை அழைத்து வாருங்கள்" என்றான் ஏவலாளரிடம். ஏவலாளர் சென்று நந்தட்டனிடம் அரசன் மொழியை அறிவித்தனர். நந்தட்டன் விரைவில் சென்று சீவகனை வணங்கி, "வேந்தே, நினைத்த காரியத்தைக் கூறுக; ஏவலின்படி நடப்பேன்" என்றான்.

"நந்தட்ட, நான் துறவுபூண்டு செல்வேன். நாட்டை நீ ஆட்சி செய்ய வேண்டும்" என்றான் சீவகன்.

"நாடாயினும், அதற்கு மேலான சுவர்க்கமாயினும், அதற்கும் மேலான மோட்சமாயினும் அவற்றைப் பெற்று வாழும் வாழ்க்கையை யான் வேண்டேன். நும் பாதங்களை வழிபட்டு வாழ்வதொன்றே யான் வேண்டுவேன். தாங்கள் துறந்தால் யானும் உடன் துறந்து வருவேன்" என்று நந்தட்டன் கூறினான்.

அவன் வார்த்தைகளையும் உறுதியையும் கேட்டு சீவகன் மகிழ்ந்தான். உடனே தன் மூத்த மகனாகிய சச்சந்தனுக்கு முடிசூட்ட எண்ணி, அவனை அழைத்து வருமாறு ஏவினான். அறிவிலும் ஆற்றலிலும் வயதிலும் மூத்தவனான சச்சந்தன் சீவகனுக்கு முன் வந்து வணங்கி நின்றான். அவனை அன்புடன் ஆதனத்தில் இருத்திச் சீவகன் கூறலானான்: "குமர, இந்நாட்டை நீ தருமம் தவறாமல் ஆள்வாயாக. யான் துறவுபூண்டு தவம் செய்யச் செல்கிறேன். நெல்லை அரிந்து முறையாகத் திரட்டி யானைக்கு உண்பித்தால் அதற்கு உணவாகும். வயலும் அழிவுறாது. அவ்வாறில்லையேல், யானை வயலில் மேய்ந்து, உணவும் இல்லாமல், வயலையும் அழித்து விடும். ஆதலால் அரசன், முறை தவறாது வரி கொள்ள வேண்டும். குடிமக்களும் அவன் விரும்பியபடி வரி யளப்பர். உலகத்து மக்களுக்கு நெல்லும் உயிர், நீரும் உயிர். யான் கூறுவது, அவ்விரண்டும் உயிரல்ல என்பேன். மன்னனே அவர்க்குச் சிறந்த உயிர். தேர்ப் பாகன், தேரைச் செலுத்தத் தக்க நிலத்தில் செலுத்தினால் பல நாள் செல்லலாம். செலுத்தும் நிலத்தை அறியாமல் செலுத்தினால், தேர் முறியும்; அவனும் வீழ்வான். அரசர் தன்மையும் அது போலவேதான். பகைவர்மீது கொண்ட கோபத்தை மறைத்திருந்து,

அவர்க்கு நன்மையைச் செய்து அவரறியாமல் தக்க சமயத்தில், தம் பகையை அழித்தல் வேண்டும். புகழ் கெடுதலுக்காக அஞ்சிப் பொய் வார்த்தையைக் கூறாதே. மந்திரியர்க்கு எப்போதும் அருள் புரிதல் வேண்டும். குடிமக்கள் பழி கூறாதபடி பூமியைக் காப்பாயாக'' என்று கூறி அவனுக்கு முடிசூட்டினான்.

அவனுக்குப் பின், இலக்கணையின் புதல்வனை, கோவிந்தனுக்கு அரசுரிமையை அளித்தான். குணமாலையின் மைந்தனாகிய சுதஞ்சனன் என்பவனுக்குப் பட்டம் கட்டி இளவரசாக்கினான். அதன் பின் நந்தட்டன் புதல்வனுக்கு முடி சூட்டினான். மற்ற மைந்தர்களுக்கு இளவரசுப் பட்டம் அளித்து தேர், யானை, குதிரை முதலியவற்றையும் அளித்தான். தன் தோழர் தனக்குச் செய்த உதவிகளை அவர் மைந்தரும் தன் மகனுக்குச் செய்யுமாறு அமைத்தான். பின்னர், தான் துறவுபூண இருப்பதை யாவருக்கும் வெளிப்படக் கூறி அந்தப்புரம் சென்றான்.

அந்தப்புரத்தில் தேவியர், உல்லாசமாகப் பொழுது போக்கி இருந்தனர். சீவகன் அங்கு விரைந்து வருவதைக் கண்டதும் தேவியர் பூங்கட்டிலை விட்டு எழுந்து முன் சென்று அவன் பாதங்களை வணங்கி நின்றனர். சீவகன் அவர்களை அருள் கனியப் பார்த்து, "நங்கையரே, உங்கள் மனம் எல்லையில்லாது பரந்த அளவுடையது. அதை ஒரு நிலைப்படுத்தி யான் கூறும் உறுதிமொழிகளைக் கேளுங்கள்" என்றான். "ஐயனே தங்கள் விருப்பப்படிக் கேட்கின்றோம்" என்றனர் தேவியர்.

"நங்கையரே, வலம்புரிச் சங்கம் கடலில் மட்டுமே தோன்றும். குளத்தில் தோன்றாது. அதுபோல் செல்வம் உடையவர்க்கல்லது மிடியால் (தரித்திரர்) தானமும்

தவமும் செய்தல் இயலாது. மலையில் அல்லது வைரம் தோன்றாது. குளத்திலல்லது குவளை பூவாது. அவ்வாறு தகுதியுடையவரல்லது பகுத்துண்பவர் இல்லை. மகளிர் சிறிதளவேனும் இரவலர்க்குத் தானம் செய்தல் வேண்டும். முனிவர்க்கு உணவளித்தல் துறக்கத்திற்கு வழியாகும். கொலைத்தொழிலை நீக்கி, ஊனும் தேனும் உண்ணுதலைத் தவிர்த்தால் விண்ணும் மண்ணும் அவர் ஏவலின்படி நிற்கும். அவ்விரதங்கள் உங்களுக்கு முன்னரே அமைந்துள்ளன. முற்பிறப்பில் சீலத்தைக் காத்தவர் இப்பிறப்பில் தேவராய்ப் பிறந்து இன்பம் நுகர்வர். முற்பிறப்பில் இரவலர்க்கு இட்டு உண்ணாதவர் இப்பிறப்பில் இரவலராய்த் தோன்றி ஏற்றுண்டு வருந்தி வாழ்வர். ஓட வன்மையுடைய தாயின் வேடன் கையிலிருந்து தப்பி ஓடும் மானும் உண்டு. அவ்வாறு தப்பாத வண்ணம் எமன் நம்மைப் புடைத்து உண்பான். வேடனிடம் அகப்படாமல் கல்வியால் பிழைத்துப் போகும் பறவைகளும் உண்டு. அதுபோலவே நாமும் நல்வினை செய்தால் எமனிடமிருந்து தப்பிப் பிழைக்கலாம். தேய்ந்தும் வளர்ந்தும் தோன்றுகின்ற சந்திரன், தன் உடம்பிற்குச் சாதலும் பிறத்தலும் உண்டு என்பதை உணர்த்துகிறான். நல்வினை செய்யாத உயிர், பிறந்தும் இறந்தும் வருந்துகின்றது. யான் கூறும் தருமத்தைக் கேட்டு மறவாமல் அதைக் காப்பீராக. மருந்தும் மந்திரமும் இல்லையானால் பாம்பைத் தொட்டுப் பிடித்து ஆட்டுவாரும் இல்லை. அதுபோல் நறுமணம் தமக்கு இல்லையானால் மகளிர்ப் பக்கம் மைந்தர் போகார். முன்பு நீங்கள் வாசனைப் பொருளும் வெற்றிலையும் தின்று சிறப்புற்றீர். அது தின்னாமல் என்னுடன் பேசுதல் அரிது; அவ்வாறு பேசின்

சிறக்காது. கபம், வாதம், பித்தம் இரத்தம் முதலிய வற்றால் நிறைந்த இவ்வுடலில் கெட்ட நீர் ஊற்றெழும். சந்தனத்தையும் பூவையும் முன்பு அணிந்தமையால் இவ்வுடம்பு கமழுமாயினும் பின்னும் அணிந்தால் அல்லாமல் உம்மைத் தழுவ முடியாது. பிறந்தபோதே இனி இறந்தோம் என்று தெரிந்து காம மனத்தை ஒரு நிலைப்படுத்தவில்லை. கண்களும் ஒளி கெடும். இமை அழியும். ஆதலால் மூப்பு வருவதன்முன் துறந்து விடுங்கள். செல்வர் இரந்துண்டு வாழ்கின்றதைக் கண்டேன். ஆதலால் எனக்கு அரசாட்சியில் ஆசையில்லை. இனி, யான் துறந்து தவம் செய்வேன்" என்று சீவகன் கூறினான்.

சீவகன் மொழியைக் கேட்டதும் இடியொலி கேட்ட பாம்புகள்போல் தேவியர் மனம் கலங்கினர். சீவகன் மீண்டும் அவர்களை நோக்கி, "நங்கையரே, இதற்கு முன் இல்லறத்தில் விருப்புடையவனாக இருந்தேன். சாரணரிடம் தருமம் கேட்டபின் அதனைக் கைவிட்டேன்" என்று கூறினான். மகளிர் எண்மரும் கண்ணீர் பெருக அழுதனர். வேய்க்குழல் ஏங்கி அழுவதுபோல் வாய் விட்டுப் புலம்பினர். சீவகன் பாதங்களில் வீழ்ந்து புலம்பினர். அவனுடைய திருமேனியின் வனப்பை வருணித்து ஆற்றினர். அவனது பாதம் முதல் முடி வரையில் உள்ள அங்கங்களைப் புகழ்ந்து கூறினர். தாம் அவனிடத்து நுகர்ந்த இன்பத்தை எடுத்துக் கூறி அழுது பிரலாபித்தனர். காந்தருவதத்தை முதல் இலக்கணை இறுதியாக மனைவியர் எண்மரும் ஒருவரை ஒருவர் சுட்டிக் காட்டி அவர்களை, அரசர் கலியாணம் செய்த தன்மையைச் சொல்லி ஆற்றினர். கல்லும் மரமும் கரைந்து இரங்குமாறு கதறினர். முகத்தையும் மார்பையும் புடைத்துக் கொண்டனர். தம் அங்கங்களை

வெறுத்துக் கூறினர். மாலைகளை அறுத்தெறிந்தனர். ஆபரணங்களைக் கழற்றி எறிந்தனர். கூந்தலை அவிழ்த்துச் சிதறச் செய்தனர். சிலம்பையும் கிண்கிணியையும் மேகலையையும் கழற்றி வீசினர். தேவியர் அழுவதையும் அவர்களுடைய அலங்கோலத்தையும் கண்டு மற்ற மகளிரும் 'ஓ' என்று அலறிப் பூசலிட்டுப் புலம்பினர். எல்லாத் திசைகளிலும் நிறைந்த அழுகை ஒலி, கடலின் ஒலிபோல் மிக்கது. அரண்மனை முழுவதும் அழுகை ஒலியைக் கேட்டு யாவரும் சீவகன் துறவை அறிந்தனர். பிரலாபித்தனர்; மங்கள வாத்தியங்கள் ஒலி அவிந்தன; மக்கள் யாவரும், அலங்காரமின்றி அகத்தே நுழைந்தனர்; நகர் முழுவதும் அழுகை இருந்தது. எங்கும் அழுகை, கடல்போல் கலங்கியது நகரம். நகர மக்கள் யாவரும் அரண்மனையைச் சூழ்ந்து ஆரவாரத்துடன் சீவகன் துறவைத் தடுப்பதற்கு நின்றனர். "நாங்களும் துறந்து உடன் வருவோம்" என்று அறிஞர் பலர் ஓலமிட்டனர். மகளிரும் மாந்தரும் கண்ணீர் பெருகக் கலங்கி நின்றனர். நகரம் பொலிவு அழிந்து இருள் சூழ்ந்த காடு போல் தோன்றியது.

## 30

# பெரிய யாத்திரை

சீவகன் தன்னுடைய துறவை யாவருக்கும் வெளிப்படக் கூறினான். பின்னர், தன் மனைவியர் எண்மருக்கும் இறுதியாகச் சில தரும வார்த்தைகளைச் சொல்லலானான்: "நங்கையரே, தவத்தையும், பூமியையும் ஒன்றாக நிறுத்தினால் பூமி, தவத்திற்குச் சிறு கடுகளவும் சமமாக நிற்காது. அதனை அறிந்து நாம் தவம் செய்தால் திருமகள் நம்மை விட்டு நீங்காள்; ஆசையுடன் நின்றால்

திருமகள் நம்மைப் பொருந்தாள். ஆதலால் ஆசையை அகற்றித் தவம் செய்யுங்கள். பயனில்லாப் பொருளை விரும்பாதீர்கள். யான் சொல்லும் பயனுடைய பொருளைக் கேளுங்கள். யானை, யானையையே உணவாகப் பார்க்கும். எலியைப் பார்க்காது. அதுபோல அறிவுடையோர் பேரின்பமாகிய மோட்சத்தையே விரும்புவர். சிற்றின்ப மாகிய செல்வத்தை விரும்பார். அத்தன்மையை நீங்களும் அறிந்து துறவைக் கைக்கொள்ளுங்கள். சுவர்க்கத்துக்கு மேலான மோட்சத்தை விரும்பினால் என்னுடன் துறவு கொள்ள வருவீராக" என்றான்.

## தேவிமார் துறவு

மனைவியர் எண்மரும் அவன் அறவுரையால் அறிவு பெற்றனர். சீவகன் பாதங்களை முடிதோய வணங்கினர். 'ஞானதேவ! நீர் செல்லும் மோட்சத்திற்கு நாங்கள் உடன் வருகிறோம். அங்கு வந்து இன்றுபோல் என்றும் உங்களை வழிபட்டு வணங்குவோம்" என்று கூறிச் சீவகனுடன் துறவு மேற்கொள்ளப் புறப்பட்டனர்.

சீவகன் தன் மனைவியர் எண்மரையும் அழைத்துச் சென்று விசயை தவம் செய்யும் தவப்பள்ளியை அடைந்தான். தாபத மகளிர் நிறைந்த அந்தத் தவப் பள்ளியில் விசயையிடம் மனைவியர் எண்மரையும் துறவுக்கு உரியவர்களாக ஒப்புவித்தான். விசயை மகிழ்ந்து அவர்கள் துறத்தற்கு ஆவனவற்றைச் செய் வித்தாள். தேவியர் எண்மரும் தம் மீது எஞ்சியிருந்த ஆபரணங்களையும் தாமாகவே கழற்றி எறிந்தனர். தாபத மகளிர், வெண்மையான ஆடையை அவர்களுக்கு அளித்து உடுக்கச் செய்தனர். மனம், வாக்குக் காயங்களால் அடங்கி இருந்து, கூந்தலைப் பறித்து எறிந்து பொறுமையுடன்

தவத்தை மேற்கொண்டனர். செம்பொற் கொடிகள் எட்டைப்போல் தேவியர் எண்மரும் தவம் புரிந்தனர்.

சீவகன் பெரிய தானத்தைச் செய்ய எண்ணி இரவலர் யாவருக்கும் இரு கைகளாலும் அள்ளிப் பொன்னைச் சொரிந்தான். அவன் இரு கைகளும் சங்கநிதி இரண்டைப்போல் விளங்கின. "இரப்பவர்க்கு ஈயாத உலோபிகளே பெற்றுக்கொள்க" என்று கூறிப் பதுமநிதி போன்ற கைகளால் யாவருக்கும் பொன்னை அளித்தான். ஆடை முதலியவற்றை அளித்துக் கற்பகம் போன்று விளங்கினான். பின்னர், தவக்கொடியாய் விளங்கிய விசயையை வணங்கிச் சிவிகையில் ஏறினான். அப்போது தேவர் தோன்றி சிவிகையைத் தாங்கிச் சென்றனர். வீணையொலியும் வேய்ங்குழல் ஓசையும் கேட்டன. சங்கமும் முரசமும் அதிர்ந்தன. சீவகன் சிவிகையில் மகிழ்வுடன் சென்றான். இவ்வாறு சிறிது சென்றதும் சேய்மையில் தேவர்களால் நிருமிக்கப்பெற்ற சமவசரணம் என்னும் நிலையம் தோன்றியது. அதை விரைவில் அடைந்தனர் சிவிகை தாங்கிய தேவர்கள். சீவகன் சிவிகையை விட்டு இறங்கிக் கோயிலைத் தொழுதான்.

## சீவகன் துறவு

சமவசரணத்தைத் தொழுத பின் சீவகன் கோயிலுக்குள் சென்றான். நிலையத்தின் நடுவில் அசோக மரத்தின் நிழலில் விளங்கிய தீர்த்தங்கரராகிய சீவர்த்தமான சுவாமிகளை முடிதோய வணங்கித் துதித்தான். சீவகனுக்குச் சீவர்த்தமான சுவாமிகள் மீது தோன்றிய அன்பாலும், அவரது அருளாலும் வினைப்பயன்கள் கெட்டன. பக்தி மிகுதியால் கண்ணீர் ததும்ப நின்றான். மெய்ம்மயிர் சிலிர்த்தன. உடனே

வாமனை வலம் வந்து வணங்கினான். முத்துமாலை, பவள மாலை, மலர்மாலை, பொன்மாலை முதலியன எங்கும் விளங்கின. அருகதேவன் அசோகின் நிழலில் அமர்ந் திருந்தான். தேவர்கள் இருபுறமும் சாமரை வீசி நின்றனர். அசோகமரத்தின் கிளைகளில் மாலைகள் தொங்கின. தளிர்கள் எங்கும் தளிர்த்திருந்தன. "இவ் விடத்தே தருமமாகிய அமுதம் உள்ளது. யாவரும் அருந்துங்கள்" என்று தேவர் ஆரவாரித்தனர். பூமழை யும் பொன் மழையும் சொரிந்தனர். சீவகன் அருகனுடைய பாதங்களைப் புகழ்வதற்கு அருகில் சென்றான். அப் போது அருகிலிருந்த தேவர், சீவர்த்தமானனை நோக்கி, "அடிகளே, இவன் குலம் குருகுலம். இவன் பெயர் சீவகன். இவன் கோத்திரம் காசிப கோத்திரம்" என்று கூறினர். சீவகன் மகிழ்ச்சியுடன் அருகில் சென்று வணங்கி, "அடிகள், இனி யான் துறப்பேன்; அருள் புரிக" என்று வேண்டினான். உடனே சீவர்த்தமானர் சீவகனை அருள் பொழியப் பார்த்து, "குமர உன் மனம் தெளிவு பெற்றுத் துறவில் வீழ்ந்தது. ஆதலால் அது சிறப்புடையதே" என்று அருளினார். அது கேட்ட சீவகன் உள்ளம் குளிர்ந்தான். மீண்டும் அவரை வணங்கி, "தருமமூர்த்தி! யான் பிறவியை அஞ்சினேன். உன் குணத்தை நாள் தோறும் பாடாதவரைக் கடவுள் என்று உலகம் கூறாது. உன் பாத மலர்களைத் தம் தலையில் சூடாதவரது பாதங்களைத் தேவரும் தம் தலையில் சூடார். ஆதலால், உன்னை நான் பாடுகிறேன். உன் அடிமலரை என் தலைமீது சூடிக் கொள்கிறேன்" என்று கூறினான். மூன்றுமுறை வலம் வந்தான். வாய் திறந்து பலவாறு துதித்தான். அவரது அடிகளில் தன்

முடியைச் சூட்டினான். பின்னர், கணதரர் பதினொருவரில் ஒருவராகிய சுதன்மர் என்பவரது கோயிலுக்குச் சென்று அவரை வணங்கி வலம் வந்தான். அக்கோயிலுக்கு அருகிலுள்ள சித்திரச் சோலையை அடைந்து ஆடைகளையும் ஆபரணங்களையும் கழற்றி எறிந்தான். இந்திர நீலத்தைப்போல் இருண்டு விளங்கிய தலைமயிரைப் பறித்தான்.

அப்போது சுதந்தனன் அங்கு வந்து அம்மயிரை வாங்கிச் சென்றான். பாற்கடலில், "நமோ" என்று கூறிப் போட்டுச் சீவகனிடம் மீண்டும் வந்தான். துறவு பூண்ட மகிழ்ச்சியால் அருகனைத் துதித்துக்கொண்டிருந்த சீவகனை வணங்கி வாழ்த்தினான்: "உயிரோடிருப்பவர்கள் சீவகன் கூறும் தரும வார்த்தைகளைக் கேட்டுத் தெளிக; தேவராவீர்கள்" என்று கூறினான். பின்னர், சீவகனிடம் விடைபெற்றுத் தன் நகரம் சேர்ந்தான்.

சீவகன், சமவசரணத்தில் தருமத்தை நிலைநிறுத்தி அருகன் அருள் பெற்றுத் துறந்தமையால், சுருத ஞானங்கள் அவனுக்கு விரைவில் அடைந்தன. நந்தட்டனும் தோழர்களும் துறந்து சீவகனிடம் வந்து சேர்ந்தனர். அவர்களுக்கும் சுருத ஞானம் நிறைந்தது.

நீண்ட நாட்கள் அருகன் கூறிய ஆகமத்தின் வழியே சீவகன் தவம் செய்தான். அருகனை நோக்கித் தவம் செய்யும் முனிவர் குழாத்தில் தானும் ஒருவனானான்.

* * * *

மகத நாட்டின் தலைநகர் இராசமாகிருகம் என்பது. அதற்கு அரசன் சேணிகன் என்பவன். அருகதேவனிடத்து அளவற்ற அன்புடையவன் அவன். ஒரு நாள்

சினாலயம் சென்று அருகனை அருச்சித்து வரப் புறப்பட்டான். பரிவாரங்களுடனும், பூ, தீபம், தூபம் முதலியவற்றுடனும் சினாலயம் சென்றான். அருகனை வணங்கி அருச்சித்தான். பின்னர், கோயிலை வலம் வந்தான். அருகில் விளங்கிய சுதன்மர் கோயிலுக்கும் சென்று வணங்கி, சித்திரச் சோலையையும் வலம் வந்தான். அப்போது முனிவர் குழாத்தில் வீற்றிருக்கும் சீவகனைக் கண்டு வியப்புற்றான். "அருகன் அருளிய ஆகமவழி தவறியதோ, அன்றி இவன்தான் தேவனோ" என்று ஐயுற்றான். உடனே அருகில் இருந்த சுதன்மரை நோக்கி, "அடிகள், தேவன் இங்கு வந்து துறவு பூண்டுள்ளானே; அருகன் அருளிய ஆகமும் தவறியதே" என்றான். சுதன்மர் புன்முறுவலுடன், "மன்னவ, தேவரும், போக பூமியிலுள்ளவரும் சிறிதும் துறவார். அருகன் அருளிய ஆகமவழியில் அன்றி வேறு வழியில் எப்பொருளும் தோன்று" என்று கூறினார். "அடிகளே, இவன் வடிவமே, தேவன் என்பதை உணர்த்தியது; அதனால் யான் ஐயுற்றுச் சொன்னேன்" என்றான் சேணிகன். சுதன்மர் மீண்டும் அவனைப் பார்த்து, "மன்னவ, உலகில் இவனுக்கு ஒப்பானவன் இல்லை. இவனுக்கு அழகும் ஒளியும் தெய்வத்தன்மையால் அமைந்துள்ளன" என்றார். "அடிகளே, இப் புண்ணிய புருஷனின் முற்பிறப்பையும், இவன் செய்த தவத்தையும், இப்பிறப்பில் இங்கே துறந்த தன்மையையும் கூறவேண்டும்" என்றான் சேணிகன்.

சுதன்மர், தமது ஞானத்தால் சீவகன் சரிதத்தைச் சேணிக மன்னனுக்கு மொழிந்தார். பின்னர், சேணிகன் மகிழ்ந்து விடை பெற்றுச் சென்றான்.

## கேவலோற்பத்தி

சீவகன் அவ்விடத்தைவிட்டு முந்திரிகைப் பழங்கள் நிறைந்த சோலையில் சென்று தங்கித் தவம் செய்தான். சீவகனுடைய மனைவியர் எண்மரும், நந்தட்டனும், தோழரும் சீவகன் தவம் செய்யும் இடத்தை அடைந்து, அவன் தவத்திற்கு இடையூறில்லாமல் உதவி செய்து தாமும் தவம் செய்திருந்தனர். சீவகன் உணவு முதலியவற்றை நீக்கி ஓர் ஆண்டு உறுதியான தவத்தைச் செய்தான்.

மெய்ஞ்ஞானமே தேராகவும், உயிரைக் காத்தலே குதிரையாகவும், அறிவே யானையாகவும், சீலமே உடம்பின் கவசமாகவும், மெய்ப் பொருள்களே வாளும் கேடயமுமாகக் கொண்டு இரு வினைகளாகிய பகைவரது மதிலைச் சீவகன் வளைத்தான். அப்போது கருமமாகிய பகைவருடைய சேனை, உறக்கம் என்னும் யானையையும், உணவென்னும் தேரையும், மறவி யென்னும் குதிரையையும், வியாதியாகிய காலாளையும் அணிவகுத்து அசுபபரிணமம் என்னும் வாயிலை விட்டுச் சென்று பொருததால், கருமமாகிய பகைவர் படையில் எழுவர் இறந்தனர். பதினறுவர் வலியின்றிச் சாய்ந்தனர். சன்மார்க்க மதி என்னும் யானை உதைத்தலால் எண்மர் இறந்தனர். அப்போது, நபுஞ்சக வேதமும், ஸ்திரீ வேதமும், அறுவகைத் தொகுப்பும், கிருபையையுடைய சித்தனையாகிய வாயிலில் வீழ்ந்து இறந்தன. மயக்கமாகிய மன்னனுடைய மக்களும், மந்திரியரும் இறந்தனர். அம் மன்னன் புருடவேதமாகிய வில்லில் தாகமோகம் என்ற அம்புகளைத் தொடுத்து எய்தான். சீவகன் அவ் வம்புகளை அசுபம் என்னும் ஈட்டியால் விலக்கி வெறுப்பாகிய வாளால் அவன் உயிரையும் அறுத்தான். பின்னர்,

ஐம்பொறிகளாகிய பகைவரையும், ஐயும், வளியும், பித்தும் என்ற மூவரையும் கொன்றான். குரோதன் முதலிய நால்வரை கிரோதனை என்ற அம்பால் கொன்றான். நித்திரை, பிரசலை என்பவரை விராகம் என்னும் வேலால் அழித்தான். பின்னர் உணர்வோடு, காட்சி, பேறு என்னும் வேறு மன்னர் பொருதனர். சீவகன், சுக்கிலத் தியானம் என்னும் அம்பால் அவர்களைக் கொன்றான்.

கருமப் பகைவர் அழிந்தனர். வேறு பகைவர் இல்லாமையால், மூன்று உலகங்களையும் அலோகத்தை யும் சீவகன் விழுங்கினான். அனந்த ஞானம் முதலிய நான்கு வகை வெற்றிக் கொடிகளை எடுத்து உயர்த்தி அருகனோடு ஒத்த தன்மையை அடைந்தான். அப்போது, தேவர், வித்தியாதரர் முதலியவர் வந்து சீவகனைக் கண்டு வணங்கி வாழ்த்தினர். இந்திரர் பொன்மாரி சொரிந்து வாழ்த்தினர். மன்னவர் மலா மழை பொழிந்து புகழ்ந்தனர். அக்காட்சியைச் சந்திரன் வந்து கண்டு களித்தான். இருபுறமும் கவரிகள் வீச விளங்கிய ஆதனம் சீவகனை அடைந்தது. மூவுலகும் காக்கின்ற முக்குடைகளும் வந்து கவிந்தன. அப்போது தேவரும் வித்தியாதரரும் வந்து வணங்கி, "அறவு நெறிக்கடவுளே, எம் பிறவி அறுவதாக" என்று கூறித் துதித்தனர். பின்னர், தேவியர் எண்மரும் வந்து வணங்கி, "சுதா, அறக்கடவுளே, உன்னால் அறிவு பெற்றோம்" என்று கூறிப் புகழ்ந்தனர். கல்வியின் இயல்பையும் நிலையின் இயல்பையும் சீவகன் கூறக் கேட்ட தேவியர் அவன் பாதங்களை வணங்கி வாழ்த்தினர்; "செல்வ, உன் சேவடிகள் மனிதர்க்கு உயிர் துணையக்

கொடுத்தன. எமது இருதய கமலங்களுக்கு வாசத்தைக் கொடுத்தன. தருமத்திற்கு இருப்பிடத்தை அளித்தன" என்று கூறித் துதித்தனர்.

பரிநிர்வாணம்

தேவியர் எண்மரும் சிவகனை வணங்கி, "தேவ, அஞ்ஞான இருளை அகற்றும் ஞானச் சுடரை எமக்கு அருளிச் செய்யவேண்டும்" என்று கூறினர். சிவகன் அவர்களுக்கு அருள் செய்ய எண்ணிக் கூறலானான்: "இன்பமாகிய பசு நான்கு கதிகளாகிய தொழுவில் தோன்றும். தோன்றிய பின், மன எழுச்சியாகிய புல் கட்டை உண்டு, துன்பமாகிய பாலைச் சுரக்கும். அதனிடத்து ஆர்வத்தை அகற்றி அருகனது பாதங்களைச் சேர்ந்தால் சிவகதி பெறலாம். நீங்கள் உடலை வெறுப்பீராயின், அருகனை வணங்கி வாழ்த்துங்கள். ஒருவன் தன் உயிரைப்போல் பிற உயிரையும் காப்பானாயின், அவன் இன்னுயிர்க்கு இறைவனாய் இன்பமூர்த்தியாய்ப் பொன்னுயிராய்ப் (தேவராய்) பிறந்து மோட்சம் பெறுவான். பிற உயிர்க்குத் துன்பம் செய்தால் நரகத்தில் அழுந்துவான். அவ்வாறு அழுந்தாமல் நீங்கள் தருமத்தைப் பெற்றீர்கள். நீங்கள் தருமம் பெற்ற தன்மை, கடலில் நழுவவிட்ட மணியைத் திரும்பப் பெற்றதைப் போன்றது. இனி உங்கள் உள்ளம் அவாக் கெட்டுத் தூய்மை பெற்றது. தருமத்தைக் கைக் கொண்டு தவம் செய்வீராக" என்று கூறினான்.

தேவியர் அம்மொழியைக் கேட்டு மகிழ்ந்து தொழுதனர். சிவகன் பிறவியை அகற்றிப் போதலை விரும்பி வைகாசி மாதத்துப் பிறைச் சந்திரன் போன்ற பல்லியங்காசனத்தைக்கொண்டு தியானத்தில் அமர்ந்

தான். சேதநீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம் என்னும் நான்கையும் வென்றான். மோட்சத்தைப் பெறும் காலம் அவனுக்கு எய்தியது. அப்போது தேவர், வாத்தியங்கள் முழங்கக் கொடி ஏந்திப் பொன்மாரி சொரிந்தனர். மலர்மாரி பொழிந்தனர். அகிற்புகை புகைத்தனர். பரிநிர்வாணம் என்னும் கலியாணத்தைச் சீவகனுக்குச் செய்து வாழ்த்திச் சென்றனர்.

சீவகன் கேவலஞானப் பெண்ணைத் தழுவி இன்பம் நுகர்ந்தான். மாலை, சந்தனம், குங்குமம், அகிற்புகை, விளக்கு முதலியவற்றைத் தேவர் ஏந்தினர். பிணி, மூப்பு, சாக்காடு, பிறப்பு, பிரிவு என்பவை இல்லாத கேவலமங்கையைச் சீவகன் மணந்து மகிழ்ந்திருந்தான். இணையில்லாத மோட்சமாகிய பேரின்பத்தைப் பெற்றான்.

சீவகன் பேரின்பம் பெற்றதை அறிந்த தேவியர், நின்றும் இருந்தும் பலவாறாகத் தவம் செய்து தம் பிறவிகளை நீத்தனர். பின்னர், அவர்கள், சுவர்க்கத்துக்கு இந்திரராய்த் தோன்றித் தெய்வ மகளிரோடு இன்பம் நுகர்ந்திருந்தனர்.

நந்தட்டனும் தோழரும் நாள்தோறும் முயற்சியுடன் தவம் செய்தனர். பட்டினியுடன் சோடசபாவனைகளைப் பொருந்தினர். உணவு முதலியவற்றை ஒவ்வொன்றாக அகற்றினர். அருகனை எண்ணி அரிய தவம் செய்து முடித்துச் சுவர்க்கத்தில் தேவராய்த் தோன்றித் தெய்வ மகளிருடன் மகிழ்ந்திருந்தனர்.

முற்றிற்று